# THE BOOK WAS DRENCHED

கழக வெளியீடு: ௭௨௫

# சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை

## பகுதி - ௬



புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.
எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

**First Edition:** August, 1954.

# Sangath Thamizh Pulavar Varisai

## Part - VI



*Published by*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

24, EAST CAR STREET, THIRUNELVELI.

Appar Achakam, 2/140, Broadway, Madras - 1.—C. 620.

# பதிப்புரை

அறம் இதுவென உலகுக்கே உணர்த்தியவர் தமிழர், அவரிற் சிறந்தோர் சங்ககாலப் புலவர் பெருமக்கள். இவர்கள் பாக்கள் நெஞ்சை அள்ளும் சிறப்புடையன; அறிவுக்கு நுணுக்கம் வழங்கும் கொடைமையுடையன, மடமையை ஒழிக்கும் வன்மையுடையன; மெல்லிய இனிய மேவரு தகுநவாகச் செப்பம்பெற இலகுந்தன்மையன.

இத்தகைப் புலவர் பெருமக்களுள் நட்டுவன் கண்ணனார் முதல், பெருமருதன் இளநாகனார் ஈறாக எண்பதின்மரும், பேயனார் முதல், வேளாதத்தர் ஈறாக முப்பத்தொன்பதின்மரும் ஆக நூற்றுப்பத்தொன்பதின்மர் வரலாறுகள் இதில் அடங்கியுள்ளன.

இவைகளையும் தம் அஃகி ஆன்ற புலமை வல்லுநர் புலவர் திரு. கா. கோவிந்தன் அவர்கள் வரைந்துதவியுள்ளார்கள். இவைகளை நூலுருவாக்கிச் சங்கத் தமிழ்ப் புலவர் வரிசையில் ஆறாம் தொகுதியாக வெளியிட்டுள்ளோம்.

செந்தமிழ்நாட்டுச் செல்வரும் அறிஞரும் மாணவரும் ஆசிரியர்களும் இதனையும் இதனோடு தொடர்ந்து வரும் ஏனைய சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை நூல்களையும் வாங்கிக் கற்று அறிவும் திருவும் அடைவார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# குட்டுவன் கண்ணனார்

- முதலிய ௪௦ புலவர்கள் -



ஆசிரியர்:

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.

கழக வெளியீடு: எகச

சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை - கரு

# குட்டுவன் கண்ணனார்

## முதலிய அ௰ புலவர்கள்



புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,
எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்.
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

காலம் இடையீடில்லா நுண்பொருள். அது, நல்லன அல்லன யாவும் செய்யவல்லது; நல்லன செய்தது பழையதான சங்ககாலம்; அக்காலந்தந்த நறுமணமலர்கள் பல, அம்மலர்களே சங்ககாலத்திய பொங்கருட் புலமையாளர்.

இவர்கள் செவ்விய சீரிய கூரிய சீருஞ்சொல் வளன் நிறைந்த செந்தமிழ்ச் செய்யுளாம் தீந்தேன் தந்து அறிவுப்பசியாற்றிய அருந்திறலினராவர்.

இப்பெரியார் வரிசைகளுள், **'குட்டுவன் கண்ணனார்'** முதலவராக **'பெருமருதன் இளநாகனார்'** ஈற்றினராக எண்பதின்மராவர். இவர்தம் வரலாறு கூறும் நூலுக்குக் குட்டுவன் கண்ணனார் எனப் பெயர் சூட்டிச் சங்க காலப் புலவர்கள் வரிசையில் ௧௫ ஆவதாக வெளியிட்டுள்ளோம். இதனை அவர்களின் பாவின் நயம் ஆய்வோடு கெழும ஆக்கித்தந்தவர் **திரு. புலவர், கா. கோவிந்தன்** அவர்கள்.

தமிழக நன் மாந்தர்கள் இதனையும், இதனோடு தொடர்ந்து வெளிவரும் ஏனைய சங்கத் தமிழ்ப் புலவர் வரிசை நூல்களையும் வாங்கிக் கற்று அறிவுத்துறையாம் பண்ணைப்பனைத்த பெருஞ் செல்வத்தைப் பெற்று இன்புறுவார்களென நம்புகின்றோம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# உள்ளுறை

# குட்டுவன் கண்ணனார்

## தோற்றுவாய்

தமிழ், உலக மொழிகள் அனைத்தினும், உயர்தனிச் செம்மொழியாம் சிறப்பினைப் பெற்ற சீரிய மொழியாம். மக்கள், தம் உள்ளம் உணர்ந்த ஒரு பொருளைத் தாம் உணர்ந்தவாறே பிறரும் உணரும் வகை உணர்த்த மேற்கொண்ட பலவேறு வழிகளுள், மொழியும் ஒன்றாம்; இன்று மக்கள் வழங்கும் மொழி, இன்றுள்ள நிலையினை, அது தோன்றிய காலத்திலேயே பெற்றுவிடவில்லை, இந் நிலை உறுதற்கு முன்னர் அஃது அடைந்த மாறுதல்கள், அம்மம்ம! சொல்லி முடியாது.

மக்கள் வாழ்வின் பண்பாட்டிற் கேற்பவே, அம் மக்கள் வழங்கும் மொழியும் பண்பாடுற்று விளங்கும்; மக்கள் இன்று பெற்றுள்ள இந்நாகரிக நிலையினை, அவர் தோன்றிய அக்காலத்திலேயே பெற்றிருந்தாரல்லர். உணவைத் தேடவேண்டும், அதை அறுசுவையுடையதாக ஆக்க வேண்டும் என்ற அறிவினை அவர்கள் அன்று பெற்றிருந்தாரல்லர்; கிடைத்த காயையும், கிழங்கையும், கனியையும், காட்டு விலங்குகளின் இறைச்சியையும் தின்று காலங் கழிக்கவே கற்றிருந்தனர்; அழகிய மெல்லிய ஆடைகளை இன்று அணியும் இவர்கள், அன்று ஆடை கட்டவேண்டும் எனும் அறிவுதானும் பெற்றிருந்தாரல்லர்; இன்று அடுக்கிய மாடிகளில் மகிழ்ந்துறையும் மக்கள், அன்று, மரங்களையும், மலைக்குகைகளையுமே தம் வாழ்விடமாக வகுத்துக் கொண்டிருந்தனர்.

இவ்வாறு, இன்றுள்ள நிலைக்கும், அன்றிருந்த நிலைக்கும் இடையே மக்கள் வாழ்வில் எத்தனை வேறுபாடுண்டோ, அத்தனை வேறுபாடு அன்று அவர்கள் வழங்கிய மொழிக்கும், இன்று வழங்கும் மொழிக்கும் இடையில் உண்டாம். அன்று வழங்கிய மொழி, தன் திருந்தா நிலை ஒழிந்து, இன்றுள்ள இச்சீரிய செம்மை நிலையினைப் பெறுதற்கு, அது எத்தனையோ நூற்றாண்டுகளைக் கடந்து வந்துளது. இவ்வாறு பன்னூறாண்டு காலம் கழித்தே பெறலாகும் அப்பண்பாட்டினைத், தமிழ்மொழி, இன்று நேற்றுப் பெற்றுவிடவில்லை. இன்று நாகரிகத்தின் பிறப்பிடமாம் எனப் போற்றப்பெறும் நாட்டினரெல்லாம் காட்டு மிராண்டி வாழ்வினராய் வாழ்ந்த அக்காலத்திலேயே பெற்றுவிட்டது எனின் தமிழ்மொழியின் பழைமையும், பெருமையும்தான் என்னே!

இவ்வாறு சிறப்பளிக்கும் செந்தமிழ்மொழிக்குச் சிறப்பளித்து நிற்கும் நூல்களாய பத்துப்பாட்டு, எட்டுத் தொகை முதலாம் பழந்தமிழ் நூல்களைப் படித்துப் பயனுறல் மக்கள் கடன் என அறிந்து, அந்நூலை ஆக்கித் தந்த ஆசிரியப் பெருமக்களின் வரலாற்றினை விரித்துரைக்கத் தொடங்கிய தொண்டில், இந்நூல் பதினைந்தாவதாகும். இதற்குமுன், கபிலர், பரணர், நக்கீரர், ஔவையார், பெண்பாற்புலவர்கள், உவமையாற் பெயர் பெற்றோர், காவல பாவலர்கள், கிழார்ப்பெயர் பெற்றோர், வணிகரிற் புலவர்கள், மாநகர்ப் புலவர்கள் 1, 2, 3; உறுப்பாலும் சிறப்பாலும் பெயர் பெற்றோர், அதியன் விண்ணத்தனார் என்ற பல்வேறு தலைப்பின்கீழ்ப் பல புலவர்களின் வரலாறு விரித்து உரைக்கப்பட்டுள்ளன; இந்நூற்கண், குட்டுவன் கண்ணனார் முதல்வராக எண்பதின்மர் வரலாறு விளக்க முனைவந்து, முதலில் நிற்கும் அக்குட்டுவன் கண்ணனார் பெயரையே நூற்பெயராக அமைத்துள்ளோம்.

---

## க. குட்டுவன் கண்ணனார்

குட்டுவன் என்பது, சேரர் குடிப்பெயர்களுள் ஒன்று; தம் நாட்டின் ஒரு பகுதியாய குட்ட நாட்டிலும் தம் கோலோச்சு ஆளும் சிறப்பால், சேரர், குட்டுவர் என அழைக்கப் பெறுவர். சேரர் அனைவரும் அப்பெயரால் அழைக்கப் பெறுதலோடு, அப்பெயரைத் தம் பெயரோடு சேர்த்து வழங்கிச் சிறப்புறுதலும் உண்டு. குட்டுவன் கோதை, சேரன் செங்குட்டுவன், பல்யானைச் செல்கெழு குட்டுவன் என்பார் பெயர்களை நோக்குக. குட்டநாடு, செந்தமிழ்நாட்டைச் சேர்ந்த பன்னிரு நாடுகளுள் ஒன்று; மேலைக் கடற்கரையினைச் சார்ந்து நின்ற அந்நாட்டார், தாயைத் தள்ளை எனப் பெயரிட்டு அழைப்பர் என உரையாசிரியர்களால் உணர்கிறோம். அந்நாட்டிற் பிறந்தமையாலோ அன்றி, அந்நாட்டாள உரிமையுற்றோராய சேரர் குடியில் வந்தமையாலோ, அன்றி, அந்நாட்டினின்றும் போந்தார் குடியிற் பிறந்தமையாலோ, கண்ணனார் எனும் இயற்பெயர் உடையராய நம்புலவர், குட்டுவன் கண்ணனார் என அழைக்கப்பெற்றுள்ளார். புலவர் பாடிய பாட்டாகக், குறுந்தொகைக்கண் ஒரு செய்யுள் காணப்படுகிறது.

மக்கள் அணுகலாகா அருவரை உயரிடத்தே தேனிறால் தொங்கும்; அத்தேனிறால் கிழிந்து பாழுறுமாறு உயர்ந்து வளரும் மூங்கில், அம்மூங்கில் அழியுமாறு, அதன் முளையினைத் தின்று உயிர்வாழும் யானை, யானையால் பாழான மூங்கிற் காடுகளுக்கிடையே அமைந்து கிடக்கும் கானவர் தம் சிற்றூர் எனக் காட்டின இயற்கை வளத்தையும், கானவர்க்குரிய அக்காட்டில் பிற நிலத்தார் வந்து வேட்டையாடலும் உண்டு. அவ்வாறு வேட்டம் புரிந்தார், உடன் வரும் நாயும் தாமும் இளைத்த நிலையில், வேற்று நிலத்தினின்றும் வந்து வேட்டம் புரிந்தனரே என அவர்மீது சினம் கொள்ளல் ஒழிந்து, அவரை அணுகி "ஐய! வந்த நும் தொழில் முடிந்துவிட்டதாயினும், நீவிரும் இளைத்துக் காணுகின்றீர்: நும் பின்வரும் நாய்களும் இளைத்துவிட்

டன; பொழுதும் போய்விட்டது; ஆகவே, இன்று நம் ஊர் செல்வதொழிந்து, எம் ஊரில் தங்கிச் செல்வீராக!" என்று வேண்டி நிற்கும் அன்புடையராவர் அக்கானக நாட்டார் எனக் கானவர்தம் வாழ்வியலையும் வனப்புறக் காட்டும் பாட்டொன்று புலவர்க்குப் பெருமையளித்துத் திகழ்கிறது.

"கல்லென் கானத்துக் கடமா ஆட்டி,
எல்லும் எல்லின்று; ஞமலியும் இளைத்தன;
செல்லல்; ஐஇய! உது எம்ஊரே;
ஓங்குவரை அடுக்கத்துத் தீந்தேன் கிழித்த
குவையுடைப் பசுங்கழை தின்ற கயவாய்ப்
பேதை யானை சுவைத்த
கூழை மூங்கில் குவட்டிடை யதுவே." (குறுந்: கஎகூ)

## உ. குட்டுவன் கீரனார்

குட்ட நாட்டோடு தொடர்புடைய புலவர்களுள் கீரனாரும் ஒருவராவர்; "அறவிலை வணிகன் அல்லன்" எனப் பாராட்டப் பெறும் பெருமை வாய்ந்த ஆய் அண்டிரன் இறந்தமை அறிந்து இரங்கிப் பாடிய இவர் பாட்டு ஒன்று புறத்தில் இடம் பெற்றுளது. தமிழக மலைகளுள் தலைசிறந்த பொதியமலையினை இடையிற்கொண்டு, சேரர் குட்ட நாட்டிற்கும், பாண்டியர் தென்பாண்டி நாட்டிற்கும் இடைப்பட்ட ஆய்நாட்டினை ஆண்டோன் ஆய் அண்டிரன்; ஆய், அமர் கடந்து சிறக்கும் ஆண்மையாளன்; தமிழகத்தே புகுந்து பெருந்தொல்லை விளைத்து வந்த கொங்கர் என்ற நாடோடிப் போர்வீரர் கூட்டத்தை மேலைக் கடற்கரை வரை துரத்திச்சென்று வென்ற அவன் வில்லாண்மையினை வியந்து பாராட்டியுள்ளனர் புலவர். நாகம் ஒன்று தனக்கு அளித்த நல்லாடையினை ஆலமர் நீலகண்டனுக்குத் தான் அளித்து மகிழ்ந்தான் என்ற வரலாறு அவன் வள்ளன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டு. தன்பால் வந்து இரப்பார்க்கு, அவர் தகுதி நோக்காதே, களிறும் தேரும் கணக்கின்றி ஈவன் அவன் கொடைப்பொருள்களுள் யானையையே மிகுதியாகக் காணும் புலவர், "ஆய்! நின் நாட்டு யானைகள், ஒருமுறை கருவுற்றால், பத்துக் கன்றுகளைப் பெற்றுத் தருமோ?" என வினவி வியந்து பாராட்டுவர். இவனைப் பாடிய புலவர் பல்லோருள்ளும், இவனைப் பல்லாற்றானும் பாராட்டிப் பாடிய புலவர், உறையூர் ஏணிச்சேரி முடமோசியாராவர், மோசி பாடிய பெருமையுடையவன் ஆய் என்பதை "மோசி பாடிய ஆய்" என அவனுக்குச் சிறப்பளித்துப் பாராட்டினர் பிற புலவர்களும்.

பெருங்கொடையும், அருந்திறலும் உடையானாய ஆய் இறந்துவிட்டானாதல் குறித்து அழுது பாடிய புலவர் நம் குட்டுவன் கீரனார், ஆய் நாட்டிற்கு அண்மை நாடாகிய

குட்ட நாட்டினராய நம் புலவர், பாடி வருவார்க்குப் பரிசிற் பொருள்களாகக் களிறும், தேரும், புரவியும் அளிப்ப தோடு, நாடும், ஊரும் நல்கும் ஆயின் கொடைக் குணத் தைக் காட்டியும், அவன் இறந்ததோடு, அவனைப் பிரிந்து வாழ எண்ணாது அவனோடு உயிர் நீத்த அவன் உரிமை மகளிரும் இறந்ததனையும் கண்டும், ஆய் அளித்தன பெற்று அக மகிழ்ந்து வாழ்ந்த இரவலர், அவன் இறந்தானாகத், தம்மைப் பேணுவாரைப் பெறாராகி, வறுமை வாட்ட, வேற்றுப் புலம் நாடிச்செல்லும் கொடுமையினைக் கண்டும் கண்ணீர்விட்டுக் கசிந்து உருகிப் பாடியுள்ளார்.

"ஆடுநடைப் புரவியும், களிறும், தேரும்,
வாடா யாணர் நாடும், ஊரும்
பாடுநர்க்கு அருகா ஆஅய் அண்டிரன்
கோடேந்து அல்குல் குறுந்தொடி மகளிரொடு
காலன் என்னும் கண்ணிலி உய்ப்ப
மேலோர் உலகம் எய்தினன் . . . . . .
. . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . . .
புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென் சுற்றமொடு கையழிந்து புலவர்,
வாடிய பசியராகிப் பிறர்
நாடுபடு செலவினராயினர் இனியே" (புறம்: ௨௪௰)

# ௩. குடபுலவியனார்

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலங்களுள், குட்ட நாட்டை அடுத்து வழங்கப்பெறும் நாடு குடநாடு, குட நாடு, குடபுலம் எனவும் வழங்கப்பெறும், குடநாட்டிற் குரியராய சேரவேந்தர், "குடவர் கோவே" எனவும், "குடபுலம் காவலர்" எனவும், நூல்களான் அழைக்கப் பெறுதல் காண்க குடபுலம் என வழங்கப்பெறும் குட நாட்டகத்தே பிறந்தமையான, புலவர் குடபுலவியனார் என அழைக்கப்பெற்றுளார், இனி, புலவியன் என்பது இவரது இயற்பெயர்; குடநாட்டவராதலால், குடபுலவிய னார் எனப்பட்டார், புலவியன் என்ற சொல், விரிந்த அறிவுடையவன் எனப் பொருள்படவரும் தமிழ்ச்சொல்; இதைப் புலத்தியன் என்னும் வடசொற்றிரிபு எனல் மடமை எனக் கூறுவாருமுளர், குடபுலத்தே பிறந்தமை யான், குடபுலவியனார் எனப்பட்டார் என இயல்பாகக் கொள்வதைவிடுத்து, மேற்கூறியவாறு கொண்டு இடர்ப் படுவது அத்துணைப் பொருத்தமுடைத்தன்று, குடபுலவிய னார் பாடிய பாக்கள் இரண்டு புறநானூற்றின்கண் இடம் பெற்றுள்ளன, அவை இரண்டும், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் புகழ்பாடவே வந்துள்ளன; அவற்றுள் ஒன்று, அவன் பேராண்மையினைப் பாராட்டுவ தோடு, புலவர்தம் போர்க்களம் பாடவல்ல பெருமை யினையும் புலப்படுத்துகிறது, ஏனையது, அவனுக்கு அரிய ஓர் அறவுரையினை அறிவுறுப்பதோடு, புலவர்தம் உழவின் உயர்வு உணர் அறிவினையும் உணர்த்தி நிற்கிறது

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், சங்ககாலப் பாண்டிய மன்னர்களுள் தலைசிறந்தோனாவன்; புலவர் பலரின் பாராட்டைப்பெற்றவன் இவன், அவ்வாறு பாராட்டப்பெறுதற்குக் காரணமாயது, இவன் தலையாலங் கானம் எனும் இடத்தே பெற்ற பெரு வெற்றியேயாம்; நெடுஞ்செழியன் அரசுகட்டில் ஏறுங்கால் நனிமிக இளைய

னவன்; அக்காலைப் பாண்டிநாடு, பொதியமலை வளமும், கொற்கைத்துறை முத்தும்பெற்று, பெருஞ் செல்வத்தால் சிறப்புற்று விளங்கிற்று; இதைக் கண்ணுற்றனர் அவன் பகைவர்கள்; யானைக்கண்சேய் மாந்தரஞ்சேரல் இரும் பொறையும், ஒருசோழனும், திதியன், எழினி, எருமை யூரன், இருங்கோவேண்மான், பொருநன் ஆய குறுநிலத் தலைவர்களும் இவன் பகைவராயினர். இவர்கள் எழுவரும், "செழியனோ கடிதிளையன், அவனை வென்று பெறும் பொருளோ மிகப்பல" என்று எண்ணி, அனைவரும் ஒன்றுகூடி, செழியனை எதிர்த்தனர், செழியன் இளைஞனே எனினும், ஈடிலாததிறனுடையனாகலின், தனவாயில் வந்தெதிர்த்த அவர்களோடு அரும்போர் ஆற்றினன்; இவன் போர்வன்மைக்கு ஆற்றாது அரசர்கள் தோற்றனர், தோற்றோடும் அவர்களைத் துரத்திச்சென்று, அப்பகை யரசர்களுள் ஒருவனாய சோழனுக்குரிய தஞ்சைமாவட்டத் துத் தலையாலங்கானம் எனும் இடத்தே மடக்கிக் கடும் போரிட்டு, அவர் குடை முரசு எல்லாம் கொண்டு வெற்றி பெற்றான், எதிர்த்த ஏழரசர்களையும் இளமைக்காலத்தி லேயே வென்ற சிறப்பறிந்த புலவரும் பிறரும், அவ்வெற்றிச் சிறப்பினை இவன் பெயரோடு இணைத்துப் பாராட்டினர்.

தலையாலங்கானத்தே, செழியன் ஆற்றிய அருந்திறற் காட்சியைக் கண்டுகளித்தாருள் புலவர் குடபுலவியனாரும் ஒருவர். பகையரசர் எழுவர்க்குரிய பெரும்படை அனைத் தையும், தான் ஒருவனாகவே நின்று அழித்த செழியன் செயல், புலவர் உளத்தே, உயிர்ப்பன்மைகள் அனைத்தை யும், தான் ஒருவனாகவே அழிக்கும் கூற்றுவன் செயலை நினைவூட்டி உவமைகாணத் தூண்டிற்று. வெற்றிபெற்று வீறெய்திநின்ற அவன் மார்பைத்தழுவி மகிழ்ந்தார் புலவர். காட்டு வாழ்க்கையினராய வேட்டுவர், புலி முதலாம் கொடுவிலங்குகளினின்றும் தப்பி வாழ்வதற்குத் துணை புரியும் கல்லடார் எனும் கல்லணைகளே, அக்கொடு விலங்கு களை அகப்படுத்து அழிக்கவும் துணைபுரிதலைப்போன்றதே, தம்போலும் புலவர்க்குத் தழுவ மகிழ்ச்சிதரும் அவன்

மார்பு, அவன் பகைவரைப் பாழ்படுத்தும் கொடுமை யுடையதாதலைக்கண்டு பாராட்டினார் :

“இமிழ்கடல் வளைஇய ஈண்டகன் கிடக்கைத்
தமிழ்தலை மயங்கிய தலையாலங் கானத்து
மன்னுயிர்ப் பன்மையும், கூற்றத்து ஒருமையும்
நின்னொடு தூக்கிய வென்வேற் செழிய!
இரும்புலி வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய
பெருங்கல் அடாரும் போன்மென விரும்பி
முயங்கினென் அல்லனோ யானே ; .. ..
.. .. .. .. . . . ........ ..............
கூற்றுக்கண் ணோடிய வெருவரு பறந்தலை
எழுவர் நல்வலம் கடந்தோய்! நின்
கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே”

(புறம் : கக)

புலவர் குடபுலவியனார், உயிர்களை உய்விக்கும் உழவுத் தொழிலின் உயர்வினையும, அத்தொழில்பற்றிய நுண் ணுணர்வினையும் உணர்ந்த உயர் பேரறிவாளராவர்; நெடுஞ் செழியன் நெஞ்சுகொள்ளுமாறு நீண்ட பாட்டொன்றின் வழியே, உழவினைப்போற்றும் உரவோன், விழுமிய வேந்தனவன் என்ற அறவுரையினை ஆற்றும் திறம் அறிந்து பாராட்டற்குரியதாம்.

அரசர்தம் ஆசைக்கு அளவில்லை என்ப ; அவர்கள், இம்மை மறுமை ஆகிய இரு நிலைகளிலும், இடையிலாப் பேரின்பம் பெற விரும்பும் பேராசை உடையராவர் ; இவ் வாசை நெடுஞ்செழியன்பாலும், நின்று நிலைபெறும் என்பதில் சிறிதும் ஐயம் இல்லை என்பதை உணர்ந்த புலவர், அவனை அணுகி, “அரசே! உலக அரசர் உரனெல் லாம் ஒடுங்க, அவர் அனைவரையும் வென்று, உலகனைத்தை யும் நின் ஒரு குடைக்கீழ்க் கொணர்ந்து ஆளுதல்வேண்டும் ; சிறந்த நல்லிசை நின்பாலே நிற்றல்வேண்டும் ; போகமும், புகழுமபெற்று இம்மையிற் சிறக்கும் நீ, மறுமையிலும் மாறாப் பேரின்பம் உடையையாதல் வேண்டும் ; இஃது

என் பேரவா; இவ்வாசை நினக்கும் உண்டாதல் இயல்பே; இவ்வாசைகள் அனைத்தும் நிறைவேறவேண்டுமேல், நீ மறவாது மேற்கொள்ளவேண்டும் கடமைகள் சில உள; கடல்சூழ்ந்து பரந்துவிளங்கும், இப் பேருலகனைத்தையும் தம் தாளாண்மையாலவென்று, தாம ஒருவராகவே நின்று ஆண்டு, அரிய புகழ்பெற்று வாழ்ந்தார் வழிவந்தவன் நீ என்பதையும், நீரின்கண் மிகத்தாழ்ந்த காஞ்சிமரத்தின் மணம் நிறை மலர்களைக் கவரும வாளை, நுண்ணிய ஆரல், பருத்த வரால், நிறம விளங்கு கெடிறு முதலாம் பலவேறு மீனினங்களை நிறையக்கொண்ட ஆழ்ந்த அகழியினையும், வானளாவும் உயர்ந்த மதிலினையும் உடைத்தாய, வளமும், வன்மையும நிறைந்தது நின்நாடு எனபதையும் யான் அறிவேன். நின்குடிதரு பெருமையும, நின்நாட்டு வளமும், வன்மையுமே, நின் ஆசைகள மூன்றையும ஆக்கித்தந்து விடா, அவைபெற, இவை துணைபுரியவல்லன அல்ல; அதற்குரிய வழி வேறுளது. அதனை யான அறிவேன்; கூறக்கேட்பாயாக; மக்கள உடல், நீர இன்றேல் நிலையா தென்பது உண்மையே ஆயினும், அவ்வுடல உணவின் பிண்டம்—சோற்றாலடித்த சுவர் எனறெல்லாம் வழங்கப் பெறுதலை நோக்கின், அது, நீரைக்காட்டினும், உண வினையே மிகமிக இன்றியமையாது வேண்டி நிற்கிறது என்பது தெளிவாம்; ஆகவே, உணவளித்து உடலைப் பேணுவார், உயிர அளித்து உயர்ந்த உயர்வுடையார் எனப் போற்றப்படுவோராவர், உயிர் எனப போற்றப்படும் உணவு, நிலத்தோடு நீர் கூடிய வழியே உண்டாம, ஆகவே, அந்நிலமும, நீரும ஒன்றுகலந்து ஒருவழி நிறக வகை செய்வார், உணவளிப்பது உறுதியாதலின, உடலையும், உயிரையும் ஒன்று கூட்டிய உயர பேரருளுடையராவர்; உயிர் அளிக்கும், அவ்வுணவு வேண்டிநிற்பார், நீர் குறைவற நிறைந்த நிலங்களை ஆக்குதல வேண்டும, விதைத்த பயிர், விளைந்து பயன்தரத் துணைபுரியும தண்ணீர்க்கு மழையையே எதிர்நோக்கி நிற்கும் நிலங்கள் பயன்தருவன அல்ல; அத்தகைய நிலங்கள் வேலி வேலியாகப் பரந்து கிடப்பினும் பயன் இன்றாம்; அத்தகைய நிலமே நிறைந்த

நாட்டில் வாழ் மக்களும், அந்நாட்டாள் அரசரும் ஆக்கம் பெறாது அழிவர்; நோந்த இடங்களிலெல்லாம் நீர்நிலை பல காணின், நிலம் நிறைய விளைந்து பயன் பல உண்டாம்; அதனால் ஆம் உணவால், உயிர் வாழ்க்கை வளம்பெறும்; ஆகவே, அவ்வாறு நீர்நிலை பல கண்டவரே, இவ்வுலகில் இசைமுதலாயின இறவாது நிற்க நெடிது வாழ்ந்தோராவர் அவை காணாதார், வேறு சிறப்புக்கள் எத்துணை உடையராயினும், அவரெல்லாம், பிறந்தும் பிறவாதாரே யாவர்; அவர் பெயர்தாமும், அறியப்படாது அழியும்; நீர்நிலை காணும் இச்செயல், நிலைத்த புகழைத் தருதலால் இசையும் நிறைந்த நீர்பெறு நிலம், நிறைய விளைதலால், உலகெலாம் ஆளும் அரசவாழ்வும், அந்நீர் உண்மையால் உண்டாம் உணவு, உயிர், உடலோடு கலந்துவாழ உறுதுணை புரிதலால் உண்டாம் அறத்தால் மறுமைப் பேறும் உளவாம் ஆகவே, செழிய! நீ, அம்மூன்றையும் குறைவறப் பெற வேண்டுவையேல், நீர்நிலை பல காணலை விரைந்து மேற்கொள்வாயாக!" என்று அறவுரை கூறி அமைந்தார்:

"முழங்கு முந்நீர் முழுவதும் வளைஇப்
பரந்துபட்ட வியன் ஞாலம்,
தாளின் தந்து, தம்புகழ் நிறீஇ,
ஒருதாம் ஆகிய உரவோர் உம்பல்!
ஒன்றுபத்து அடுக்கிய கோடிகடை இரீஇய
பெருமைத்தாக நின் ஆயுள் தானே;
நீர்த்தாழ்ந்த குறுங்காஞ்சிப்
பூக்கதூஉம் இனவாளை,
நுண் ஆரல், பருவரால்,
குரூஉக் கெடிற்ற குண்டகழி,
வான் உட்கும் வடிநீண் மதில்
மல்லல்மூதூர் வய வேந்தே!
செல்லும் உலகத்துச் செல்வம் வேண்டினும்,
ஞாலம் காவலர் தோள்வலி முருக்கி
ஒருநீ யாகல் வேண்டினும், சிறந்த
நல்லிசை நிறுத்தல் வேண்டினும் மற்றதன்

தகுதி கேள் இனி மிகுதியாள!
நீர்இன்று அமையா யாக்கைக்கு எல்லாம்
உண்டி கொடுத்தோர், உயிர்கொடுத் தோரே,
உண்டி முதற்றே உணவின் பிண்டம்,
உணவு எனப்படுவது நிலத்தொடு நீரே;
நீரும், நிலனும் புணரியோர், ஈண்டு
உடம்பும், உயிரும் படைத்திசி னோரே;
வித்தி வான்நோக்கும் புன்புலம், கண்ணகன்
வைப்பிற்று ஆயினும் நண்ணி ஆளும்
இறைவன் தாட்கு உதவாதே; அதனால்
அடுபோர செழிய! இகழாது, வல்லே
நிலன்நெளி மருங்கின் நீர்நிலை பெருகத்
தட்டோர், அம்ம! இவண் தட்டோரே;
தள்ளாதோர், இவண் தள்ளா தோரே."

(புறம்: கஅ.)

புலவர் குடபுலவியனார், அன்று நெடுஞ்செழியனுக்கு உரைத்த இவ் வறவுரை, இன்று உலகாளும் உயர்ந்தோரும் உணர்ந்து மேற்கொள்ள வேண்டிய அருமையுடையதாதலை அறிந்து அவரைப் போற்றிப் புகழ்வோமாக!

---

## ச. குன்றுகண்பாலியாதனார்

ஆதன் என்ற பெயர், கிள்ளி என்ற பெயர் சோழர்களையும், வழுதி என்ற பெயர் பாண்டியர்களையும் குறிக்க வழங்கப்பெறுதலேபோல், சேர அரசர்களைக் குறிக்க வழங்கும் பெயர்களுள் ஒன்றாம்; இவர் பிறந்த ஊர பாலி; அப் பாலிநகர், குன்றின்கண் அமைந்து கிடந்தமையால், அது குன்றுகண்பாலி என்றே வழங்கப்பெற்றது; மலையாள மாவட்டம் கோழிக்கோட்டுப் பகுதிக்கண், பாலிக்குன்று என இன்று திரிந்து வழங்கப்பெறும் ஊரே அக்குன்று கண்பாலியாம். குன்றுகண்பாலியில் பிறந்து, ஆதன் எனும் இயற்பெயர் பூண்டமையால் புலவர், குன்றுகண் பாலியாதனார் என வழங்கப்பெற்றார்; இக் குன்றுகண் பாலியாதனார் எனும் பெயர் நாள் ஆக ஆகக் குண்டுகண் பாலியாதனார் என ஆகிவிடவே, புலவர் ஆதனார், ஆழ்ந்த கண்களை உடையராவர் எனவும் ஊரார் வழங்கலாயினர்; உண்மை அஃதன்று, சேரர்க்குரிய பாலிநகர்க்கண் பிறந்து, அவர் தம் குடிக்குரிய இயற்பெயர்பூண்ட நம் புலவர், அச்சேரவேந்தருள் ஒருவனையே பாராட்டியிருப்பது, அவர் தம் குடிப்பற்றினை அறியச்செய்கிறது.

பாலியாதனார் பாராட்டிய சேரவேந்தன், சிக்கற் பள்ளித்துஞ்சிய செல்வக்கடுங்கோ வாழியாதனவன்; செல்வக் கடுங்கோவாழியாதன், சேரர் குடியில், இரும்பொறை மரபினருள் வந்தோனவன், அந்துவஞ்சேரல்இரும்பொறை இவன் தந்தை, இவன் மனைவி, இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் மனைவியின் உடன்பிறந்தாளாவள்; தகடூர் எறிந்த பெருஞ்சேரல் இரும்பொறை என்ற வீரமகனைத் தவமகனாகக் கொண்டவன் செல்வக்கடுங்கோ; செல்வக் கடுங்கோ, கொற்றமும், கொடையும் ஒருங்கே வாய்க்கப் பெற்ற ஒப்பற்ற குணக்குன்று; பாரிக்குப்பின், செல்வக் கடுங்கோவே, எனக் கபிலர் கருதினார் எனின், இவன் பெருமையினைக் கூறல் வேண்டாவன்றோ? "ஈத்தது

இரங்கான், ஈத்தொறும் மகிழான்; ஈத்தொறும் மாவள்ளியன்" எனச் சான்றோர் இவனைப் பாராட்டுவர் எனக் கபிலர் பாடியுள்ளார் சேரமான், நகையினும் பொய்யா வாய்மையும், புறஞ்சொற்கேளாப் பெருமையும் உடையவன்; ஒரு முற்றுகையில், இருபெரு வேந்தரை வெல்லும் ஆண்மையும், ஆற்றாது அடிபணியும் பகைவர் பால் அருள்செய்யும ஊராண்மையும ஒருங்கே உடையவன்; இன்னபல தன் புகழெலாம் தோன்றப் பாடிய புலவர் கபிலர்க்குச் சிறுபுறம் என நூறாயிரம் காணம கொடுத்து, நன்றா என்னும் குன்றேறி நின்று தன் கண்ணிற் கண்ட நாடெல்லாம் காட்டிககொடுதத கொடைச்சிறப்புடையவன் செல்வக்கடுங்கோ, தன் வாழ்நாள இறுதிக் காலத்தே, சிக்கற்பளளி எனும் இடததே கிடந்து உயிர் துறநதமை யால், சிக்கற்பள்ளித் துஞ்சிய செல்வக்கடுங்கோ என அழைக்கப்பெற்றுளளான்.

வாழியாதனை வாழ்ததிய நம் புலவர், அவன் பகை வரை வென்று அவர் பணிநது தநத திறையைக் கொணர்ந்து தன் நண்பர்க்கும், பரிசிலர்க்கும் பகிாநதளிக்கும் பெருமை யினையும், வந்து தன்னைப் பாடுவாா தம் இழிநிலை கூறியாது, தன் பெருமைக்கேற்ப அவாக்கும் பெருமபொருளை க்கரும் தகுதியினையும் பாராட்டி, அவன் நாடு நோக்கிவரும் இரவலர், இடையில் வேற்று வேநதரைக் காணின், யாம் செல்வக்கடுங்கோவாற் சிறபபிக்கப்பெறும் இரவலரேம் எனின், அவ்வேந்தர், தம் குடை தாழ்த்திப் பணிந்து போவர் எனக்கூறி அவன் பேராண்மைத் திறததினையும் பாடியுள்ளார். செல்வக்கடுஙகோ இவ்வாறு சிறந்த பல பண்புடையனாதல் அறிந்து பாராட்டிய புலவர், அவன் பொருநையாற்று மணலினும் பல்லாண்டு வாழ்க! அவன் நாட்டைச் சூழஉள்ள நஞ்சைநிலம் அனைத்தினும் விளையும் நெல்லினும் பல்லாண்டு நிலைபெற்று வாழ்க! எனவும் வாழ்த்தி, தம் உள்ள வேட்கையின் உயர்வையும், அவன் நாட்டு நெல்வளச் சிறப்பையும் ஒருங்கே உணரவைத் துள்ளார் :

"பகைப்புல மன்னர் பணிதிறை தந்துநின்
நகைப்புல வாணர் நல்குரவு அகற்றி
மிகப் பொலியர்தன் சேவடியத்தை என்று
யாஅன் இசைப்பின் நனிநன்று எனாப்
பலபிற வாழ்த்த இருந்தோர் தம்கோன் ;"
... .............. .................

"என்பெறுமையின் இழித்து நோக்கான் ;
தன் பெருமையின் தகவு நோக்கிக்
குன்று உறழ்ந்த களிறு என்கோ,
கொய் உளைய மா என்கோ,
மன்று நிறையும் நிரை என்கோ,
மனைக் களமரொடு களம் என்கோ,
ஆங்கவை, கனவென மருளவல்லே, நனவின்
நல்கி யோனே நகைசால் தோன்றல்."

"செல்வக் கடுங்கோ வாழியாதன
என்றநீ, தெவ்வர் உயாகுடை பணித்து இவண்
விடுவா மாதோ."

"ஊழி வாழி பூழியர் பெருமகன்
... .. .. ......... ...... . . .. ..
கல்லென் பொருநை மணலினும், ஆங்கண்
பல்லூர் சுற்றிய கழனி
எல்லாம் விளையும் நெல்லினும் பலவே." (புறம் : ௩அஎ)

தலைவன் ஒருவனுக்குத் தலைவியை நேர்ந்து அவன் குறைமுடிக்கத் துணிந்த தோழி, தலைவிபாற் சென்று, "தோழி! தலைவன் ஊர்ந்துவரும், மடல்மாவை ஈர்த்து வரும் சிறுவர், நும் ஊர யாது என்பார்க்கு உரிய விடை தரமாட்டாது, விழாநிகழ் ஊரேம் யாங்கள் எனக்கூறும் அறிவுத் தெளிவுடையராவா சான்றோர்போல் பலபல கூறும் அவர்கள், உலகியலறியா அறிவின்மை உடைமையால், தலைவியும், தோழியும் வேறுகார் என உணரமாட்டாது, இதோ செல்லும் இததோழி, இத்தலைவன் விரும்பும் தலைவியின் வேறுபட்டாளாவள் என என்னை நோக்கிக்

கூறுகின்றனர்" என அச்சிறுவர்தம் அறியாமை கண்டு நகைப்பாள்போல், தலைவன் மடலூர முன்வந்துளான்; அதை ஊர்ச்சிறுவர்களே அறிந்துள்ளனர்; ஊரில் உள்ளார் பிறர் அறியின் ஏதம் உண்டாம்; அது நிகழாவண்ணம் அவனை ஏற்றுக்கொள்க எனக் கூறிய திறம் அமைந்த பாட்டொன்று புலவர் பாடியதாக நற்றிணைக்கண் காணப் படுகிறது.

"உண்ணா நன்மாப் பண்ணி, எம்முடன்
மறுகுடன் திரிதரும் சிறுகுறு மாக்கள்,
பெரிதும் சான்றோர் மன்ற! விசிபிணி
முழவுக் கண்புலரா விழவுடை யாங்கண
ஊரேம் என்னும் இப்பேரே முறுநா
தாமே ஒப்புரவு அறியின், தேமொழிக்,
கயலேர் உண்கண் குறுமகட்கு
அயலோ ராகல் என்று எம்மொடு படலே."

(நற்: உஉ0)

## ௫. குழற்றத்தனார்

குழற்றத்தனார் எனும் இத்தொகைச்சொல், குழல், தத்தனார் எனப்பிரிந்து, குழலில் இசை எழுப்பிப் பாட வல்ல தத்தனார் எனப் பொருள்தரும். ஆகவே, தத்தனார் என்பது நம் புலவர் பெயர், அவர் குழலிசை வல்லவராவர் எனக் கொள்க.

மணந்து கணவன் மனைபுகுந்த தன் மகள், ஆண்டுக் கணவனுடன் கலந்து நடாத்தும் இல்லற மாண்பினைக் காணச்சென்ற செவிலி, தலைவன், தன் மகள்மாட்டுக் கொண்டுள்ள பேரன்பினையும், அப்பேரன்புண்மையால், அவளை இணைச்சிறுபொழுதும் பிரிந்துவாழ எண்ணா அருமையினையும், அதற்கேற்ப அவன் வாழ்வும் பிரிந்து செல்ல வேண்டாப் பெருவளம் உடையதாதலையும், ஒரோவொருகால், அரச ஆணை அவனைப் பிரியுமாறு செய்ய, அரச ஆணைகடத்தல் அறமன்று என அறிந்து, அவ்வொரோவொருகால் பிரிந்துசெல்லும் அவன், விரைவில் வினை முடித்து, ஆண்டு ஒருபொழுதும் தங்காது வந்துசேரலையும் கண்டு களித்தாள்; தான் ஆங்குக் கண்டுகளித்த அவற்றை நற்றாய்க்கு உரைக்கும் உரை அமைந்த புலவர் பாட்டொன்று குறுந்தொகைக்கண் காணப்படுகிறது:

"சீறூரோளே மடந்தை; வேறூர்
வேந்துவிடு தொழிலொடு செலினும்
சேந்துவரல் அறியாது செம்மல் தேரே."

(குறுந் : உ௪உ)

## ௩௰. குளம்பந்தாயனார்

குளம்பன் என்பார்க்கு மகனாய்ப் பிறந்து, தாயனார் எனும் இயற்பெயர் பூண்டு வாழ்ந்தமையான் புலவர் குளம்பந்தாயனார் என அழைக்கபபெற்றுள்ளார்; காட்டிடை நடந்த கடும் போர்க்களத்தே கணவனை இழந்த காரிகை கண்ணீர் கசிந்து புலமபும முதுபாலைத்துறை தழுவவந்த பாட்டொன்று புலவா பெயரால் புறநானூற்றின்கண் இடம் பெற்றுளது.

களததே கணவன் இறந்தான் என்ற செய்தி அறிந்து ஆண்டுச் சென்று அவன் உடலைக்கண்ட அவன் மனைவி, அவ்வுடலருகே அமர்ந்து, அவ்வுடலை உயிருடைக் கணவனாகவே கருதி, "ஐய! என்னொடு களம புகுந்த போர்வீரர் எலலாம, அமர்மேற் கொள்ளவும், யான் மட்டும இறந்து போனேன், இனி, என்னைப் பிரிநதறியா இபபெண்ணினல்லாள் எங்ஙனம் உயிர்வாழ்வள?" என என்பொருட்டுக் கவலை கொள்ளற்க! வளையணிநது வனபபுற்று விளங்கிய என் கை, வளைகழலப் பெற்றமையால், மூங்கிற் பட்டை கழன்றுக, வெளுததுக் காணபபெறும் மூஙகிலேபோல், வெளுத்து வனபபிழந்ததாக, யானும உயிர்விடுதலல்லது நீயிா இறந்த செய்தியை நின்னூர்க்குக் கொண்டு செல்லேன்" எனக்கூறி அழுதாள் என்ற அப்பாட்டு, கணவனை இழநது வாழ எண்ணாக் கவினுறு மகளிர் மாண்பு புலப்பட வந்துளது.

"என் திறத்து அவலம் கொள்ளல் இனியே;
வல்வாா கணணி இளையர் திளைப்ப
நகாஅல் எனவாட்த மாறே; எழாநெல்
பைங்கழை பொதி களைந்தன்ன விளாப்பின்
வளையில் வறுங்கை ஓசசிக்
கிளையுள் ஒய்வலோ? கூறுநின் உரையே." (புறம்: உருந)

# எ. குறுங்கீரனுர்

குறுமை, சிறுமை எனும் பொருளுடைத்து; உடலின் குறுமை குறித்து, தமிழ் வளர்த்த பெருமுனியும், பாண்டியன் ஒருவனும் முறையே குறுமுனி, குறுவழுதி என வழங்கப்பெற்ருற்போல், கீரனுர் எனும இயற்பெயரினராய இவரும் குறுங்கீரன் என அழைக்கப்பெற்றுளார். இவர் பெயரால் இன்று காணப்படுவது, குறுந்தொகைக்கண் வந்துள்ளதொரு செய்யுளே.

கார்ப்பருவத் தொடக்கத்தே வந்து சேர்வன்; கவலற்க எனக் கூறிச் சென்ருன் தலைவன், அவன் சொல் தேறி ஆற்றியிருந்தாள் தலைவியும்; கார்காலம் தொடங்கலாகிவிட்டது; மழைபெய்தது, முல்லைகொடி தழைத்துப் படர்ந்து அரும்புவிட்டு மலர்ந்து மணமகமழ்ந்தது; அம் மலர்மணம், செம்முல்லை மணத்தொடு கலந்து எங்கும் பரந்தது, கார்காலத்து இக்காட்சியைக் கண்ணுற்ருள தலைவி, கலங்கிற்று அவள உள்ளம, தலைவன் வந்து தலையளி செய்யப்பெருமல தனித்துத் துயர்உறுகின்றேன் எனத் தன் துயர்கருதியன்று அவள் கொண்ட கவலை, கார் காலத்தே வருவன எனக் கூறிச்சென்ற அவர் வந்திலரே; அவர் கூறிய வாய்மொழி பொய்த்துவிட்டதே, அதனுல் அவர்க்கு ஏதம் உண்டாயின் என்னும என்றே கவன்ருள்; தலைவியின் கலக்கமும, அக கலக்கத்திற்காம காரணமும் தோழி உணர்ந்தாள, அவள் கவலைபோகவேண்டுமாயின், தலைவன் உரை பொய்த்திலது என்பதை அவள் உள்ளம் கொள்ளல்வேண்டும ஆனல், இந்நிலையில அது, அதைக் கொள்ளாது, முல்லை மணம கொளளத் தடைபுரியும்; ஆகவே, கார்காலம் தொடங்கிவிட்டது எனக் கூறும் மலர்களின் மணமும், அம்மணம தோன்றத் துணைபுரிந்த மழையும பொய்ம்மையுடைத்தேயன்றித் தலைவர் பொய்யலர் என்பதை அவள் உணரச்செய்தல் வேண்டும் எனக் கொண்டாள். உடனே, "தோழி! தலைவர் பொய் கூருர்

என்பதை நீ அறிவை; அவரோ, கார்காலத் தொடக்கத்தே வருவேன் எனக் கூறிச் சென்றுளார்; அவர் அக்காலத்தே நில்லாது வருவர்; நீ காணும் இக்காட்சிகள், கார்காலத்துக் காட்சிகளாயின், அவர் வந்திருத்தல் வேண்டும். ஆனல் அவர் வந்திலா, அவர் வாராமுன் வந்து தோன்றும் இக் காட்சி, கார்காலத்தது அன்று, கார்காலக் காட்சிபோல் தோன்றும் பொய்க்காட்சியே, பொய்க்காட்சி கண்டு புலம் பல் ஒழிக" எனக் கூறித் தேற்றினள். தோழியின் இக் கூற்றமைந்த பாடலைப்பாடி, தம் கணவர் பொய்யறியா வாய்மொழியராவர் என்னும் உறுதியும், அவர் அவ்வுரை பொய்யின் வருந்தும் உளமும்கொண்ட உயர்ந்த பண் பினராய பண்டைத் தமிழ்ப்பெண்களின் பெருமையினைப் பாராட்டியுள்ளார் புலவர்.

"தண் துளிக்கு ஏற்ற பைங்கொடி முல்லை
முகைதலை திறந்த நாற்றம், புதலிமிசைப்
பூமலி தளவமொடு தேம்கமழ்பு கஞல,
வம்புப் பெய்யுமால் மழையே; வம்பன்று
காரிது பருவமாயின்,
வாரா ரோநம் காத லோரே." (குறுந் · ௩௮௨)

## அ. குன்றம்பூதனர்

ஊர் என்ற பொதுச்சொல்லால் சிறப்பித்து உரைக்கப்படுவது உறையூர் என்ப, "ஊரெனப்படுவது உறையூர்." அதைப்போலவே, தமிழகத்தே குன்றுகள் பல நின்று தோன்றினும், முருகன் உறையும் சிறப்புடைய திருப்பரங்குன்றம் ஒன்றையே, குன்று என்ற பொதுச் சொல்லால் புலவர்கள் வழங்குவர், பூதனர் எனும் இயற் பெயருடைய இப்புலவர், இருபெரும் பரிபாடற் பாக்களால் அக்குன்றினையும், அக்குன்றிலுள்ள சோலை, சுனை, அருவி முதலாயினவற்றையும் பாராட்டியுள்ளமையான் குன்றம் பூதனர் எனக் குறிக்கப்பெற்றுள்ளார்.

புலவர் குன்றம்பூதனர், புலவரைப் போற்றும் புலவராவர். புலவராவார், நான்மறைப் பொருள்களை நன்கு தேர்ந்து, தாம் தேர்ந்த அந் நான்மறைகளின் நற்புகழை நாடறிய நன்கு நாட்டவல்ல நல்லறிவுடையவர்: அவர் தம் நாக்கள், வாய்மொழி அன்றி வேறு பொய்ம்மொழி யறியாப் பெருமை வாய்ந்தனவாம் என்று கூறிப் புலவர் தம் பெருமையினைப் போற்றுமுகத்தான், புலவர்க்காம் இலக்கணம் இஃது எனவும் கூறும் திறம் அறிந்துகோடற்கு உரித்தாம்.

> "நான்மறை விரித்து, நல்லிசை விளக்கும்
> வாய்மொழிப் புலவீர்!" (பரிபாடல்: ௬, ௧௨-௧௩)

குன்றம்பூதனர் பாட்டு, அவர் தமிழின் பெருமை யறிந்து போற்றும் தமிழ் உள்ளம் உடையராவர் என்பதை உணர்த்தி நிற்கிறது "யாம்அறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" எனப் போற்றுதற்குக் காரணமாய் அமைந்தது, தமிழ் அது பொருள் இலக்கணம்பெற்ற பெருமையுடையதே; அப் பொருள் இலக்கணம் காணப்பெறாமையால் கலங்கினன் ஒரு பாண்டியன்; அவன் கலக்கம் போகப், பொருள் இலக்கணம் உரைக்கும் பெருநூல் ஒன்றைத் தாமே ஆக்கித்தந்தார்.

ஆலவாயுறை யெம்மான் என்ற வரலாறு பொருள் இலக்கணப் பெருமையினையும், அதனைக்கொண்டுள்ளமையால் தமிழ் மொழிக்கு உண்டாம சிறப்பினையும எடுத்து உரைத்தல் காண்க. மககள் தம அகப்புற ஒழுக்கங்களை உலகறிய உணர்ததி, அவர் தம வாழ்க்கையினை வளமாக்க உதவும் பொருள் இலக்கணம, பிறமொழிகள் எதுவும அறியாப் பெருமைவாய்நததாம, அதைபபெற்ற பெருமை தமிழ் மொழிக்கு ஒனறே உரிதது, தமிழ்மொழிக்கே உரிய இச் சிறபபினை எடுததோதிப, பொருள்இலக்கணத்தின் மாட்டும், அதையுடைய தமிழ்மொழி மாட்டுமதமக்குளள பற்றினைப் புலவர் குனறமபூதனா தெளிய உணர்த்தியுள்ளாா

" தள்ளாப் பொருள இயல்பின் தண்தமிழ்."
(பரிபாடல்: கூ - உ௫)

அகவொழுக்கம, களவு, கற்பு எனும் இரு பிரிவுகளை உடைதது, அறிவு, உருவு, திருவான் உயாநத ஓா ஆணும், ஒரு பெண்ணும, பிறர் அறியாவாறு கண்டு, காதல் கொண்டு வாழும ஒழுக்கத்தினை உணர்ததுவது களவு; அவ்வாறு களவொழுககம மேற்கொண்ட அவாகள், ஊரார் அறிய மணநது மேற்கொள்ளும இல்லற இயல்பினைக் கூறுவது கற்பு: இவ்விரு வொழுககங்களிற் கற்பினும் களவே சிறபபுடைதது என்று கூறும் புலவர் குனறம் பூதனா, தாம கூறும அக்கூற்றினை நாட்டவல்ல நலல காரணஙகளை நிரலே எடுததுக்கூறியுளளாா.

களவுக காலததுக காதல் ஒழுக்கததே, முன் மெய்யுறு புணாசசி யறியாதாா இருவர், உளளம ஒன்றுபட, இயறகை வழிகூட்ட மெய்யுறுதலால ஆம அவ இன்பத்தினை முதற்கண் பெறுதலால், அவ் இனபம், முன அறியாப் பேரின்பமாம், அககாலததே அவர் பெறும் அவ்வின்பத்தினைப் பின்னா எக்காலததும் பெறுதல இயலாது. கற்புக் காலத்துக் காதல் ஒழுக்கததிற்குப் புலவி இன்றியமையாது வேண்டப்படும், புலவி உண்மையினாலேயே, அக்காலத்து இன்பம் சிறப்படைகிறது. "உப்பமைந்தற்றால்

புலவி;" "துனியும், புலவியும் இல்லாயின், காமம், கனியும், கருக்காயும் அற்று" எனப் பிறரும் கூறுவர். புலவியாவது, தலைவன் தவறினன் எனக்கொண்டு, தலைவி சிறிது வெறுப்புள்ளம் கொள்ள, அவள் கொள்ளும் அச் சினம் நீங்கத் தலைமகன் அவளை வேண்டலும், தலைமகன் வேண்டுவது கண்டு, அவனை அவள் ஏற்றுக் கோடலும் ஆய இந்நிகழ்ச்சியே புலவி எனப்படும். ஆக, புலவி வேண்டும் கற்பொழுக்கத்தே தலைவன் தவற்றொழுக்கம் உடையனாதல்வேண்டும்; மேலும், தலைவன் பரத்தையர் வீடு புகுந்து, ஆங்கேயே இருந்துவிட்டானாகத், தான் பூப் புற்றதை அவனுக்கு உணர்த்த விரும்பிய தலைவி, தோழிக்கு செவ்வணி அணிவித்து அவன்பால் போக்க, அது கண்டு அவன் வந்தானைப் பரத்தை அவ்விருவர் செயலையும் பழிக்கும் பழியையும் உடையது கற்பொழுக்கம்; கற்புக்காலத்தே, ஊடலின் வழித்தோன்றும் புணர்ச்சியே இன்பம் தரும், ஊடல் இன்றேல், ஆங்கு இன்பம் இல்லை; "ஊடுதல் காமத்திற்கு இன்பம்" என்ப. ஆகவே, கற்புக் காலத்து இன்பம், அவ்வூடல் தோன்றற்கேற்ப, தலைவன் பிரிந்து வாழ்தலையும் வேண்டி நிற்கிறது. இக்குறைபாடுகள் எதுவும், களவுக்காலத்து இன்பத்திற்கு இன்று; ஆகவே, கற்பினும் களவே சிறந்தது, புலவர் காட்டும் காரணங்கள், நனி மிகப் பொருந்தி, அவர் நாட்டும் கொள்கையினை உறுதிசெய்தல் காண்க.

"காதற் காமம், காமத்துச் சிறந்தது,
விருப்போர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி,
புலத்தலிற் சிறந்தது கற்பே, அதுதான்
இரத்தலும், ஈதலும் இவை உள்ளீடாப்
பரத்தை யுள்ளதுவே, பண்புறு கழறல்,
தோள்புதிது உண்ட பரத்தையிற் சிவப்புற
நாளணிந் துவக்கும் சுணங்கறை யதுவே,
கேளணங்குற மனைக் கிளந்துள சுணங்கறை;
சுணங்கறைப் பயனும் ஊடலுள்ளதுவே, அதனால்
அகறல் அறியா அணியிழை நல்லார்
இகறலைக் கொண்டு துனிக்கும் தவறிலர்."

(பரிபாடல்: க: கச - உச)

"ஆண்டவன் அடிபணிதலால் உண்டாம் இன்பமே, பேரின்பமாம்; தாம் வாழும் தம் ஊர் அடைந்தார், இன்னலின் நீங்கி, ஈடிலாப் பேரின்பம் உறுவர் என்ப; நின் அடியுறுதலால உண்டாம இன்பம், தம ஊர் அடைந்தார் உறும இன்பமே போன்றுளது எமக்கு; அததகைய பேரின்பம, எமக்கே யன்றி, எம சுற்றத்தினர்க்கும உண்டாகுமாக! அவ்வாறு, யாமும், எம சுற்றமும, நின் அடிக்கீழ் வாழும் அவவாழ்வும, அவ்வாழ்வால் உண்டாம் பயனும பேரின்பமும், நாளதொறும், நாளதொறும நனி மிகச சிறந்து எமககு வாய்க்குமாக!" எனப புலவர் முருகனை நோக்கி வேண்டும் அவ்வேண்டுகோள, புலவர் தம், இறையடியடையும பெருவிருப்பினைப் புலபபடுத்துகிறது.

"செல்வ! நின் அடியுறை
உரிதினின் உறைபதிச சேரா தாஙகுப்
பிரியாதிருக்க எம்சுற்ற மோடுடனே."

"வாழத்தினேம், பரவுதும், தாழ்த்துத தலைநினையா,
நயததலிற் சிறந்த எம்அடியுறை
பயத்தலிற் சிறகக நாடொறும் பொலிந்தே."

(பரிபாடல்: கஅ: நிச - நிகூ; கூ: அஙு - அறு)

பரங்குன்றக் காட்சிகளைப் பாராட்டிப் பாடும புலவர் பூதனார், ஒளிகாலும மணிபோலும் புள்ளிகளையுடைய மயிலொன்று, தன அழகிய தோகையினை விரித்து ஆடி நிற்பதைக் கண்டு மகிழ்நது மயங்கி நின்றான் ஒரு கானவன்; அவனை அந்நிலையிற் கண்டாள் அவன் மனைவி, இவன், என்னினும, இமமயிலையே பெரிதும காதலிககின்றான்; என் அழகினும, இதன் அழகையே பெரிதும பாராட்டுகின்றான் எனக்கொண்டு சினநதாள; அவனை அடைநது, "எம்மை இகழ்ந்து, இதனைப் பாராட்டுவதனை யான் உணர்நதேன்; நின் உள்ளத்தே நினைப்பது யாது?" என வெகுண்டு வினவி நின்றாள்; அவ்வாறு கூறி ஊடுவாளை நோக்கி, "காதலாய்! நின்சாயல், இம்மயிலால் கொள்

ளற்கு அரிது; அது அரிது என்பதைத் தன் மகிழ்ச்சியால் மறந்த இமமயில், அதைக் களவு கொள்ள எண்ணி அதைப் பெறமாட்டாமையால வருந்தும் இம்மயிலின் வருத்தத்தினை எண்ணியிருந்தேனல்லது, வேறு எண்ணிலேனாகவும், நீ சினப்பது ஏனோ?" எனககூறி அவள் சினம் போக்கினான், என்ற ஓர் அழகிய காட்சியினைக் காட்டி மகிழ்விக்கும் திறம் பாராட்டற்குரியதாம்

"ஒள்ளொளி மணிப்பொறி ஆல்மஞ்ஞை நோக்கித்தன்
உள்ளத்து நினைப்பானைக கண்டனள் திருநுதலும்
'உள்ளியது உணர்ந்தேன், அஃது உரை, இனி,நீ எம்மை
எள்ளுதல் மறைத்தல் ஓம்பு' என்பாளைப் பெயர்தது அவன்
'காதலாய்! நின்இயல் களவெண்ணிக் களிமகிழ்
பேதுற்ற இதனைக் கண்டேயான் நோக்க, நீஎம்மை
ஏதிலா நோக்குதி' என்றாங்கு உணர்ப்பித்தல்
ஆய்தேரான் குன்ற இயல்பு." (பரிபாடல்: கஅ: எ - கச)

# ௪௮. குன்றியனுர்

குன்றியனுர் என இவர்க்குப் பெயரிட்டு வழங்கற்காம் காரணம் இது என அறிந்து கூறற்கு இயலவில்லை. இவர், மேலைக் கடற்கரைக் கண்ணதாய், சேரநாட்டுச் சிறப்புடை நகரங்களுள் ஒன்றாய், நெல்வளம் நிறைந்து காணப்படும் தொண்டிநகரப் பெருமையினைப் பாராட்டியிருப்பதால், அச்சேரநாட்டைச் சேர்ந்த புலவருள் ஒருவராவர் என்று கூறுவது தவிர, இவர் வரலாறாக வேறு எதையும் கூறுதற்கில்லை; தொண்டிநகர் வாழ் மகளிர், வயிரம் பொருந்திக் கருநிறம் பெற்ற மரத்தாலாய உலக்கையால், அவலிடித்து முடித்து, அவ்வுலக்கையை, நெற்கதிர் நிறைந்த வயலினது வரப்பிலே வைத்துவிட்டு, வண்டல் அயர்ந்து மகிழ்வர்; அத்தகைய வளமும், வனப்பும் நிறைந்தது தொண்டிநகர் எனக் கூறியுள்ளார் புலவர்:

"பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை
ஆய்கதிர் நெல்லின் வரம்பணைத் துயிற்றி
ஒண்டொடி மகளிர், வண்டல் அயரும்
தொண்டி அன்ன என் நலம்" (குறுந்: உ௩அ)

புலவர்தம் பாக்களைப் பயின்றார்க்குப், புலவர் அரிய அறவுரைகளை அழகாக எடுத்துரைக்க வல்ல ஆற்றல் வாய்ந்தவர் என்பது புலனும்; தம் துணைவரைப் பெறாது தனித்திருக்கும் தலைவன் தலைவியர்க்குத் துயர்தரும் இயல்புடையது மாலைக்காலம். அத்தகைய மாலைக்காலத்தே, தன் காதலனைப் பெறமாட்டாமையால் வருந்தினுள் ஒரு காதலி; அதனுல் அவள் உடல் மெலிந்தது; அவள் மெலிவு கண்ட தாய், அது தலைவன் வாராமையால் வந்தது என அறியமாட்டாது, அது முருகன் அணங்கியதால் வந்தது எனப் பிறழக் கொண்டாள்; அஃதறிந்த அத்தலைவி, "தவறு தலைவனுடையதாகவும், தாய் அணங்கினது எனக் கொள்கின்றாள்; இவ்வாறு ஒருவர் பழியை ஒருவர்மேல் ஏற்றிக் கூறும் தாயின் செயல்கண்டு நனிமிக வருந்து

கிறேன்; தாய் செய்யும் தவற்றினைத் திருத்தமாட்டாது வருந்தி வாழ்வதினும உயிர்விடுதலே நன்றாம்'' என்று கூறி வருந்தினாள் எனப் பாடிய பழிதரு செயலை ஒருவர் புரிந்தாராக, அதைப் பிறிதொருவர்மேலேற்றிக் கூறல் அறமன்று; அவ்வறமல்லன நிகழக் காண்டலினும், உயிர் வாழாமை உயர்ந்தோர்க்கு உயர்வுதரும் என்ற ஓர் உண்மையினை உணர்த்தியுள்ளார்

“ புலம்பொடு வந்த புன்கண் மாலை
அன்னா உன்னா கழியின், பன்னாள்
வாழலேன், வாழி தோழி ! என்கண்
பிணி, பிறிதாகக் கூறுவர் ;
பழி பிறிதாகல் பண்புமா றன்றே” (நற் : ககள)

ஒரு தலைவன் பரத்தையர் ஒழுக்கம மேற்கொண்டிருந்தான்; அவன் செயல்கண்டு வருந்தினாள் அவன் மனைவி; அவ்வருத்த மிகுதியால் வாடிற்று அவள் உடல்; அவனோடு கூடி வாழ்ந்த காலத்தே அவள் கையொடு பொருந்தியிருந்த வளைகள், இப்போது அவள் தோள் மெலிந்துவிட்டமையான் கழன்றுவிட்டன, அவள் கைகள் வளையிழந்து வனப்பிழந்து தோன்றலாயின, இவ்வாறு தலைவி வருந்தத் தவற்றொழுக்கம மிக்கானாயினும், அவன் ஊர் நீர்த்துறைமட்டும தன் பொற்பு இழக்காதே இருப்பது அறிந்தாள் தலைவி “இவ்வாறு நம்மைவருத்துமம அவன் ஊர் நீர்த்துறை, நம்மைப்போல நலனிழந்து போகாமல், மருதமும் புன்னையும் மலர்ந்து மணக்க மாட்சியுற்றுத் தோன்றுகின்றதே! இஃது என்னே!'' எனக்கூறி வருந்தினாள் எனப் பாடிய பாட்டில், பிழைசெய்தார் பெருகவாழ்தல் இயலாது; ஆகவே பெருவாழ்வு வேண்டுவார் பிழை புரியாமை வேண்டும் எனும அறம் குறிப்பான் உணரவைத்துள்ளார் புலவர்.

“ ஐயவி அன்ன சிறுவீ ஞாழல்,
செவ்வீ மருதின் செம்மலொடு தாஅய்த்
துறையணிந்தன்று, அவர் ஊரே. இறை இறந்து
இலங்கு வளை நெகிழச் சாஅய்ப்
புலம்பு அணிந்தன்று அவர் மணந்த தோளே.”(குறுந் : ருO)

பொருள் தேடிப் புறநாடு புகுந்த தலைவன், வாடை வீசும் காலம் வருதற்கு முன்பே வந்து சேர்வன்; வருந் தற்க எனக்கூறிச் சென்றான். சென்றவன், அக்காலம் வந்துவிட்டதாகவும் வந்திலன்; அவன் வாராமையால், நனிமிக வருந்தினாள் அவன் மனைவி, வருந்தினாளாயினும், வளமான உளமுடையளாதலின், வாராமை குறித்து அவனை வெறுத்திலள், வெறுக்காமை மட்டுமன்று; வெறுத்தல் பண்பன்று என்றும் கூறுவாளாகி, “வாடையும் அக்காலத்து மாலையும வருத்த வருந்திய நம நெஞ்சம், மேலும் வருந்துமாறு வாராது கொடுமைசெய்தாராயினும், அவர் நட்பு நமமைவிட்டு நீஙகாது நிற்குமாக! அவர் மார்புதரு இன்பமே எண்ணிநிற்கும நம நெஞசம், அவர் நம்மாட்டு அன்புகொண்டிலா எனபதை அறிந்தும் அவரை மறவாது அவரோடே இருக்குமாக” என்று கூறினாள் எனப்பாடி, நண்பர் நல்லது செய்யமாட்டாராயினும், அவ ரோடு கொண்ட நட்பினை மறததல் கூடாது; மறத்தல் நன்றன்று என்ற நல்லறிவினை நமக்கு நல்கியுள்ளார்.

“கழிபடர்க்
காமர் நெஞ்சம் கையறுபு இனையத்
துயரம் செய்து நம் அருளாராயினும்,
அறுஅலியரோ அவருடைக கேண்மை;
அளிஇன்மையின், அவண உறை முனைஇ
வாரற்க தில்ல.... .. ...... ..
...... .. .. .. .. . ...துறைவன்
இன்துயில் மார்பில் சென்றஎன் நெஞ்சே.”

(அகம்: ௫0)

கடல் முழங்க, கடற்கரைச் சோலைகள் மலர, கழிநீர் எல்லைகடந்து ஏறிப் பரவ, நெய்தல் கூம்ப, பறவை தம் கூடடைய, ஞாயிறு சிவந்து தோன்றி மலைபுகுந்து மறைய, ஒளி மழுங்க, தனித்திருப்பார்க்குத் துயர் பெருக வந்தது மாலை எனப் புலவர் கூறும் மாலைக்காட்சி மகிழ்ச்சியூட்டு வதாம்.

"பெருங்கடல் முழங்கக், கானல மலர,
இருங்கழி ஓதம் இல்இறந்து மலிர,
வள்ளிதழ் நெய்தல் கூம்பப், புள்ளுடன்
கமழ்பூம் பொதும்பர்க கட்சி சேரச,
செல்சுடர் மழுங்கச, சிவந்து வாங்கு மண்டிலம்
கல்சேர்பு நணணிப் படரடைபு நடுங்கப்
புலம்பொடு வந்த புன்கண் மாலை." (நற் : ககள)

களவொழுக்க இன்பமே சிறந்ததாம் எனக் கொண்ட ஒரு தலைவன், தான காதலிக்கும ஒரு தலைவியை விரைந்து வரைந்துகொள்ளானாயினன்; அதனால துயர மிகக கொண டாள தலைவி; தலைவியின துயர் அறிந்த தோழி, "தலைவா, வரைந்துகொள்ளாது இவவாறு ஒழுகுதல் அச்சந்தருவதாம், இங்ஙனம நம உள்ளத்தே அச்சம் மிக, வந்து செல்வதினும் வாராமையே நன்றாம" என்று கூறினள். அதுகேட்ட தலைவி, "அவர அங்ஙனம வாராராயின், என் வருத்தம் மிகும, வருத்தம மிகுந்தால உடல வாடும்; உடல வாடின வளைகழலும, வளைகழலக் காணின் ஊரார அலர தூறறுவர, அந்நிலையினை எவவாறு ஆற்றுவேன்" என்றுகூறி வருந்தினள் அதறகுத தோழி, கைவளையற்றிருப்பக காணினன்றோ ஊரார அலர உரைப்பர? வளைகழலும மெலிவைப பிறர உணராவாறு மறைத்தலும கூடும; கை மெலியுந்தொறும, மெலியுந்தொறும அம மெலிவு புலனாகாவாறு அணிந்துகொள்ளுதற்கேற்ற சின்னஞ்சிறு வளைகளும் உள்ளன, அவற்றை அணிந்து அம் மெலிவு தோன்றாவாறு மறைத்துவிடலும கூடும" எனக் கூறித் தேற்றினள எனபபாடும புலவர், பெணணுள்ளம் கொள்ளும பெருந்துயர் நிலையினையும, தாம்உறு துயரைப் பிறர் உணராவாறு பேணிக்காத்தல் கடமையாம் எனக் கொள்ளும் அவர்தம் அறிவின் பெருமையினையும் பாராட்டியுள்ளமை உணர்ந்து மகிழ்வோமாக.

"துறைவன்,
வாராது அமையினும் அமைக!
சிறியவும்உள ஈண்டு விலைஞா கைவளையே."
(குறுந் : ககள)

---

## ௬0. கூற்றங்குமரனார்

நம் புலவர்தம் இயற்பெயர் குமரனார்; அப்பெயருடைப் பிறரின் வேறு அறிதற்குக் கூற்றங்குமரனார் எனப்பட்டார்; கூற்றன் என்ற அச்சிறப்பு, அவர் தந்தை பெயரைக் குறிக்க வந்ததாம் என்ப; சில ஏடுகளில் இவர் பெயர் கூத்தங்குமரனார் என எழுதப்பட்டிருப்பது கொண்டு, நம் புலவர், புலமையோடு கூத்தாடவல்லவருமாவர் எனக் கொள்வாரும் உளர். இவர் பெயருடைப் பாட்டொன்று நற்றிணைக்கண் இடம்பெற்றுளது.

களவொழுக்க இன்பமே கவின்மிக உடைத்தாம் எனும் உளம் உடையனாய் வரைதலை நினையாது ஒழுகும் தலைமகன், இடையே சிலபொழுது வாராமையால் வருந்தினாள் தலைவி; அக்கவலையால் அவள் அழகும் அழிந்தது; இந்நிலை மேலும் நீட்டித்தல் நன்றன்று; அவன் விரைந்து வந்து தன்னை வரைந்து கோடலை விரும்பினாள் தலைவி; ஆயினும் அதைத் தானே செய்து கோடல் இயலாது; ஒன்று தலைவன் வரைவு வேண்டி வந்து வரைந்துகொள்ளுதல் வேண்டும்; அல்லது, தயா, தம மகளதம கருததறிந்து தலைமகனுககு மணஞ்செய்து தரலவேண்டும், அவர்கள் அதை மேற்கொள்ளுமாறு செயததும தன்னால் இயலாது; அதைச் செய்வாள தோழியே; அழியும் தன் அழகைக் கண்டும் அவள் அதைச செய்திலள; அதனால், உலகில் உள்ளார் அனைவரினும் அவளே கொடுமையுடையாள்போல் தோன்றிற்று; ஒருநாள், அவளை அழைததது, அவள் குறிததுத் தன் உள்ளம் கொண்டுள்ள எண்ணத்தை எடுத்தும் கூறிவிட்டாள், அவ்வாறு கூறிய தலைவியின் கூற்றே பொருளாகப் பாடிய அப்பாட்டில், தலைவியின் மேனி அழகு, அசோகின் அந்தளிர் போன்றது; தலைவன் மலைச்சாரல் மழைமிகப் பெற்று மணம் நாறும் மாண்புடையது; ஆண்டுறை வண்டுகள் மலர்தோறும் சென்று மதுவுண்ணுங்கால் எழுப்பும் இனிய ஓசையினை, அசுணம்

எனும் இசையறி பறவை, யாழின் இன்னிசையோ எனக் கொண்டு காதுகொடுத்து கேட்கும் என்ற செய்திகளையும் அறிவித்துள்ளார் புலவர்; அசுணம் என்பது ஒரு பறவை; இசைகளின் கூறுபாட்டினை அறிவதில் சிறந்தது; அது இன்னிசை கேட்டால் மகிழும்; பறையொலிபோலும் கொடிய ஓசைகேட்பின் மயங்கி உயிர்விடும் மாண்புடையது; அதைப் பிடிக்க விரும்புவார், அவையுறை இடத்தே சென்று முதற்கண் இனிய இசையினை எழுப்புவர்; அது கேட்டு அகமகிழ்ந்திருக்கும் அந்நிலையே, பறையினை முழக்குவர்; அவ்வொலிகேட்டு மாண்டுவிழும் அவற்றைக் கொண்டு செல்வர்; அத்தகைய மாண்புநிறை பறவையின் பண்பினைப் புலவரும பாராட்டியுளளார:

"விழுந்த மாரிப் பெருநதண் சாரல்
கூதிர்க் கூதளத்து அலரி நாறும்
மாதா வண்டின் நயவரும் தீங்குரல்
மணம் நாறு சிலம்பின் அசுணம் ஓர்க்கும்
உயா மலை நாடற்கு உரைததல் ஒன்றோ,
துயா மருஙகறியா அன்னைககு இந்நோய்
தணியுமாறு இதுவென உரைத்தல் ஒன்றோ
செய்யாய் ஆதலின் கொடியை; தோழி!" (நற்: உ௪௪)

---

## ௧௧. கேசவனார்

பரிபாடலில், பதினான்காவது பாடலாகிய, முருகனுக்குரிய பாடலைப் பாடிப் பண்ணும் அமைத்த புலவர் கேசவனார்; திருமாலுக்குரிய பெயர்களுள் ஒன்றாகிய கேசவனார் எனும் இயற்பெயர் கொண்ட இவர், முருகனைப் பாடியுள்ளது, புலவர்தம உள்ளத்தே நிலவிய சமரசசமய உணர்விற்குச் சான்றளிப்பதாகும. கார்காலத்தே, மழை மிக்குப் பெய்யும்; நீர்நிலைகள் நிறையும்; சுனைகள் பன்னிற மலர்களால் மாண்புறும்; கடம்பு மலர, அமமலர் நிறை தேன் குடிக்க வண்டுகளை வரும்; மலையடுக்கத்தே மகளிர் தோள்போலும் மூங்கில்களை வளரும்; மயில்கள் தோகை விரித்து ஆடி, அகமகிழ்நது அகவும்; கொன்றை மலரும்; வேங்கை அரும்பு அவிழும், காந்தளும, தோன்றியும் கவினுற மலர்ந்து மணம் நாறும்; இந்நிகழ்ச்சிகளோடு கூடிய கார்காலம தோன்றிற்று என்பதைக் கூறவந்த புலவர், பெருமழை பெய்தலால் நிறைநத சுனைகளில் மலர்கள் மலர்ந்தன; கடம்பமலர்ததாதூதும் வண்டின்குரல், பண்போல் பாடுறும்; மலைவளர் மூஙகில்கள், மகளிர்தம் தோள்போல் தோன்றின, மயில்கள் கூவும் குரல்ஒலி, தலைவியரைத் தனிவிட்டுப் பிரிநதுறை தலைவர் தமமை, "தலைவர்காள், இனியும் தாமதம செய்யன்மின், விரைந்துவந் தெய்துக!" எனக் கூவி அழைப்பதுபோலும்; கொன்றை மலர்கள் பொற்காசு போன்றன; தம் மகளிர்தம் அழுகையினைப் போக்க விரும்பும் அன்னைமார், அவர் வேண்டும் மலர் தருவான் வேண்டிப் புலி புலி எனக் கூவுமாறு வேங்கைகள் மலர்ந்தன; காநதள் மலர்ந்தன; மலர்ந்த காந்தளின் மணம்நிறை இதழ்கள் எங்கும் பரந்து எழில் நிறைவுற்றன; இவ்வாறு பரங்குன்று, கார்காலத் தன்மை பெற்றது என்றெல்லாம் பாடிக்காட்டுவது, அவர்தம் புலமையின் அருமையினை அறிவிப்பதாகும்.

முருகன், ஆறுமுகம் உடையான்; ஆறிரு தோள் உடையான்; வள்ளிபால் சென்ற விழைவுடையான்; பாடு

வார் பாட்டின் பயனுவான்; எவரும் அஞ்சும் ஈடிலா ஆற்றலைப் பிறந்த அன்றே பெற்ற ஆண்மையாளன்; அந்தணர் உரைக்கும் அறநெறி நின்ற அழகுடையான் என, முருகனும் முழுமுதற் கடவுள்பால் காணலாம் பல் வேறு பண்புகளைப் பாராட்டிய பணியும் பேரன்புடையார் புலவர் கேசவனார், ஆண்டவன்பால் அன்புடையார், அவனைப் பணிந்து, போற்றி வழிபடுதல், அன்பினுல், அவ்வழிபாட்டுநெறி தம்மினின்றும் நீங்காமை நிற்றற் பொருட்டே யன்றி, அவ்வாண்டவன்பால் பொன்போலும் பொருள் பெறலாம் எனும் எண்ணத்தாலன்று; "கூடும் அன்பிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலின் விளங்கினுர்" என அவ்வன்புடையாரைப் பாராட்டுவர் சேக்கிழாரும், (பெரிய: திருக்கூட்டச் : அ), புலவர் கேசவனுரும், "முருக! நின்னை யாங்கள் வழிபடுவதன் பயன், அவ்வழிபாடுகள் மேலும், மேலும் நின் புகழினும் பலவாகுக!" என வேண்டுதல், உண்மை வழிபாடு யாது என அறிவார்க்குத் துணைபுரியுமாக!

"நின்னைத் துன்னித் துன்னி வழிபடுவதன் பயம்
இன்னும், இன்னும் அவையாகுக
தொன்முதிர் மரபின்நின் புகழினும் பலவே."
(பரிபாடல்: கச: உகூ-ஙஉ.)

---

# கஉ. கொல்லன் அழிசி

அழிசி என்பது இவர் இயற்பெயர்; அக்கால அரசரும், மக்களும் ஒக்க மேற்கொண்ட இயற்பெயர்களுள் அழிசி என்பதும் ஒன்று; சேந்தன் எனும் சிறந்தானுக்குத் தந்தையாய், ஆர்க்காடாண்டிருந்தான் ஒரு அரசன், அழிசி எனும் பெயர் கொண்டிருந்தான் என நூல்கள் கூறு கின்றன. இரும்பானும் பொருள்களை ஆக்கும் கொல்லர் குடியிற் பிறந்த சிறந்த புலவர்களுள் இவரும் ஒருவராத லின் கொல்லன் அழிசி எனக் குறிப்பிடப்பெற்றுளார். கொண்கான நாட்டில உள்ளதும், நன்னன் என்பானுக் குரியதும் ஆய ஏழில் எனும் மலையைப் பெயர்கூறிப் பாராட்டியிருப்பதால், புலவர், அம்மலையோடு ஒருவாற்றான் தொடர்புடையவராவர் எனக் கொள்ளலாம்.

"எம்மில் அயலது ஏழில் உம்பர்." (குறுந்: கந அ)

புலவர் பாடியனவாகக் குறுந்தொகைக்கண் காணப் பெறும் பாக்கள் நான்கும், தலைவன் பிரிந்தானாக, அவன் பிரிவைப்பொறாது வருந்தும் தலைவியின் துயரே பொரு ளாக வந்துள்ளன.

"தலைவனைப் பிரிந்து தனித்து நிற்கும் என் துயர் பெருக, அவளாயும் முல்லை மலரும் மாலைக்காலம் ஒன்றே போதுமாக, அமமாலையொடு, வாடையும் கலந்து வந்து வருத்தத் தொடங்குகிறது, மாலையும், வாடையும் விளைக்கும் வருத்தத்தை, அவர் நாட்டு மலையைக்கண்டு நிற்பதால் உண்டாம் இன்பம் ஓரளவு தணித்து நின்றது; அதுவும் இப்போது இன்றாயிற்று; மலையைக் காணுவாறு இருள்வந்து சூழ்ந்துகொண்டது; இனி யெங்ஙனம வாழ் வேன்?" என்றும், "ஊர் எல்லாம் உறங்கும் நள்ளிரவினும், யான்மட்டும் உறங்காது உழல்கின்றேன்" என்றும், "தலைவன் பிரியத் தனித்துத் துயருற்றுப் பாயல்பெறாது படுதுயர் நோக்கியும், 'உறங்காது உழல்வது ஏனோ?' எனக் கேட்டலும் செய்யாது இனிது உறங்கும் இரக்க

மற்றுரைக் கொண்டிருப்பதோடு, விரைந்து விடியாது, நீண்டபெரும் இரவினையும் கொண்டுள்ள இவ்வூர் எம்போல் துயருறுவார் வாழ்தற்கமையா வன்கண்மையுடைத்து; ஈண்டு உயிர்மேற்கொண்டு வாழ்தலினும், மாண்டு மடிதலே நன்றாம்" என்றும், "தலைவனைப் பெற்று மகிழ்ந்து வாழ மாட்டாமையால், என் பேரழகு, பசலையால் பாழுறுகிறது; அப்பேரழகைப் பெற்றுள்ள எனக்கோ அதைப் பயன் கொள்ளும் என் தலைவர்க்கோ பயன்படாதொழிகிறது; அந்தோ! என் செய்வேன்?" என்றும் கூறிக்கூறி வருந்தினாள் தலைமகள் எனப் பாடிய அப்பாக்கள், மகளிர், தம்மை மணந்த கணவன்மார், தம்மைவிட்டுப் பிரிந்து சென்ற காலத்தே எத்துணைக் கொடிய துன்பத்தில் ஆழ்வர் என்பதைத் தெளிய உணர்த்தியுள்ளமை உணர்ந்து பாராட்டுவோமாக!

இவ்வாறு பாடிய பாக்களிடையே புலவர் அமைத்துள்ள அரிய உவமைகள், அப்பாக்கள் அளிக்கும் பொருட் சிறப்பிற்கு மேலும் பொலிவு அளித்து நிற்கின்றன; அவரை மலர், கிளிமூக்குப் போலும்; மணம் நிறை முல்லை அரும்பு, காட்டுப்பூனையின் கூரிய பல்போலும்; இருளில் மறையும் மலை, ஆழத்தால் இருண்ட கடலில் ஆழும் கலம் போலும் என்ற இவ்வுவமைகள் புலவர்தம் புலமைக்குப் பொன்றாப் புகழளிப்பனவாம்;

தலைவி, தான்பெற்ற அழகு, தலைவன் பிரிந்து உறைவதால், தனக்கும் பயன்தாராது, தலைவனாலும் நுகரப்பெறாது அழிதற்கு, பசுதரும் பால், அப்பசுவின் கன்றாலும் உண்ணப்பெறாது, கறக்கும கலத்துட் சேர்ந்து பிறர்க்குப் பயன்தாராது, மண்ணிற் சிந்தி மாண்பிழத்தலை உவமை காட்டினாளாகப் பாடியுள்ள புலமை, அம்மம்ம! அரிது! அரிது! கன்று உண்டபின், கலத்திலும் நிறைந்து நிறைய வேண்டிய பால்போல், தலைவியின் அழகு, தலைவிக்கும் பயன்பட்டுத் தலைவனுக்கும் தன்னேரில்லாப் பேரின்பத்தைத் தரவல்லதாம்; . அத்தகைய பேரழகு பயனுறாது கெடுதல் கொடுமையினும் கொடுமையேயாம்; தமக்கும்,

தம் கணவர்க்கும் பயன்பெறுதல் இன்றி, மகளிர் அழகு கெடுதலின் கொடுமையினை வள்ளுவப் பெருந்தகையாரும் உணர்ந்துள்ளார் என்பதை, "அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம், மிக நலம்பெற்றாள் தமியள் மூத்தற்று" என்ற அவர் குறட்பா குறித்துளது காண்க. அத்தகைய இன்பக்கேட்டின் கொடுமையினைப் புலவர் காட்டிய, பாலினது கேட்டின் கொடுமை குன்றின்மேல் இட்ட விளக்கென விளக்கி நிற்றலை உணர்ந்து புலவரை வியந்து பாராட்டுவோமாக.

இத்தகு பெரும் பொருளெலாம் தோன்றப் பாடிய புலவரின் பாக்களைப் படித்துப் பயனுறுவோமாக!

"கன்றும் உண்ணாது, கலத்தினும் படாது
நல்லான் தீம்பால் நிலத்து உக்காங்கு,
எனக்கும் ஆகாது, என்னைக்கும் உதவாது
பசலை உணீஇயர் வேண்டும்
திதலை அல்குல் என் மாமைக் கவினே."

"கொன்னூர் துஞ்சினும், யாம் துஞ்சலமே."

"உறைபதி அன்று, இத்துறை கெழு சிறுகுடி ;
கானலம் சேர்ப்பன் கொடுமை எற்றி,
ஆனாத் துயரமொடு வருந்திப் பானாள்
துஞ்சாது உறைநரொடு உசாவாத்
துயிற்கண் மாக்களொடு நெட்டிரா உடைத்தே."

"பனிப்புதல் இவர்ந்த பைங்கொடி அவரைக்
கிளிவாய் ஒப்பின் ஒளிவிடு பன்மலர்
வெருக்குப் பல் உருவின் முல்லையொடு கஞல
கண்டிசின் வாழி! தோழி! தெண்திரைக்
கடல்ஆழ் கலத்தில் தோன்றி
மாலை மறையும் அவர் மணிநெடுங் குன்றே."

(குறுந் : உ௭, கஙஅ, க௪௫, உ௪0)

## கஙு. கொல்லிக்கண்ணன்

கண்ணன் எனும இயற்பெயரினராய இவர், சேரர்க்குரிய கொல்லிமலையைச சூழஇருந்த நாட்டினராதல் பற்றிக் கொலலிககண்ணன் என அழைக்கப்பெற்றுளார். இவா குட்டுவனையும், அவனுக்குரிய கடற்கரை நகராகிய மரந்தையினையும பாராட்டியிருததலும், சேரநாட்டோடு அவருக்கிருந்த தொடர்பினை விளக்கி நிற்கிறது. குட்டுவன் மரநதைநகரைச சார்நதுள்ள கடற்கரைக்கண் வாழும் வண்டாழ்ங்குருகு என வழங்கப்பெறும், யானையின் குரல் போலும குரலுடையவாய யானையங்குருகுகள், போர்க்களம் வென்ற வீரரகள் தம வெற்றிகண்டு செய்யும் ஆரவாரம் கேட்டு அஞசும் எனக் கூறியுள்ளார்.

> "முனூஅது, யானையஙகுருகின் கானலம் பெருந்தோடு
> அட்டமள்ளர் ஆர்ப்பிசை வெரூஉம்
> குட்டுவன் மரந்தை" (குறுந் : கூச)

தலைவியைக் காதலிக்கும் தலைமகனே வரைவொடு வந்துளான்; அவனுக்கே தமரும் வரைவுநேர்ந்தார் என்பதறிந்த தோழி, தலைவிபடும் துயா எல்லாம ஒழிந்தன எனக்கொண்டு மகிழ்நத துறையமைய வநதுளள அப்பாட்டில், வரைவிறகு முற்பட்டதாய களவுக்காலததே தலைமகள் படும் துயர்களை எல்லாம தொகுத்துக் கூறியுள்ளார் புலவர்.

தலைவியின் வேறுபாடு காணும் செவிலி முதலானோர், "இத்தகைய வேறுபாடு நீ உறுதறகுக் காரணம யாது" எனக் கேட்டும், "இனி, நீ இலஇறநது செல்லற்க" எனத் தடுத்தும் துயர் விளைப்பர்; அததுயரினைத் தாங்குதல் வேண்டும் தலைவி; "அவர் வந்து மணப்பரோ? அன்றி மறந்தேபோவரோ?" எனத் தலைமகள் ஐயம் உற, "அவர் மறவார்; மறவாது வந்து மணப்பர்" எனத் தோழியர் தேற்றவும் தேறுளாய் வருந்தலும் நிகழும். ஊர் எல்லாம்

உறங்கும் நள்ளிரவில் தலைவிமட்டும் தனித்துத் துயிலா திருந்து துயா உறுவாள்; அந்நிலையில் தன்னை யாரேனும் காணின் கேடாம் என அஞ்சிப் படுக்கையறையிற்கிடந்து பொய்யே உறங்குவாள்போல் இருந்து துயருறுவள். இத்தகைய துயரம் எல்லாம் ஒழிய, "நினக்குத் திருமணம்; நீ விரும்பிய அவரே நினக்குக் கணவர்" என்ற இன்னுரை கேட்டு மகிழும் நாள் வந்துற்றது கண்டு மகிழ்வதில் தவறுண்டோ?

"ஒறுப்ப ஓவலர், மறுப்பத் தேறலர்;
தமியர் உறங்கும் கௌவை இன்றாய்
இனியது கேட்டு இன்புறுக இவவூரே,
... ..... . .. .. .. .. .. .. ...... .. .. .
எம்குழல் விளங்கு ஆயநுதற் கிழவனும் அவனே."

(குறுந் : ௩௪)

## கசு. கொள்ளம் பக்கனார்

இவர் இயற்பெயர் பக்கன் என்பது; கொள்ளம் என்ற பெயருடைய ஊரினராதலின் கொள்ளம்பக்கன் என அழைக்கப்பெற்றுள்ளார். அக்கொள்ளம் என்றவூர் யாண்டுளது? இவர்க்குப் பக்கன் எனும் பெயர் இயற்பெயரா? காரணப் பெயரா? இவை போன்றன குறித்து ஒன்றும் கூறுதற்கியலவில்லை இவர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது.

தான் காதலித்த ஒரு தலைவியை விரைந்து வரைந்து கொள்ளக் கருதாது, களவொழுக்கமே விரும்பி வாழும் ஒரு தலைவன் அவளை வரைந்து கொள்வதை விரைவில் மேற்கோடல் வேண்டும் என விரும்பிய தோழி, அவன் உளத்தே, அவனையே எப்பொழும் நினைந்திருக்கும் அன்புடையாள் தலைவி; தலைவியின் களவொழுக்கம் அறியின் கடுஞ்சினம் கொண்டு, இற்செறித்துத் துயர் உறுத்தும் கொடியள் அன்னை; இவ்வொழுக்கத்தை அவளறியாவாறு நீட்டித்து மேற்கோடல் அரிதினும் அரிது என்ற உண்மைகளை உணர்விக்க விருமபினாள்; ஒருநாள், அவன் அவர் மனைப்புறத்தே வநதிருந்தானாக, அவன் கேட்குமாறு தலைவியை விளிதது, "தோழி! தாய் நின்னை அழைத்து, என் இளைய மகளே! கிளிகள் கதிர்களைக் கொய்யுமாறு விட்டுவிட்டு நீ யாண்டுச் சென்றிருந்தனை?" என்று கேட்டாளாக, அக்கேள்வியால் அச்சமுற்ற நீ நின் அறிவை இழந்து, "அம்மா! நான் அம் மலைநாடனைக் காதாற் கேட்டறிதலும் செய்யேன், கண்டதும் இலன்; அவனோடு கூடி மலர் பறித்தும், சுனை பாய்ந்தும் மகிழ்ந்து ஆடலும் புரிந்திலன்" என்றெல்லாம் நினைப்பிழநது கூறி உண்மையினை உரைத்துவிட்டனை; அதுகேட்ட அன்னை, ஆற்றொணாச் சினங்கொண்டு குடிப்பழி உண்டாமோ என்ற எண்ணத்தால் வெட்கித் தலைகுனிந்து சென்றாள்; "இனி, நீ தினைப்புனம் போதலும் இயலாது, மேலும் என்னென்ன விளையுமோ அறியேன்; இத்துணை அறியாமை

யுடைய நீ வாழ்வதெப்படியோ?" என்றெல்லாம் கூறினாள். தாய்க்கும் மகளுக்கும இடையில் இத்தகையதொரு நிகழ்ச்சி எதும் நடந்திலது ஆயினும், இவளை விரைவில் வரைந்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் அவன் உளத்தே உண்டாக்கற்கு இவ்வாறு பொய் கூறலன்றி வழி வேறில்லை என்ற துணிவால் துணிந்து பொய்கூறினாள்; புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின், பொய்ம்மையும் வாய்மையிடத்தவாமன்றோ?

தோழியின் படைத்து மொழிகிளவி அமைந்த பாட்டில், அச்சம் முன்நின்றக்கால், அறிவிழந்து தாம் செய்த தவறைத் தாமே உரைத்துவிடும் மக்கள்தம் மன இயல்பு, நகைச்சுவை தோன்ற காட்டப்பட்டிருப்பது புலவர்தம் புலமைக்குப் பெருமையளிப்பதாம்.

“யாங் காகுவமோ? அணிநுதற் குறுமகள்!
‘தேம்படு சாரல், சிறுதினைப் பெருங்குரல்
செவ்வாய்ப் பைங்கிளி கவர, நீ மற்று
எவ்வாய்ச் சென்றனை அவண்?’ எனக் கூறி
அன்னை ஆனாள் கழற, முன்னின்று,
‘அருவி ஆர்க்கும் பெருவரை நாடனை
அறியலும் அறியேன்; காண்டலும் இலனே,
வெதிர்புனை தட்டையேன் மலர்பூக் கொய்து
சுனைபாய்ந்து ஆடிற்றும் இலன்’ என நினைவிலை
பொய்யல் அந்தோ! வாய்த்தனை; அது கேட்டுத்
தலையிறைஞ் சினளே அன்னை;
செலவொழிந் தனையால் அளியை நீ புனத்தே.”

(நற் · கருஎ)

## ௬௫. கொற்றனார்

நக்கீரர் கண்ட இறையனாரகப்பொருள் நல்லுரையினை, அவர் கூற முதற்கண் கேட்டார் அவர மகனாகிய கொற்ற னார் என அகப்பொருள் உரை கூறும் கொற்றனார் இக் கொற்றனாரே, ஆகவே, இவர் நக்கீரர் புதல்வராவர்; கீரங் கொற்றனர் எனவும் வழங்கப்பெறுவர் என்று இவர்பற்றிக் கூறுவாரும உளர். இவ்வரலாற்றினைக கொள்ளுதற்கோ, தள்ளுதற்கோ ஏற்ற வலியுடைச் சான்று எதுவும கிடைத் திலது; இவர் பாடிய பாக்கள இரண்டு குறுநதொகைக்கண் இடமபெற்றுள.

புலவர் பாடிய பாக்கள் இரண்டும், கல்வி, பொருள், காவல் இவற்றுள் யாதேனும் ஒன்று குறித்துத் தலைமகன் பிரிந்து சென்றானாக, சென்றவன் செலலுங்கால் வருவேன் எனக் குறித்துச்சென்ற காலத்தே வாரானாதல் அறிந்து தலைமகள் வருந்தினாள் என்ற முல்லைத்திணைப்பொருள் குறித்தே வந்துள்ளன; அவ்விரண்டு பாட்டிலேயே, தலைவன், தலைவி, தோழி ஆகிய மூவர் கூற்றும் தோன்று மாறு பாடியுள்ளார் புலவர், பிரியக் கருதிய தலைவன், தன் பிரிவாலாம தன்மையினைத தாங்கமாட்டாது வருந் தும் தலைவி, அவ்வருத்த மிகுதியால், அணிந்துள வளை முதலாம் அணிகள் தாமே கழன்று குமளவு உடல்மெலிந்து போதலைக் கண்டும், கடமையிற் றவறமாட்டாமையான், "அன்பே! இவ்வாறு நின் உடல்மெலிய, கண்ணீர் கசிந்து, தலைவர் சென்ற நாள் இன்றோடு இத்தனை எனச் சுவரி னிடத்துக் கோடிட்டு எண்ணிக் கலங்கிநிற்கும் நின் வருத் தம் எல்லாம் விரைவில் நீங்குமாறு கார்காலம் தொடங்கிய அந்நிலையிலேயே வந்துசேர்வன்" எனக் கூறிப் பிரிந்தான்;

"வீங்கிழை நெகிழ விம்மி, ஈங்கே
எறிகண் பேதுறல்; ஆய்கோ டிட்டுச
சுவர்வாய் பற்றும் நின்படர் சேண்நீங்க
வருவேம்." (குறுந்: ௩௫௮)

பிரிந்துசென்ற தலைவன் வந்திலன்; அவன் குறித்துச் சென்ற பருவமும் வந்திலது; ஆயினும், அவனை இமைப் பொழுதும் பிரிந்தறியாப் பேரன்பினளாய தலைவிக்கு, அவன் பிரிந்து நெடுங்காலம் ஆய்விட்டது போன்ற உணர்ச்சி உண்டாகிவிட்டது; அவனையே எண்ணியிருக் கும் உளத்தே, அவர் பிழையலர்; அவர் குறித்த காலம் இன்னமும் வந்திலது என்ற நிலையினை உணரும ஆற்றல் இலதாயிற்று; ஆகவே, அவர் வந்திலர்; அவர் நம்மை மறந்து ஆண்டே நிலையாக நின்றுவிட்டார் என்றே எண்ணி விட்டாள்; உடனே அவள் உளத்தே ஒரு பெரும வெறுப்பு உயிர்பெற்று எழுந்தது. அவர் இன்றேல், யான் இல்லை; என் உயிர்க்கு உயிர்போன்றவர் அவா, தன்னை இன்றி ஓர் இமைப்பொழுதும் வாழேன் என்பதை உணர்ந்தவர் அவர்; அத்தகையார் என்னை மறந்து சென்ற இடத்திலேயே சேண்நெடுங்காலம் நிற்கும வன்மையுடையராகிவிட்டனர் எனின், அவர்க்கு என்பால் உள்ள அன்பு அகன்றுவிட் டது என்றே கொள்ளுதல் வேண்டும், என்பால் அன்பு அற்றார் நல்வாழ்வில், நான்மட்டும் ஏன் கருத்தினைச் செலுத்துதல் வேண்டும, சென்றவர், சிறக்க மீள்க என நான் இதுகாறும மேற்கொண்ட அருள் அறங்களை இன் றோடே மறந்தேன்; இனி மலையுறை மகளாம் தூர்க்கைக்குப் பலியும் இடேன்; கையிற் காப்புநூலும் கட்டேன்; நிமித்த மும நாடேன்; நற்சொற் கேட்டலும் செய்யேன்; இறுதி யாக அவரை நெஞ்சால் நினைத்தலும் செய்யேன்" என் றெல்லாம் கூறி வருந்தினாள்.

"விடாமுகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்
கடனும் பூணும்; கைந்நூல் யாவாம,
புள்ளும் ஓராம்; விரிச்சியும் நில்லாம்,
உள்ளலும் உள்ளா மன்றே? தோழி!
உயிர்க்குயி ரன்னர் ஆதலின் தம்மின்று
இமைப்புவரை அமையா நம்வயின்
மறந்துஆண்டு அமைதல் வல்லியோர் மாட்டே."

(குறுந் : உகஅ)

வருந்தும் தலைவியின் நிலையினைக் கண்டாள் தோழி; தனியே இருப்பாரைக் கார்காலமும், அக்காலத்து மாலையும் பெரிதும் வருத்தும் என்பதை உணர்வாள் அவள்; ஆயினும் ஆற்றியிருத்தலே அறமாம் என எண்ணினாள்; மேலும் காரகாலம தொடங்கிவிட்டது என உறுதியாகத துணிதற்கில்லை, முல்லை, காணும் இடம எங்கும் மலரும் காலமே கார்காலம்; அது அவ்வாறு மலர்ந்துவிடவில்லை; காட்டில், அங்கும இங்குமாக, இப்போதுதான் மலரத தொடங்கியுளது; காட்டில் ஆனிரை மேய்த்துவரும் கோவலர் தலையில் மட்டுமே அது காணப்படுகிறது. ஆகவே, அக்காலம் கார்காலததிற்கு மிக அணுகிய காலமே அன்றிக் கார்காலம் அன்று; இநத உண்மையைத் தலைவிக்கு உணர்த்தி அவளைத்தேற்ற எண்ணினாள்; அவர் வரும் வழி மேல் விழிவைத்து நின்றுகொண்டிருக்கும் அவள்பால் மெல்லசசென்று, "தோழி! அவர் கார்காலத தொடக்கத்தே அன்றோ வருவதாகக் கூறிச் சென்றுளார்; அவர் வாய்மொழி தவறாதவர்; அக்காலத்தே நில்லாது வருவர்; அவர் கூறிச்சென்ற கார்காலம் இன்னமும் வந்திலது என்பதை மறந்துவிடாது, கார்காலத் தொடக்கத்தை அறிவிக்க முல்லை காணுமிடமெங்கும் மலர்ந்துவிடவில்லை என்பதையும், அம்மலர், ஊரில் உள்ளார் ஒவ்வொருவர் தலையிலும் காணப்பெறாமையாலும், காடு சென்று திரும்பும் கோவலர் தலையில்மட்டுமே காணப்பெறுவதையும் நோக்குவாயாக; ஆகவே, அது இப்போதுதான் மலரத் தொடங்கியுளது; அதனால், இது கார்காலம் அன்று, அதற்கு அணுகிய முற்காலமே என்பதை உணர்ந்து உளந் தேறுவாயாக" என்று கூறித் தேற்றினாள்.

"வருவேம் என்ற பருவம் உதுக்காண்
தனியோர் இரங்கும் பனிகூர் மாலைப்
பல்லான் கோவலர் கண்ணிச
சொல்லுப அன்ன முல்லைமென் முகையே,"

(குறுந் : 358)

மூவர் உள்ளமும், உரையும் புலப்படப் பாடிய இப் பாக்களில், தலைவியின் துயர்நிலை கண்டும் பிரியும் தலைவன்

கடமையிற்றவறாக் கருத்துடைமையினையும், உயிர்க்கு உயிர் போன்றானும், இமைப்பொழுதும் பிரிதற்கு இயலாதானும் ஆய அவன் பிரியவும், இல்லத்திற்கு ஆக்கம் கருதிப் பிரிந்துளான் என்ற எண்ணத்தால் துயர் பொறுத்து ஆற்றியிருக்கும் தலைவியின் கடமையிற்றவறாக் கடப்பாட்டினையும புலவர் நன்கு காட்டியுள்ளார். அக்கால மக்கள் ஆண்டவனைப் போற்றும் முறையும், அவரிடத்தே காணப்பெறும் சமயநிலையும், அவர் பாட்டில் ஓரளவு வெளியாதல், அக்காலத தமிழகததை அறிய விரும்புவார்க்கு அருந்துணையாம்.

## கக௯. கோண்மா நெடுங்கோட்டனூர்

இவரைப்பற்றி யாதும் விளங்கவில்லை. யானையின் நெடுங்கோட்டை கோண்மாநெடுங்கோடு எனச் சிறப்பித்தமையான், இவர்க்கு இப்பெயர் உண்டாயிற்று எனக் கொள்ளலாம். இப்போது கிடைத்துள்ள இவர் பாட்டில், இதுபோன்ற சொற்றொடர் காணப்படவில்லை. இவர் பாடிய பாட்டு இஃது ஒன்றே எனத் துணிதல் கூடாது; இதுபோன்ற பல பாக்களை அவர் பாடியிருத்தலும் கூடும்; நம்மால் இப்போது காணப்பெறும் அப்பாக்கள் ஒன்றில் இச் சொற்றொடர் அமைந்திருத்தலும் கூடும். எதையும் துணிந்து கூறுதற்கு இல்லை.

பரத்தை வீட்டில் வாழும் தலைமகன், தனக்கு மகன் பிறந்தான் எனக் கேட்டுத் தன் வீடு வருவோன், நள்ளிரவில், ஊரில் உள்ளார் எவரும் காணுவாறு, கள்வனைப் போல வந்தான் என்று கூறி, மகனுக்குத் தந்தையாம் தகுதியுடையராய தாம், தவறி ஒழுகுதல் தகுதியுடையது அன்று என்ற எண்ணத்தை இயல்பாகவே பெற்றுத் திருந்திய நெறியினராவர் அக்கால ஆண்மக்கள் என்ற அரிய செய்தியை அறிவித்துள்ளார் புலவர்.

> "நள்ளென் கங்குல் கள்வன் போல
> அகன்துறை ஊரனும் வந்தனன்
> சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே." (நற்: ௪0)

இப்பாட்டில் மகப்பேறு பெற்ற ஆண்மகனுக்குரிய தந்தையைச் சிறந்தோன் என்றும், பிறந்தமகனை, அச்சிறந்தோன் பெயரன் என்றும் பெயரிட்டுப் பாடியுள்ளமை பாராட்டும் தன்மையவாம்.

## கஎ. கோவதத்தனர்

தத்தனர் எனும் பெயருடைய இப்புலவர், கோவலர் குடியிற் பிறந்தமையாற் போலும், கோவதத்தனர் என அழைக்கப்பெற்றுளார்; இவர் கோவலர் குடியிற் பிறந்திருத்தலும் கூடும் என்பது, இவர் பாடிய பாக்கள் இரண்டும், ஆயர்குடியிருப்பாம் முல்லைநில ஒழுக்கமே பொருளாகப் பாடப்பட்டுள்ளமையானும் தெளியப்படும். சில ஏடுகளில், இவர் பெயர் கோவத்தன் என்றும் எழுதப் பட்டுளது.

கார்காலத் தொடக்கத்தே நில்லாது மீள்வன் என உறுதியுரைத்துப் பிரிந்து சென்றுளான் தலைவன்; அவன் அக்காலத்தே தவறாது வந்து சேர்வன் என்ற உறுதியால் உளநேதறியுள்ளாள் தலைவி; ஒருநாள் மேகம் வலமாக எழுந்து, மின்னி இடிக்கத் தொடங்கிவிட்டதையும், அம் மேகத்தின் எழுச்சி கண்ட மயிலினங்கள் தம் தோகை விரித்து ஆடி ஆரவாரிப்பதையும் கண்டாள்; அந்நிகழ்ச்சிகள் கார்காலம தொடங்கிவிட்டதை உறுதி செய்யும் என்பதை உணர்ந்த தலைவி, அக்காலம் வரவும், அவர் வாராமை கண்டு வருந்தினள்; வருந்திய தலைவி, தன் உள்ளம் உணர்வழிந்து வாடுவதைத் தன் தோழிக்கு உரைத்தாளாகப் பொருளமைத்துப் பாடியுள்ளார் ஒரு பாட்டில்,

“என்னெனப் படுங்கொல்? தோழி! மின்னுபு
வான்ஏர்பு இரங்கும் ஒன்றோ; அதன்எதிர்,
கானமஞ்ஞை கடிய ஏங்கும்;
ஏதில கலந்த இரண்டற்கு என்
பேதை நெஞ்சம் பெருமலக் குறுமே.” (குறுந்: ககூச)

கார்காலம் வந்துற்றது அறிந்து வருந்துகிறாள் தலைவி; அவள் துயர்போக்கித் துணைபுரியும் கடப்பாடுடையளாய தோழி, அவளைத் தேற்றும் வழி யாது எனப் பலகால் எண்ணிப் பார்த்தாள்; யாது கூறினும் அவள் உளம்

தேருள்; கார்காலத் தொடக்கத்தே வருவேன் என்றவன், அக்காலம் தொடங்கவும் வாராளுகவே, அவள், அவன் சொல் பிழைபட்டமை ஒன்றற்கே வருந்துகிருள்; ஆகவே, அவன் சொல் பிழைபட்டிலது என்பதை அவள் ஏற்குமாறு ஏற்றது செய்தினல்லது அவள் துயர் ஒழியாது; அவன் சொல்பிழையாமை வேண்டின், இது கார்காலம் அன்ருதல் வேண்டும்; ஆனல், இது கார்காலமே; கார்காலத்து மழையும் பெய்துவிட்டது; அக்காலத்து மலரும் கொன்றையும் மலர்நதவிட்டது; இந்நிலையில் அவளைத தேற்றுதல்வேண்டின், பொய் கூறுதலன்றி வேறு வழியில்லை; வந்த மழை, கார்காலத்து மழையன்று; இது காலமல்லாக் காலத்து மழை; மழைபெய்யக் கண்ட கொன்றை, அது வம்ப மழை என்பதை அறியும் அறிவின்மையால், பூக்கத்தொடங்கி விட்டது; ஆகவே இது கார்கால மன்று; அவர் குறித்த பருவம் இன்னும் வந்திலது; அக்காலம்வரின், அவர் நில்லாது வருவர் எனப் பொய்கூறித் தேற்றிளுள்; "பொய்ம்மையும வாய்மை இடத்த புரைதீர்ந்த நன்மை பயக்குமெனின்" என்ற பொருளுரை உணர்ந்தாள்போல், பொய்கூறித் தலைவியின் துயரபோக்கிய தோழியின் கூற்றினை மற்ருெரு பாட்டில் அமைத்துப் பாடியுள்ளார் புலவர் :

"மடவ மன்ற; தடவுநிலைக் கொன்றை;
கல்பிறங்கு அத்தம் சென்ருேர் கூறிய
பருவம் வாரா அளவை, நெரிதரக்
கொம்புசேர் கொடியிணர் ஊழ்த்த
வம்ப மாரியைக் கார்என மதித்தே." (குறுந்: கூசு)

## கரு. கோவேங்கைப் பெருங்கதழ்வர்

குறியபல கற்களிடையே பருத்து வளர்ந்துளது உயர்ந்த ஒரு வேங்கைமரம்; மரம் நிற்கும் இடத்தருகே, ஓடிவருகிறது, மலையுச்சியினின்றும் விரைந்து விழும் ஓர் அருவி; வீழும் அருவியின் விரைவால் தெறித்து விழும் கற்களால் தாக்குண்டு, மலர்கள் எல்லாம் உதிர்ந்துவிடுவ தால் வெறுஞ்சினை உடையவாகிறது அவ்வேங்கை; அவ் வாறு வந்த அவ்வருவி, குறும்பொறைகள் இடையிடையே குறுக்கிடுவதால் வளைந்து வளைந்து செல்லும் காட்சி, பாம்பு செல்வதுபோல் தோன்றிக் கவின் அளிக்கிறது. இவ்வாறு காட்டும் ஒரு காட்சியில், புலவர், வேங்கையின் சிறப்பையும், அருவியின் விரைவையும் சிறப்பித்துப் பாடியுள்ளமையால், கோ வேங்கைப் பெருங்கதழ்வர் எனப் பெயரிட்டுப் பாராட்டப்பெற்றுளார்.

ஒரு தலைவன் வரைந்து கொள்ளுதற்கு வேண்டும் பொருளதேடிக் கொணர்வான்வேண்டிப் பிரிந்தான்; அவன் பிரிவாற்றது வருந்தினாள் அவன் தலைவி; அவ்வாறு வருந்துவாளை நோக்கி, "தலைவர் மணமுயற்சி மேற் கொண்டன்றோ பிரிந்துளார்; அத்தகையார் நட்பைப் பெற்ற நீ வருநதுதல் அழகன்று" என்று கூறித் தேற்ற முயன்றாள் அவள் தோழி. அதுகேட்ட தலைவி "தோழி! அருவி நிலத்தில் பாய்ந்து வளந்தந்து பயன் தருவதாயினும், இடையில், கல்லை உருட்டலும், மலர்களைச் சிதைத்தலும், அரவுபோல் தோன்றலும் ஆய துன்பந்தரும் செயலையும் உடையதாதலைப்போன்றே, தலைவன் நட்பு, இறுதியில் இன்பமே தரும் என்றாலும், இடையில் பிரிந்து செல்வதால் பெருந்துயர் தாராநின்றது; யான் வேண்டுவது இத்தகைய நட்பை அன்று; பிரியாப் பெரு நட்பைப்பெறவே என் னுள்ளம் நாடுகிறது; அந் நட்பைப் பெறமாட்டாமையால் வருந்துகின்றேன்" என்று கூறினாள். தலைவிக்கும் தோழிக்கும் நிகழ்ந்த இச்சொல்லாடல்கள், வெளிப்படை

யாகவும், உவமைவாயிலாகக் குறிப்பாகவும் விளங்குமாறு புலவர், கோவேங்கைப் பெருங்கதழ்வர் பாடிய பாட்டு குறுந்தொகைப் பாக்களுள் ஒன்றாக நின்று காட்சியளிக்கிறது :

"அம்ம ! வாழி தோழி ! நம்மொடு
பிரிவின்றாயின், நன்றுமன் ; தில்ல
குறும்பொறைத தடைஇய நெடுந்தாள் வேஙகைப்
பூவுடை அலங்குசினை புலம்பத் தாக்கிக
கல்பொருது இரங்கும் கதழ்வீழ் அருவி
நிலஙகொள் பாம்பின் இழிதரும்
விலங்குமலை நாடனொடு கலநத நட்பே."

(குறுந் : கரு௯)

# ௬௯. கோழிக் கொற்றனார்

கோழி என்பது உறையூர்க்கு ஒருபெயர்; "முற் காலத்து ஒரு கோழி, யானையைப போர்தொலைத்தலான், அந்நிலத்திற்செய்த நகர்க்குக் கோழி என்பது பெயரா யிற்று" எனபா அடியார்க்கு நல்லார்; "முறஞ்செவிவாரணம் முன்சமம் முருக்கிய புறஞ்சிறைவாரணம்" என்பது சிலப்பதிகாரம் அந்நகரிற் பிறந்து வாழ்ந்தமையால் புலவர் கோழிக்கொற்றனார் என அழைக்கபபெற்றுளளார். இவர் பெயர் கூழிக்கொற்றன் எனவும, கூளிக்கொற்றன் எனவும சில ஏடுகளில் காணப்படுகிறது

தலைவன் ஒருவன், ஒரு தலைவியை அவள் தோழியும் அறியாநிலையில கண்டு காதலித்தான், அவள் விருமபும் வண்ணம, பைஞ்சாய்க்கோரையால் பாவை பண்ணி அளித் தான்; அவள மாாபிலும், தோளிலும் தொய்யில் எழுதி மகிழ்ந்தான், இததகைய இன்பவாழ்வு, தோழியின் துணைபெறின் எளிதிற்கிடைக்கும் எனக் கருதினன்; தோழிபால்சென்று தன் குறை கூறினன்; தோழியோ, அவா தம் நட்பை அறியாளபோன்று, தலைவி இளையள; பெறுதற்கு அரியள என்றெலலாம கூறிப் போக்கிவிட் டாள; அதனல் வருநதிய அவன், எனக்கும் அவட்கும் உண்டாம் அன்பு உறவினை அறியமாட்டாத இவர், அவளை எனக்களிக்க மறுக்கின்றனர், அவளைக் காப்போர்தாம் முறையற்றவரேயன்றி, இவ்வூராள் அரசனும் முறையிலா னல்லன், அவனுக்குரிய அறங்கூறு அவையிடததே சென்று, ஆண்டுவாழ் ஆன்றோர்பால் எம் இருவர் நிலையினை யும் கூறி அவளைப் பெறுவேன; ஆண்டும் வந்து மறுக்கும் ஆற்றல் இவர்க்கு உண்டாமோ? என்று கூறினன். அவ் வாறு கூறுவதுகேட்ட தோழி, தலைவிபால் அன்புடையா னதலே அன்றி, அவளோடு தொடர்பும் உடைய இவனைத் தடைசெய்யின், மடலேறி மன்றம்படர்தலும் செய்வன் என அஞ்சி அவனுக்கு அவளை நேர உடன்படுவள் எனத் தலைவனின் கூற்றமையப் பாடிய இப்பாட்டில், புலவர்

கொற்றனார், நாட்டுமக்கள்பால் நலன் அல்லன தோன்றின், அந்நாட்டு ஆன்றோர், அல்லன நீக்கி நல்லன நாடும் நற்பண்புடையராதல முறையுடையரசன் ஆளும் நாட்டிலேயே ஆம் என்ற அரசியல் உண்மையினையும் உணர்த்தியுள்ளார்.

"பனைத்தோள் குறுமகள் பாவை தைஇயும்,
பஞ்சாய்ப் பள்ளம் சூழந்தும், மற்று இவள்
உருத்தெழு வனமுலை ஒளிபெற எழுதிய
தொய்யில காப்போர் அறிதலும் அறியார்;
முறையுடை அரசன் செங்கோல் அவையத்து
யான் தற்கடவின், யாங்காவது கொல்?
பெரிதும் பேதை மன்ற,
அளிதோ தானே இவ அழுங்கல் ஊரே."

(குறுந் : உஎசு)

## ௨௦. சங்கவருணரென்னும் நாகரையர்

நாகரையர் எனும் இயற்பெயர் பூண்ட இவர், அக்கால மக்களால் சங்கவருணர் என்றும் அழைக்கப் பெற்றுளார். சங்கவருணன் என்பதற்கு வளைவணன் என்பது தமிழ் மொழிபெயர்ப்பு ; வளைவணன் என்றொரு நாகநாட்டரசன் மணிமேகலையிற் கூறப்பட்டுள்ளான்; இவர், நாகரையர் என்ற பெயருடைமை நோக்கின், இவர் நாகநாட்டில் அரசகுடியிற் பிறந்து, தமிழகம் போந்து, தமிழறிந்தவ ராவர் என்று கொள்ளல் பொருந்தும் சோழவேந்தர்க்குப் பீலிவளை என்பாளை மணம்செய்துதந்த வளைவணனே, முடிவில் தமிழறிவு அறிந்த சான்றோனாய்த்தமிழகமடைந்து வாழ்ந்தான் ; அவன் வரலாறு விளங்கவே, மக்கள் அவனைச் சங்கவருணர் என்னும் நாகரையர் என வழங்கினர் எனக் கொள்வாரும் உளர்.

நாகரையர், தந்துமாறன் எனும் குறுநிலத் தலைவன் ஒருவனை அடைந்து கூறிய அறவுரை அரசெல்லாம் அறிந்து பின்பற்றவேண்டிய பெருமை வாய்ந்ததாம் ; "பெரிது உண்ணின், நோய் அளவின்றிப்படும்" என்ப ஆதலின், நோயற்ற வாழ்வு வேண்டும்; அரசர் மீதூண் விரும்புதல் கூடாது ; சினம், சேர்ந்தாரைச் கொல்லும் கொடுமை உடைத்து; ஆதலின், அரசர்பால் அது இருத்தல் ஆகாது ; பெரும்பொருளைச் சில சொல்லால் விளக்கு வோரே பேரறிவினராவர்; ஆதலின் அரசர் சில சொல் கூறும் ஆற்றல் உடையராதல் வேண்டும் ; நுணங்கிய கேள்வி உடையாரே, வணங்கியவாயினராதல் இயலும் ஆதலின், வேந்தராவார், அறிவன அறிந்த ஆன்றோர்பால் கேள்வி பல கேட்கும் செம்மையுடையராதல் வேண்டும் ; அரசர் எப்பொருளையும் நுணுகி அறியும் அறிவின ராதல் ஆக்கம் பெருகும் வழியாம் ஆதலின் அவர்பால் அந் நுண்ணறிவு அமைதல் இன்றியமையாததாம்; அரசர் அடைந்தாரை ஆதரிக்கும் அருள் உள்ளம் உடையராதல் வேண்டும் ; வருந்தி வருவார்க்கு உண்டற்கினிய உணவும்,

பருகற்கினிய நீரும் அளிக்கும் கொடைக்குணம் பொருந்தி நிற்றல் பெருநதிருவளிககும். எல்லார்க்கும நன்றும பணிதல் ஆதலின், பணிவுடைமையுப, கேட்டார்ப் பிணிக்கும சொல்வன்மையும், அரசாக்கு அரணும ஆதலின் அப்பண்புகளையும் அவா உடையராதல் வேணடும்; அரசர், தமக்கென வாழாப் பிறர்க்குரியராம் பண்புடையராதல், எல்லாப் பணபுகளிலும இறபப உயாந்த பண்பாய், அது அவர்பால் நிற்றல்வேண்டும. இத்தகைய பண்புகள எல்லாம ஒருங்கே வாய்ககபபெற்றவரே உயர்நத அரசராவா; ஆனால், அரசர்தம பண்பு இஃது என அறிந்த அரசர் உலகில் மிகமிகச் சிலராவர்; இப்பண்பு அறியா அரசரே மிகப்பலராவர்; இதுவே உலகியல்; அறியாதார் செல்வம் நிலையற்றுப்போம், ஆகவே, தந்துமாற! நாடோறும் நினக் குரிய ஒழுக்கததிற் குன்றுதொழிக! நின்பால் பொருள் நச்சிவருவார்க்கு வேண்டும பொருளை நிரம்ப நல்குவாயாக!" என்று கூறும புலவர்தம் பொருளுரை நாடாளும் அரசர்க்கேயன்றி நம்போலும் மக்களுக்கும் வழிகாட்டியாதல் காண்க.

"பெரிது ஆராச், சிறுசினத்தர்;
சிலசொல்லால், பல கேள்வியர்;
நுண் ணுணர்வினல், பெருங்கொடையர்;
கலுழ் நனையால், தண் தேறலர்;
கனிகுய்யால், கொழுந் துவையர்;
தாழ்உவந்து, தழூஉ மொழியர்;
பயன் உறுப்ப பலர்க்கு ஆற்றி,
ஏம மாக இந்நிலம் ஆண்டோர்
சிலரே; பெரும! கேள்இனி, நாளும்
பலரே தெய்ய அஃது அறியாதோரே;
அன்னோர் செல்வமும் மன்னி நில்லாது;
இன்னும் அற்று அதன்பண்பே; அதனால்:
நிச்சமும் ஒழுக்கம் முட்டிலை: பரிசில்
நச்சுவர நிரப்பல் ஓம்புமதி" (புறம்: ௩௬௦)

---

## ௨௧. சத்திநாதனர்

இவர் பெயர் சில ஏடுகளில் சததிநாகனர் எனவும் காணப்படுகிறது; ஒரு பெண்ணைக் கண்டு, பெருங்காதல் கொண்டுவந்த ஓர் ஆண்மகன, அவள்பால் கொண்ட காதற் பெருமையால கலங்குகின்ற நிலையினைக் கண்ட அவன் நணபன், இவ்வாறு வருநதற்காம் காரணம யாது என வினவ, "தோழ! நாணல முளைபோலும, ஒளிவீசும் பற்களையும், வளையணிந்த கைகளையும உடையாள் ஒரு இளையாள என்னை இவ்வாறு வருததினுள்" என்று கூறினன் என்ற கூற்றமைநத இவர் பாட்டு ஒன்று குறுந தொகைப பாக்களிடையே காணபபடுகிறது.

பேரறிவும், பேராற்றலும் உடைய தன்னை ஓர் இளைய மகள் வருத்திய நிகழ்ச்சிக்குப் பேருருவும, பேராண் மையும் நிறைந்த காட்டுயானை ஒன்றைப பாமபின் சிறு குட்டியொன்று வருததிய நிகழ்ச்சியை உவமை கூறிய தாகப் பாடிய பாட்டில், பாம்பின் இளமை, தலைவியின் இளமைக்கும், அதன் வளைநதவரிகள, அவள வளைநத கைவளைக்கும், அதன் கூரிய பற்கள, அவள் ஒளிவீசும் பற்களுக்கும் உவமையாகப் பாடிய பண்பு பாராட்டற் குரியதாம்.

காண்டற்குக் கவின்மிக்குத தோன்றும் பாம்பு, செயலால் கொடுமை விளைததலைபோல், பார்ப்பதற்குப் பேரழகுடையளாய தலைவி, செயலால், கொடுமை விளைத்து விட்டாள்; பாம்பு தன் பற்களால் கடித்துத துயர்தருதலை போல், இவள் தன் பல்லைக் காட்டியே துயாதந்துவிட்டாள்; எவர்க்கும் அடங்காத யானை, அரவின் சிறு குட்டியால் அணங்குற்றதேபோல், எவர்க்கும தோலா யான், இச்சிறு பெண்ணுல் பேதுற்றேன் என உவமை உரைக்குந் தொறும் விரிந்து பொருள் காட்டுமாறு பாடிய பெருமையே பெருமை!

செயலால், பாம்பும இவளும் ஒப்புமை உடையரே ஆயினும், செயல்முறையால், பாமபினும் கொடியாள் இவள என்பதையும கூறியுள்ளார், பாமபு, யானையைத் தீண்டிக் கடித்தாலன்றித் தீங்குவிளைத்தல் இயலாது; இவளோ, அணுக வாராது அகன்று நின்று பார்த்த அளவி லேயே பெருந்துயர்தரும பேராற்றல் உடையவள் என்று கூறுவதையும் நோக்குக

"உருவுகண்டு எள்ளாமை வேண்டும், உருள்பெருந் தேர்க்கு அசசாணி அன்னார் உடைத்து" என்ப ஆகலின், பாம்பு, இளையாள் இவர்தம சிறுமையும், யானை, தலைவன் இவர்தம் பெருமையும் கண்டு மயங்குதல் கூடாது என்ற பொருளும தோன்றப் பாடிய புலமை நலம் பாராட்டற் குரித்து; இததுணைப் பெரும பொருள் எல்லாம் ஒருங்கே அமையவந்த அவர் பாட்டும நான்கடியே கொண்ட சிறிய பாட்டாதல் அவர் பெருமைககு ஓர் எடுத்துக் காட்டாம:

"சிறுவெள் அரவின் அவ்வரிக் குருளை
கான யானை அணஙகி யாஅஙகு,
இளையள், முளைவாள் எயிற்றள்,
வளையுடைக் கையள் எம்அணங்கி யோளே."

(குறுக் : ககக)

---

## ௨௨. சாகலாசனார்

இவரைப்பற்றி ஒன்றும தெரிந்திலது; இவர் தாம் பாடிய பாட்டொன்றில், குட்டுவன் என்பானையும், அவன் தேர்ப்படை, குதிரைப் படைகளையும், அவனுக்குரிய கழுமலநகர்ச் சிறப்பினையும், அவன்பால் அமைந்து விளங்கும் கொடைக் குணத்தையும் எடுத்துக் கூறிப் பாராட்டி இருப்பதால், இவர், சேரநாட்டினர்; குட்டுவன் பால் பேரன்பினர் என்று கொள்ளலாம்:

"கொய்சுவற் புரவிக் கைவண் கோமான்
நற்றேர்க் குட்டுவன் கழுமலம்." (அகம் ௨௭0)

பரத்தை வீடுசென்று வந்த ஒருவன், தன் தவறு கண்டு ஒறுக்கும் மனைவிபால், நீ கூறுவதுபோல் யான் யாரையும் அறியேன் என்று கூறினான்; அதற்கு அவள், "ஐய! ஒரு நாள், குற்றமற்ற கைகளையும், பவளம்போல் சிவந்த வாயினையும், நாக்கு பயின்று அறியாமையால் வெளிப்போதரும் மழலைமொழிகளையும், யாவராலும் விரும்பப்பெறும் பண்பாட்டினையும உடைய நம் மகன் தெருவில் நடைதேர் உருட்டிக்கொண்டிருந்தான்; அந் நிலையில் அழகிய அணிபல அணிந்த ஒரு பெண் ஆண்டு வந்தாள்; வந்தவள், ஆடும் நம்மகன் நின்னையே ஒத்திருத் தலைக் கண்டாள்; உடனே, ஆங்கே யாரும் இன்மை அறிந்து அவனை எடுத்து மார்போடு அணைதது மகிழ்ந்து நின்றாள்; அந்நிலையில் "இளையவளே! ஏனோ இவ்வச்சம்; நீயும இவ னுக்குத் தாயே" என்று கூறிக்கொண்டே ஆண்டுச் சென்று, அவளை அணைத்துக்கொண்டேனாக; களவு செய் தார், தம் களவுப்பொருளோடு தம்மைக கைப்பற்றி னாரைக் கண்டக்கால், முகம்கவிழ்ந்து நிற்றலைப்போல், நிலத்தைக் கால்விரல்கிற, நாணிநிற்பாளாயினள்; அந் நிலையில் நின்மகனுக்குத் தாயாம் தன்மை அவள்பாலும் இருத்தலை அறிந்து அவளை விரும்பினேன். இஃது இவ்வா றாகவும், யாரையும் அறியேன் எனப் பொய்வழங்குதல்

அழகாமோ?'' என இடித்துக் கூறினாள். தமிழகத்து மனையொன்றில் நிகழ்ந்த மாண்புமிகு இக்காட்சியைப் பாட்டிற் படமாக்கி அகத்தில் மாட்டி அகமகிழ்ந்துள்ளார் புலவர்

"மாசில் அங்கை, மணிமருள் அவ்வாய்
நாவொடு நவிலா நகைபடு தீஞ்சொல்,
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வனைத்
தேர்வழங்கு தெருவில் தமியோற் கண்டே
கூர்எயிற்று அரிவை குறுகினள்: யாவரும்
காணுநர் இன்மையின், செத்தனள் பேணிப்
பொலங்கலம் சுமந்த பூண்தாங்கு இளமுலை
"வருகமாள என்உயிர்'' எனப் பெரிதுவந்து
கொண்டனள் நின்றோள் கண்டு நிலைச்செல்லேன்
"மாசில் குறுமகள்! எவன் பேதுற்றனை?
நீயும் தாயை இவற்கு''என யான்தன்
கரையவந்து விரைவனென் கவைஇக்
களவு உடம்படுநரில் கவிழ்ந்து நிலங்கிளையா
நாணி நின்றோள் நிலைகண்டு யானும்
பேணினென் அல்லனோ? மகிழ்ந!''

(அகம்: கசு)

## உ௩. சாத்தந்தையார்

சாத்தந்தையார் என்ற இச்சொல் சாத்தன் தந்தையார் எனப் பொருள்படுமாதலின், புலவர், சாத்தன் என்பார்க்குத் தந்தையாம் தகுதியுடையராவர் என்ப; ஆயினும் அப்பெயருடைய மகன் புலவர்க்கு இருந்ததாகக் கூறும் சான்று எதுவும் கிடைத்திலது. அதற்கு மாறாக, பதினெண்கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகிய திணைமொழி ஐம்பது பாடிய கண்ணன் சேந்தனார், நம் புலவரின் மகனாவர் என்ற வரலாறே வழக்கில் உளது. புலவர், போரவைக் கோப்பெருநற்கிள்ளி என்ற சோழர்குல இளவரசன் ஒருவனைப் பலபடப் பாடியுள்ளமையான், இவர் சோணாட்டினராவர் எனக்கோடல் பொருந்தும்.

போரவைக் கோப்பெருநற்கிள்ளி, தித்தன் என்பானின் மகனாவன்; தந்தையின் செயலிடத்தே வெறுப்புற்ற கிள்ளி, அவனூரின் நீங்கி வேறோர் ஊரில் வாழ்ந்து வந்தான்; கிள்ளி பெருங்குணமும், நற்பண்புகளும் நிறைந்த பெருந்தகையாவன் என்பதை அவன் பெயரானே அறியலாம்; போரவை கூட்டி மற்போர், விற்போர் முதலிய போர்களைச் செய்து மேம்படும் இயல்பினன் ஆதலின், போரவைக்கோ எனச் சிறப்பிக்கப் பெற்றுளான். இவன் தன்காலத்தே காவிரியின் வடகரைக்கண்ணதாய முக்காவல்நாட்டு ஆமூரில் சிறந்து விளங்கிய மல்லன் ஒருவனோடு போர்செய்து வென்று சிறப்புற்றான் போரவைக் கோவின் ஆண்மை, அழகு, பண்பு முதலாயின கண்டு அவன்பால் காதல்கொண்டார் பெருங்கோழி நாய்கன் மகளாகிய நக்கண்ணையார் எனும் நல்லிசைப்புலமை மெல்லியலாரும் எனின், இவன் பெருமையினை மேலும் எடுத்துக் கூறல் வேண்டா புலவர் சாத்தந்தையார் கிள்ளி, ஆமூர் மல்லனோடு ஆற்றிய மற்போரை நேர்நின்று கண்டு பாராட்டியுள்ளார்.

மற்போர் நிகழும் களம் நோக்கிச் செல்லும் புலவர், ஆங்குக் கிள்ளியின் படையாளர் கடல் ஒலிபோல் களித்து

மகிழ்வதையும், அவன் யானைகள் இடியொலிபோல் முழங்கி நிற்பதையும் கண்டார், அந்தோ, கிள்ளியொடு எதிர்ந்து, அவன் கையகப்பட்டு வருந்துவார் யாரோ? அவர் அவனால் இறத்தல் உறுதியாதலின் அவர் மிகவும் இரங்கத்தக்காராவர் எனக் கூறி வருந்தினார்.

“ஆர்ப்பு, எழுகடலினும் பெரிது, அவன் களிறே,
கார்ப்பெயல் உருமின் முழங்கல் ஆனாவே,
யார்கொல் அளியர் தாமே, ஆர்நார்ச்
செறியத் தொடுத்த கண்ணிக்
கவிகை மள்ளன் கைப்பட்டோரே.” (புறம் : அக)

போரவைக் கோப்பெருநற்கிள்ளியும், ஆமூர் மல்லனும் ஆற்றும் மற்போரைக் கண்டார், மற்போரில் மல்லனைப் பற்றி வெல்லத் துடிக்கும் கிள்ளியின் கைகளின் விரைவினைக் கண்டார்; ஊரில் விழா நிகழினும், மனைவி பிள்ளைப் பேற்றுப் பருவநோயால் வருந்தினும், அவ்வீரிடத்தும் சென்று உதவுதலைக் கடமையாகக்கொண்ட புலைமகன் ஒருவன், தான் செய்யத் தொடங்கிய கட்டிலை முடித்துச் செல்ல விரும்பிய நிலையில், ஞாயிறும் மறைந்துபோதலை அறியின், அவன் கைப்பற்றிய, வாரைப் பிணிக்கும் ஊசி எத்துணை விரைவும், பரபரப்பும் கொள்ளுமோ அத்துணை விரைவும், பரபரப்பும் கிள்ளியின் கைகளிடத்தே அமையக் கண்ட புலவர் அக்கைகளைப் பாராட்டி மகிழ்ந்தார் :

“சாறுதலைக் கொண்டெனப், பெண்ணீற்று உற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண்டு ஊசியின் விரைந்தன்று மாதோ
ஊர்கொள வந்த பொருநனொடு
ஆர்புனை தெரியல் நெடுந்தகை போரே.” (புறம் : அஉ)

மற்போரில் கிள்ளியின் கைவண்ணம் கண்டு களித்த புலவர், அவன் கால்வண்ணம் கண்டு களிபேருவகை கொள்வாராயினர்; கிள்ளியின் ஒருகால், ஆமூர் மல்லனின் ஆற்றல் எல்லாம் ஒருங்கே அடங்குமாறு அவன் மார்பிலே

மண்டியாக மடிந்து கிடந்ததாக, மற்றொருகால், அம் மல்லன், அந்நிலையினின்றும் தப்பி எழுதற்காகவேண்டி மேற்கொள்ளும் முயற்சிகளைக் கெடுத்து அவன் பின் புறத்தே வளைந்து கிடந்தது. இவ்வாறு மல்லனை மடக்கிப் போட்ட கிள்ளி, இறுதியில் பசித்த யானை பசிய மூங்கிலை முறிக்குமாறுபோல், மல்லனின் தலையும் காலும் முறிய மோதிக்கொன்று வென்றான்; வெற்றி பெற்று வீறெய்தி நின்ற அவனைக் கண்டு பாராட்டிய புலவர், இத்தகைய பெருவீரனை அவன் தந்தையாகிய தித்தன் காணல் வேண்டும்; கண்டால் முன்னைய வெறுப்பு ஒழிய விருப்பம் மிக்கு வியந்து பாராட்டலும் கூடும். வெறுப்பு ஒழியானாயின், இத்தகைய பேராற்றல் உடையானைப் பகைத்தல் பாழ்தரும் என அஞ்சுதலாவது செய்வன்; ஆகவே, அவன் வந்து காண்பானாக என விரும்பினார் புலவர்.

“இன்கடுங் கள்ளின் ஆமூர் ஆங்கண்
மைந்துடை மல்லன் மதவலி முருக்கி
ஒருகால் மார்பு ஒதுங்கின்றே; ஒருகால்
வருதார் தாங்கிப் பின்னொதுங் கின்றே;
நல்கினும், நல்கானாயினும், வெல்போர்ப்
போரருந் தித்தன் காண்கதில் அம்ம!
பசித்துப் பணைமுயலும் யானைபோல
இருதலை ஒசிய எற்றிக்
களம்புகு மல்லற் கடந்தடு நிலையே.” (புறம்: 80)

கிள்ளியும், மல்லனும் ஆற்றிய மற்போர் கண்டு பாராட்டிய புலவர், இயற்கையிலேயே போர்க்குணமும் வாய்க்கப்பெற்றவராவர்; புறத்தில் நெடுமொழித்துறைப் பொருள் அமையப் பாடிய அவர் பாட்டு, அவர்தம் போர் வேட்கையினை விளக்கி நிற்கிறது. கார்காலத்துப் பெரு மழைத் தாரைபோல அம்புகள் வந்து தைப்பினும், வயல் களிற் பிறழும் கெண்டை மீன்களைப்போலும் வேல் பல வந்து பாயினும், யானைகள் பல சூழவந்து தம் கோடுகளின் கூரிய முனையினை நாட்டிக் குத்தினும், களம் விடுத்து

ஓடக் கருதாமை, படையாளர்க்குப் பீடும் பெருமையும் தருவதாம் என்றும், போர்க்களத்தே வென்று, களம் வென்ற சிறப்பறிந்து, வேந்தர் அளிக்கும் வளம் நிறைந்த ஊர்களைப் பெற்று வாழும் வாழ்விலும், இறந்து விண்ணுலகடைந்து, இறவாப பேரின்பம் பெற்று வாழும் வாழ்வே பல்லாற்றானும் சிறந்ததாம் என்றும் கூறும் புலவர்தம் பொன்னுரைகள் போற்றற்குரியனவாமன்றோ.

"காலமாரியின் அம்பு தைப்பினும்,
வயற் கெண்டையின் வேல் பிறழினும்,
பொலம்புனை ஓடை அண்ணல் யானை
இலங்குவான் மருப்பின் நுதிமடுத்து ஊன்றினும்
ஓடல் செல்லாப் பீடுடை யாளர்,
நெடுநீர்ப் பொய்கைப் பிறழிய வாளை
நெல்லுடை நெடுநகர்க் கூட்டுமுதற் புரளும்
தண்ணடை பெறுதல் யாவது? படினே,
மாசில் மகளிர் மன்றல் நன்றும்
உயர்நிலை உலகத்து நுகர்ப." (புறம் : உஅஎ)

புறத்தொழுக்காம் போர்க்களம் பாடவல்ல புலவர் சாத்தந்தையார், அகத்தொழுக்காம் இல்லறப் பண்பும் பாடவல்லராவர்; அகத்துறை தழுவிய அவர் பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுள்ளது. பிறந்தகத்துப் பெரு வாழ்விலும், புகுந்தகத்து வறுமை வாழ்வே வனப்பும் வளமும் உடையதாம் எனக்கொள்வது தமிழ்க்குல மகளிர் தம் மாண்பு. அத்தகைய மாண்புடையாளொரு பெண் மலைபோல் உயர்ந்த பல நெற்கூடுகளை உடைய தன் தாய் மனை மறந்து, வெய்யிற் கொடுமையால் வெந்து, காயும இலையும் கருகி, முடமபட்ட மரங்களே காணப்படும் கொடிய வழியில் தான் விரும்பிய தலைவனோடு அவன் உள்ளம் உவக்குமாறு உடன்போந்து அவனூரில் அவனை மணந்து வாழ்வாளாயினள். அவர்தம் இன்பவாழ்க்கை இடையறவின்றிச் சென்றது சின்னாள்; ஒருநாள் தலைவன், பொருளகருதிப் பிரிய எண்ணினன்; அதைக் குறிப்பால் அறிந்துகொண்டாள் அப்பெண்; அதனல் வருத்தம்

மிக்கது; வருத்தம் மிகவே உடல் மெலிந்து வாடிற்று; அவள் கைவளை கழன்றுகும் அளவு அவள் மெலிந்துவிட்டாள்; இதைக் கண்டாள் அவள் தோழி; பிரிவான் என எண்ணியபோது இந்நிலையாயின், அவன் பிரிந்துவிடின் இவள் நிலை என்னுமோ என எண்ணினாள்; வருத்தம மிக்கது; விரைந்து தலைவன்பால் சென்றாள் "ஐய! இவள் பிறந்தகத்துப் பெருஞ்செல்வத்தை மதியாது வநதது, நின் அன்பு ஒன்றையே கருதியன்றோ? அதனையும் பெறாத வாறு பிரிந்துசெல்லின் இவள் என்னுவாள்? உற்றா உறவினரை மறந்து, உன்பின் வநத தவற்றிற்குத தணடனையோ, இன்று இவள் கைவளை கழலுமாறு மெலிநது கண்ணீர்விட விட்டுப் பிரிந்து செல்லுதல்? இந்நிலை காண யான் மிகவும் வருநதுகின்றேன" என்றெலாம் கூறிப் போக்கினைப போக்கினாள். இந்நிகழ்ச்சியைப் பாட்டாக ஆக்கிய பழந்தமிழ்ப் பெண்ணொருத்தியின் பேருள்ளம் உணரும் பெறற்கரும் பேற்றினைத தந்துள்ளார் புலவர்

"நோகோ யானே; நெகிழ்ந்தன வளையே;
செவ்வி சேர்ந்த புள்ளி வெள்ளரை
விண்டுப் புரையும் புணர்நிலை நெடுங்கூட்டுப்
பிண்ட நெல்லின் தாய்மனை ஒழியச,
சுடர்முழுது எறிப்பத் திரங்கிச, செழுங்காய்
முடமுதிா பலவின் அததம், நும்மொடு
கெடுதுணை யாகிய தவறோ? வையெயிற்றுப்
பொன் பொதிந்தன்ன சுணங்கின்
இருஞ்சூழ் ஓதிப் பெருந்தோ ளாட்கே." (நற்: உசு)

## உச. சாத்தன்

சாத்தன் எனும தெய்வப் பெயர்பூண்ட புலவர்களுள் இவரும் ஒருவர். குறுந்தொகையில், இவர் பெயரால ஒரு செய்யுள் காணப்படுகிறது ஈதற்சிறபபுணர்ந்தவர் நம் புலவா என்பது அப்பாட்டான் புலனுகிறது வறுமையால் வருந்திய ஒருவா தமபால் வநது இரநதுநின்றக்கால், அவர்க்குப பொருள ஈநது பேணுது வாழும வாழ்வினும சாதலே சிறந்தது என்ப, "சாதலின் இன்னுதது இல்லை; இனிது அதூஉம் ஈதல் இயையாக்கடை" என்று வள்ளுவப் பெருநதகையாரும வழங்குவது காண்க. வந்து இரபபாாககு வழஙகாது வாழ்வதே, இறததலினும இன்னுமை உடைத்து என்ருல், தம்பால் வநது இரந்தார்க்கு ஒரு பொருளை வழங்கியவரே, பின்னொருகால, அபபொருளைத தானென மீண்டும கேட்டுப் பெறல் மிகமிகக் கொடுமை நிறைந்த தாம். இவ்வுண்மையினைப் புலவா இனிதெடுத்துக் கூறி யுள்ளார்.

ஒரு தலைவன் பரத்தையர் ஒழுக்கம் மேற்கொண்டு விட்டான்: அதனுல் வருநதிய தலைவியின் வனப்பு இழந்தது: வாடிய மேனிகண்டு வருந்திய அவள தோழி, தலைவனைக் கண்டு, "தலைவி வருநதப பிரிநதுறை வாழ்க்கை மேற்கொண்ட நீ கவர்நதுகொணடு தலைவியின நலத்தினைத் தந்து செல்வாயாக" எனக் கேட்க விருமபினுள்; தோழியின் கருததறிந்த தலைவி, தோழிபால் "அன்புடையாய்! நீ கூறியவாறு அவன் கவர்நத நலததினை வேண்டிப் பெறலாம், ஆயினும அஃது அறமன்று; தம் வறுமை கண்டு அஞ்சி இரந்தார்க்கு அளித்த ஒரு பொருளைக் கொடுத்தவரே அபபொருளைத தருக என்று கூறுவதைக் காட்டினும் உயிரை இழத்தலே நன்றும், அவ்வாறு கூறுதல், உயிர் இழப்பினும் இன்னுதாம்; ஆகவே, நம் இன்னுயிர் கழிவதாயினும, அவர் கவர நாம அளித்த நம் நலனை அவாபால் வேண்டல் விரும்பத் தக்கதன்று"

என்று கூறினாள் எனப் பாடி ஈதற்சிறப்பினை எடுத்தோதி உள்ளமை உணர்க.

தலைவன் தவறு செய்தக்கால், அவன் தவற்றினை, அன்புமுறையால் கடிந்து போக்குதலைக் கடமையாகக் கொண்டவள் தலைவி ஆதலின், தோழிபால், அவன் தவறு கண்டு அவனைக் கடிதல அறமன்று என்பாள்போல் கூறினாளாயினும், தலைவன் தன் இல்லத்தார் வருந்தப் பிறஇடத்தே இன்பங்காணும் இழிகுணமுடையான் என்பதை, அவன், மீன்உண் பறவை, தான் அமர்ந்திருக்கும் அடும்பின் மலர் அழிய மீன் உண்ணும் கொடுமை நிறைந்த நாடுடையனவன் என, அவன் நாட்டின்மீது ஏற்றிக் கூறிப் பழித்துள்ள பண்பு பாராட்டற்குரியது.

"அடும்பவிழ் அணிமலர் சிதைஇ மீன்அருந்தும்
தடந்தாள் நாரை இருக்கும் எக்கர்த்
தண்ணந் துறைவன் தொடுத்து நம்நலம்
கொள்வாம் என்றி தோழி! கொள்வாம்;
இடுக்கண் அஞ்சி இரந்தோர் வேண்டிய
கொடுத்தவை தாவென் சொல்லினும்
இன்னாதோ நம் இன்உயிர் இழப்பே."

(குறுந் : ௩௪௯)

---

## ௨௫. சிறு மோலிகனார்

புலவர்க்கு, இப்பெயர் வருதற்காம் காரணம் இது என்பது புலப்படவில்லை. இவா பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம்பெற்றுளது. தலைவன் அன்பினை இடையறாது பெற இயலாமையால் வருந்திய தலைவி, இரவெல்லாம துயல்கொள்வதின்றி, அம்புபட்ட மான்போல், படுக்கையில் புரண்டு புரண்டு பெருமூச்செறிந்து கிடந்தாளாக, அந்நிலையில் ஆண்டுவந்த அவள தாய், அவள் துயரை அறிந்தாள்போல், "அன்பு மகளே நீ தூங்குவாயல்லையோ" என வினவினாட்குக் கூறுவன பிறர்காதுட் புகா மெல்லிய குரலால், "கானகநாடனை எண்ணிக் கருத்தழிவார்க்கு உறக்கமும உண்டாமோ" என்று கூறி, அவ்வாறு நிகழ்ந்த அந்நிகழ்ச்சியைத் தன் தோழிக்கு உரைததாள் எனப் பாடிய பாடற்பொருள் பாராட்டற் குரியதாம்.

"கேளாய் எல்ல தோழி! அல்கல்
வேணவா நலிய வெய்ய உயிரா
ஏமான் பிணையின் வருந்தினேனாகத்
துயர் மருங்கறிந்தனள் போல அன்னை
துஞ்சாயோ என் குறுமகள் என்றலின்
சொல்வெளிப் படாமை மெல்ல என்னெஞ்சில்
......... ........... ..... ..... .................
கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக்
கண்ணும் படுமோ என்றிசின் யானே."

(நற் : ௬௧.)

## உசு. சுள்ளம்போதனார்

சுள்ளம்போது என்பது ஓர் ஊர்; அவ்வூரினராய இவர் மதுரை புக்கு வாழ்ந்தமையால் மதுரைச் சுள்ளம் போதனார் என அழைக்கப்பெற்றார். இவர் நெய்தல் நில இயல்பினை நன்கு விளங்கப் பாடியுள்ளார.

மகளிர் விளக்கேற்றி மலர் தூவி மாலையை வரவேற்றல் நம் பழந்தமிழ்ப் பண்பாடாம்; இதைக்கூறும் நம் புலவர், கையில் வளை ஒலிக்க, விளக்குகளை எடுத்து, அவற்றுள் மீனினின்றும் கொண்ட கொழுப்பாகிய எண்ணெய் ஊற்றி ஏற்றிய ஒளியினால் தங்கள் வீடெல்லாம் விளக்கம்பெறச் செய்து மாலையை வரவேற்பர் என்று கூறுகிறார்; மீன்களி னின்றும் எண்ணெய் எடுக்கும் இக்காலத்தைப் போன்றே அக்கால மக்களும் மீன் கொழுப்பினின்றும் எண்ணெய் எடுத்துப் பயன்பெற்றனர் எனவும் கூறுகிறார்.

> "மாலை, இலங்குவளை மகளிர், வியன்நகர் அயர
> மீன்நிணம் தொகுத்த ஊன்நெய் ஒண்சுடர்."

வலைகொண்டு வேட்டமேற் சென்ற பரதவர், கடலில் தாம் விரித்த வலையுட் புகுந்து, அதைக் கிழித்துச் சென்றது சுறாமீன் என அறிந்து, அச்சுறாவினைக் கைக் கொண்டன்றி வீடுதிரும்பபோம் என உறுதிபூண்டு அவ் வாறே முயன்று கைப்பற்றித் திரும்புவர் எனப் பரதவர் களின் கடல் வாழ்க்கையினையும் விளக்கியுள்ளார்:

> "கொடுமுடி அவ்வலை பரியப் போகிய
> கோட்சுறாக் குறித்த முன்பொடு
> வேட்டம் வாயாது எமர் வாரலரே." (நற்: உகரு)

---

# உஎ. செங்கண்ணனார்

செங்கண்ணனார் என்ற இப்பெயர், புலவர்க்கு உறுப்புப் பற்றிவந்த பெயரன்று; செங்கண்ணனார் என்ற பெயரை அக்கால மக்கள் பலரும் தம் இயற்பெயராகக் கொள்ளும் வழக்கினராவர். இவர் பாடிய பாட்டாக நமக்குக் கிடைத்தது ஒன்றே, அது அகநானூற்றில் வந்துளது.

தலைவன் பொருள்வயிற் பிரியக் கருதினான்; அவ்வாறு அவன் பிரிதல் அறநெறியாம எனவுணர்ந்தும், அவன் பிரிவாலாம் துயர் பொறுக்கமாட்டாது வருந்தினாள் தலைவி; வருத்தத்தால் உடல் மெலிய, வளை கழலவும் ஆயின; கண்கள் நீர்காலவும் தொடங்கின; ஆனால் அவன் போகும் காலத்தே தான் இவ்வாறு துயருற்ற காட்சியோடு அவன்முன் நின்று வழி அனுப்புதல நன்றன்று என்று எண்ணிய உள்ளத்தளாய்த் தன் துயரினை மறைக்க முனைகின்றாள்; ஆனால், அஃது அவளால் இயலாதுபோயிற்று. இதனால் தான் வருந்துமெ வருத்தம் புறத்தே புலனாகாவாறு மறைத்தாவது செல்வேம என்ற நோக்கினளாய், வளைகழலுதல் அறியாவாறு அதை மேலேற்றிச் செறுத்துக்கொண்டாள்; கண்ணீர் தெரியாவாறு தலை கவிழ்த்துக்கொண்டாள்; நிலத்தைக் கால்கள் கீற அவன் முன் அமைதியாக நின்றாள். அவ்வாறு நிற்கும் அவள் நிலையினையும், அவள் மனத்துயரையும் அறியாதவனல்லன் தலைமகன்; அவன் அவள் நெற்றியைத் தடவிக்கொடுத்தும், மயிரைக் கோதிவிட்டும் அன்புரை பல வழங்கி, அவள் உள்ளத்தை ஒருவாறு தேற்றிப் பிரிந்தான். பிரிந்தானேனும், அவன் உள்ளத்தே தன் மனைவியின் துயருறு நிலை நின்று நிலைபெற்றுவிட்டது. ஆகவே உள்ளம் சோர்ந்தான்; உள்ளச்சோர்வால் வழிநடையும் அரிதாயிற்று; தளர்ச்சி நீங்க ஓரிடத்தே சிறிது படுத்தான்; உறங்கியும் விட்டான்; நனவே, கனவாம் என்ப ஆதலின் அவனைப்

பிரிந்தவழிக் கண்ட காட்சி கனவாகத் தோன்றிற்று; அக்காட்சியில் அவளைத் தேற்றிப் பிரியத் தான் வழங்கும் இன்புரைகளால் அவள் தேறினளாகத் தோன்றிய நிலையினைக் காணுங் காலததே கனவு அழிந்தது; மீண்டும் வருத்தம் குடிகொண்டது; இந்த நிலையில் அவன் எவ்வாறோ தான் மேற்கொண்டு சென்ற வினையினை முடித்துக் கொண்டு வீடு வந்து சேர்ந்தான்.

வந்தானைக் கண்டு மகிழ்ந்த தலைவி, தாங்கள் சென்ற வழியில், என்னையும் என் நிலையினையும் எண்ணிப் பார்த்தலையாவது செய்ததுண்டோ? என்று கேட்டாள்; அவன் தன் நினைப்பினனாயின் அவனால் வினைமுடித்து மீளுதல் இயலாது; அவனே வினைமுடிதது விரைவில் மீண்டுளன். ஆகவே, அவன் தன்னை எண்ணியிருத்தல் இயலாது என்ற எண்ணமுடையவளாதலாலும், தன்பால் கொண்ட அன்பின் மிகுதியினாலேயே அவன் அரிதின் முயன்று விரைவில் வினைமுடித்து வந்துளான் என்பதை அறியாளாதலாலும் அவ்வாறு கேட்டாள். அவ்வாறு அவள் கேட்டாளாக, அவன் வழியில் அவள் நினைவால் கனவிலும் வருந்திய வருத்த மிகுதியினை எடுத்துக்கூறி இவ்வாறு இருவர் உள்ளமும் ஒன்றாகவும், வேறுபடுத்திக் கூறுவது நன்றன்று என்றுகூறி மகிழ்வித்தான்; இச் சின்னஞ்சிறு நாடகததைப் புலவர் நன்கு நடித்துள்ளார் தம் பாட்டின்வழி.

இதில் தலைவன் உள்ளம், ஒழித்தது பழிக்கும் உள்ளம் என உயர்த்திக் கூறுவது மிகவும் அழகுடையதாம். உலக நீதிகள் எல்லாம் இவற்றைச் செய்க எனச் சில விதிகளை விதிக்கும்; இவற்றைச் செய்யற்க எனச் சிலவற்றை விலக்கும்; ஒன்றையே வற்புறுத்தற்பொருட்டு இதைச் செய்க எனவும், இதைச் செய்யாது ஒழியற்க எனவும் விதித்தல் வாய்பாடாகவும் விலக்கல் வாய்பாடாகவும் கூறும்; இவற்றுள் செய்யக் கூடாதனவே பலவாம்; ஆதலின் தலைவனைக் கூறுங்கால், உயர்ந்தோர் கூடாதன என ஒழித்தனவற்றைத் தானும் பழிக்கும் பண்புடையவன் என்று கூறிப் பாராட்டினார்.

"ஒழித்தது பழித்த நெஞ்சமொடு, வழிப்படர்ந்து
உள்ளியும் அறிதிரோ எம்? என, யாழநின்
முள்ளெயிற்றுத் துவர்வாய் முறுவல் அழுங்க
நோய் முந்துறுத்து, நொதுமல் மொழியல்; நின்
ஆய்நலம் மறப்பெனோ?
.................. ........... ..
கட்படர் ஓதி! நிற்படர்ந்து உள்ளி
அருஞ்செலவு ஆற்றா ஆரிடை, ஞெரேரெனப்
பரந்துபடு பாயல், நவவி பட்டென
இலங்கு வளைசெறியா, இகுத்த நோக்கமொடு
நிலங்கிளை நினைவினை நின்ற நிற்கண்டு
இன்னகை இனையமாகவும், எம்வயின்
ஊடல் யாங்குவந் தன்றுஎன யாழநின்
கோடேந்து புருவமொடு, குவவுநுதல் நீவி
நறுங்கதுப்பு உளரிய நன்னா அமையத்து
வறுங்கை காட்டிய வாயல் கனவின்
ஏற்று ஏக்கற்று உலமரல்
போற்றாய் ஆகலின், புலத்தியால் எம்மே." (அகம்: ௩௯)



# உஅ. செம்பியனர்

செம்பியன் என்ற சொல், கிள்ளி, வளவன் என்ற சொற்களைப்போன்றே, சோழரைக் குறிக்க வழங்கும் பெயராம்; அது சிபியின் வழிவந்தவன் எனப் பொருள் படும் என வரலாற்று நூலாசிரியர்கள் கூறுவதால், புலவர் செம்பியனர், சோழர் குடியோடு தொடர்புடையராவர் என்பது தெளிவாம். கிளைவிடுதூது அமைந்த அழகிய பாட்டொன்று இவர் பெயரால் நற்றிணைக்கண் இடம் பெற்றுளது.

இரவினும், பகலினும் இடையறாது வந்து தலையளி செய்யும் தலைமகன், இடையே சின்னாள் வாராளுகவே வருந்திய தலைவி, தன் தினைப்புனத்துட் படிந்து கதிர்களைக் கொய்துசெல்லும் கிளிகளை விளித்து, "என் புனத்துக் கதிர்களைக் கொய்துபோகின்ற செவ்வாய்ப் பசுங்கிளளாய்! இக்கதிர்களைக் கொய்யும நின்னை யாரேனும் அச்சுறுத் துவர் கொல்லோ என அஞ்சுவது ஒழிக! வேண்டிய உணவையெல்லாம பெற்று நின்குறையெல்லாம் முடித்த பின்னர், ஒழிவு எய்தியகாலததே என் குறையினைக் கேட்டுப் போகித் துணைபுரிய வேண்டுகிறேன்; இதைச் செய்து தருமாறு நின்னை என் இரு கைகளையும குவித்துத் தொழுது இரந்து வேண்டிக்கொள்கிறேன்; பலாமரங்கள் பழுத்துப் பயன்தரும எம தலைவர் நாட்டுறை நின் சுற்றத் தினிடதது நீ ஒருபொழுது செல்லுவையாயின், ஆண்டுறை எம தலைவர்பால், ஈங்கே இக்கானவர் மகளாகிய யான், மீண்டும் தினைப்புனக்காவல் மேற்கொண்டுளதை அறிவிப் பாயாக! இஃதொன்றே நின்னை யான் வேண்டுவது," எனக் கூறினுள் எனப் பாடிய அப்பாட்டு படித்து இன்புறற் குரியதாம்.

கிளியின் உள்ளம் தன் வேண்டுகோடலை ஏற்றுக் கோடற்பொருட்டு, அது விரும்பும உணவைப்பெற அனு மதித்ததும், அவ்வேண்டுகோடலை ஏற்றுக்கொள்வதால் அதன் தொழில் கெடாமை குறித்து, அதன் தொழில்

எல்லாம் முடிந்தபின்னர், அது தன் இனம் தேடிச் செல்லின், அக்காலை அவ்வினை முடிக்கவேண்டியும், ஆண்டுச்செல்லும் விருப்பம் அதன் உளத்தே உண்டாமாறு அவர் உறைநாடு நின் இனம் உறைநாடு மட்டுமன்று, நீ விரும்பி உண்ணும் பலா முதலாம் பழங்களும் நிறைந்தது என்று உரைத்தும் தன் குறை முடிக்க வேண்டினாள் தலைவி எனப்பாடிய புலவர் தம் புலமைநலத்தினைப் போற்றுவோமாக.

"கொடுங்குரல் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி!
அஞ்சல் ஓம்பி, ஆர்பதம் கொண்டு
நின்குறை முடித்த பின்றை, என்குறை
செய்தல் வேண்டுமால், கைதொழுது இரப்பல்;
பல்கோட் பலவின் சாரல் அவர்நாட்டு
நின்கிளை மருங்கிற் சேறி யாயின்,
அம்மலை கிழவோர்க்கு உரைமதி, இம்மலைக
கானக் குறவர் மடமகள்
ஏனல் காவல் ஆயினள் எனவே." (நற்: ௧0௨)

---

## உ௪௰. சேந்தன் கண்ணனார்

சேந்தன் என்பார்க்கு மகனாய்க், கண்ணனார் எனும் இயற்பெயர் பூண்டு பிறந்தமையான் இப்புலவர் சேந்தன் கண்ணனார் என அழைக்கப்பெற்றுள்ளார்; இப்பெயர், சேந்தன் எனும் தந்தை பெயரின் ஈற்று அன்கெட ஆண்டு அம் எனும் சாரியை வந்துநிற்க சேந்தங்கண்ணனார் எனும் வடிவிலும் வழங்கப்பெறும். புலவர் சேந்தங்கண்ணனார், பாடிய இருபாக்களும் நெய்தல்நிலத்தையே பாராட்டி யிருப்பதாலும், பெரிய கடலிடையே புகுந்து, ஆண்டு உலாவும் சுறுமீன்களுக்கு அஞ்சாது மூழ்கி, வலம்புரி முத்துக்களை வாரிக்கொணரும் பரதவர், மாலைக்காலத்தே, சங்கு முழங்கும் கொற்கைத் துறையிடத்தே, கரையில் உள்ளார் மகிழ்ந்து ஆரவாரம் செய்து வரவேற்கக் கரை சேர்வர் எனக் கொற்கைத்துறையினையும், ஆண்டுநிகழ் முத்துக்குளியல் தொழிலையும் சிறப்பித்துப் பாடியுள்ளமை யாலும், இவர், பாண்டிநாட்டில் கொற்கைத் துறையினைச் சேர்ந்த நெய்தல்நிலத்தவராவர் எனக் கோடல் பொருந்தும்.

> "இலங்கிரும் பரப்பின் எறிசுறு நீக்கி,
> வலம்புரி மூழ்கிய வான்திமில் பரதவர்
> ஒலிதலைப் பணிலம் ஆர்ப்பக் கல்லெனக்
> கலிகெழு கொற்கை எதிர்கொள இழிதரும்."
>
> (அகம் : ௩௫0.)

தன்னைக் கண்டு காதலித்து அன்புகாட்டிய தலைவன் வாராதொழியக் கண்டு வருந்திய நெய்தல் நிலப்பெண் ஒருத்தி, "கரிய கால்களையுடைய வெளிய நாராய்! நீ, நின் சுற்றத்தோடு சென்று வளைந்த நீர்ப்பரப்பிலுள்ள இரையை அருந்திப் பறந்து வருதலையே விரும்பினையாயினும், நின் இனத்தோடு சிறிது பொழுது ஈண்டு இருந்து, யான் கூறும் சில சொற்களைக் கேட்பாயாக! தலைவன் பிரியத் தனித் துறையும் எனக்கு இம்மாலைக்காலம் பெரிதும் வருத்தம் தருவதாயுளது; என்மாட்டுப் பேரன்புடைய நீ, இதை

அறிவையாயின், மனவேறுபடாமலும், மறக்காமலும், என் நிலை இது என்பதை, தழை உடுப்பார் தமக்கு வேண்டும் தழைகளைக் கொய்தற்பொருட்டுத் தழைத்து விளங்கும் ஞாழல், கடல்அலைகளை அணைத்துநிற்கும் கண்டல் மரங்கள் நிறைந்த உன் கடற்கரைக்குரியான்பால், அவன் உணருமாறு உணர்த்துவாயாக," எனக் கூறிவிடும் நாரைவிடுதூது, நயம்மிகச் செறிந்து, புலவர்தம் நாவன்மைக்கு நற்சான்று அளித்து நிற்கிறது.

"வளைநீர் மேய்ந்து கிளைமுதல் செலீஇ
வாப்பறை விரும்பினை ஆயினும், தூசசிறை
இரும்புலா அருந்தும் நின்கிளையொடு சிறிதுஇருந்து
கருங்கால் வெண்குருகு! எனவ கேண்மதி;
பெரும்புலம் பின்றே சிறுபுன் மாலை;
அதுநீ அறியின், அன்புமார் உடையை,
நொதுமல் நெஞ்சம் கொள்ளாது, என்குறை
இற்றாங்கு உணர உரைமதி! தழையோர்
கொய்குழை அரும்பிய குமரி ஞாழல்
தெண்திரை மணிப்புறம் தைவரும்
கண்டல் வேலிநும் துறைகிழ வோற்கே."

(நற் : ருச.)

## ௯௦. சேந்தன் கீரனார்

கீரனார் எனும் இயற்பெயருடைய இவர், சேந்தன் என்பார்தம் மகனாய்ப் பிறந்த மாண்புடைமையால், சேந்தன்கீரனார் என அழைக்கப்பெற்றுள்ளார்; இவர் பாடிய அகத்துறைப் பாட்டொன்று குறுந்தொகைக்கண் இடம் பெற்றுளது.

தனக்கும் தலைவற்கும் இடையே உண்டாம் காதலொழுக்கம ஊராரான் அறியப்பெற்று அலராய்ப் பழிக்கப் படலாயிற்று. ஆகவே, தலைவன் விரைந்து வரைந்து கொள்ளும் முயற்சியுடையோனாகுக என்பதை அத்தலைவனுக்கு உணர்த்த விரும்பிய ஒரு தலைவி, ஒரு நாள் அவன் தன் மனைப்புறத்து மதிலைச் சார்ந்து நின்றானாதல் கண்டு, தோழியிடம கூறுவாள்போல், அவன் கேட்குமாறு, "தோழி! தலைவன் ஏறிவரும தேரொலி எங்கே பிறர்க்குக் கேட்டுவிடுமோ என அஞ்சிய பாகன், ஒலி எழாவாறு மெல்லச் செல்லுமாறு அடக்கவும, குதிரைகள அடங்காது சென்றதாக, அதனால் எழுந்த ஒலியால், தலைவன் நம் மனைப்புறம் வந்து சேரலை, இரவில் மலர் கொய்யச் சென்ற நம் ஆயத்தார் அனைவரும் அறிநதுவிட்டனர், நம் தோழிமாருள் ஒருத்தி அறிநதவழியே, ஊரெல்லாம் அலர் எழும் என்ப; அவர்கள் அனைவரும் ஒருங்கறிநத இந்நிலையில் அலர் ஒய்தல் அரிதினும் அரிதாம; இதற்கு யான் என் செய்வேன்?" என்று கூறினாள எனப் பாடிய பாட்டு பெண்ணுள்ளம் தோன்றப் பாடிய பெருமையுடைத்தாதல் காண்க.

"அலர்யாங்கு ஒழிவ? தோழி! பெருங்கடல்
புலவுநாறு அகன்துறை வலவன் தாங்கவும்
நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர்
யான் கண்டனனோ இலனோ; பானாள்
ஓங்கல் வெண்மணல் தாழநத புன்னைத்
தாதுசேர் நிகர்மலர் கொய்யும்
ஆயம் எல்லாம் உடன்கண் டன்றே." (குறுந் : ௩௧௧)

## ௩௧. தத்தங் கண்ணனார்

இவர் இயற்பெயர் கண்ணன்; இவர் தந்தை பெயர் தத்தன்; மதுரைப் புலவர்களுள் இவரும் ஒருவர். இவர் இயற்றிய ஒரு செய்யுள் நெடுந்தொகை, நித்திலக் கோவைக்கண் இடம் பெற்றுளது. அருள், பொருள் ஆகிய இரண்டின் இயல்பினை நன்குணர்ந்தவர் இவர்.

"அருள் என்னும் அன்பீன் குழவி, பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு," என்று கூறுகிறார் திருவள்ளுவனார். அன்பின் வழியே அருள் பிறந்ததாயின், அவ்வருள் பொருளின் துணைகொண் டன்றி வாழ்தலோ, வளர்தலோ இயலாது; அருள் உள்ளம் உடையார், பொருளையும பெற்ற வழியே, தம் அருள் நிறைவேறப் பெறுவர், பொருளபெறாது, அருள் மட்டும் பெற்றவர், தமமால் அருள் செய்யப் பெற்ற உயிர்களின் உறுதுயர் போக்கித் துணைபுரிதல் இயலா தாம். ஆகவே அருளுடையார் பொருளையும் உடன் பெற்றிருததல் வேண்டும். இந்த அரிய உண்மையை— அருளினும் பொருளே சிறப்புடையதாம் என்பதை - தலை மகன் ஒருவன் வாயில் வைத்துக் கூறியுள்ளார் நம்புலவா.

"இருள்படு நெஞ்சத்து இடும்பை தீர்க்கும்
அருள் நன்கு உடையராயினும், ஈதல்
பொருள் இல்லோர்க்கு அஃது இயையாதாகுதல்
யானும் அறிவேன்மன்."

(அகம் : ௩௩௫)

இப்பாட்டில் கமுகின் குலையினை விளங்கக் கூறிப் பாராட்டும் பண்பு படித்து இன்புறற்குரியதாம்.

---

## ௯௨. திருத்தாமனார்

தாமன் என்பது இவரது இயற்பெயர்; திரு என்பது அவரது சிறப்பைக் குறித்து நிற்கிறது. இவர், சேரமான் வஞ்சன் என்பானையும். அவனுக்குரிய பாயல் மலையையும் பாராட்டிப் பாடியுள்ளார் என்பதல்லது பிற எதுவும் தெரிந்திலது.

தாமனார் பாராட்டிய வஞ்சன், சேர வேந்தருள் மிகவும் பழையோனாவன்; "சேரரது வஞ்சிக்களம், அஞ்சைக் களம் என்றானது போல, வஞ்சன் பெயரும் பிற்காலத்தே அஞ்சன் என்றாயிற்று; வஞ்சனது பாயல்நாடு, பின்னர் வயனாடென்றாகி, இப்போது வைநாடு (Introduction of B. L. Rice to Coorg Inscriptions Vol. I. P. 3.) என வழங்குகிறது; பாயல்மலைப் பகுதியில் வஞ்சனுக் குரியதாயிருந்த குன்று, அஞ்சன் குன்று என்றிருந்து, இப்போது அஞ்சுகுன்னு என்ற பெயருடன் வைநாடு தாலுக்காவில் உளது. இவனது ஆட்சியின் கீழிருந்த நாடு, வடக்கே பாயல் நாட்டிலிருந்து தெற்கே திருவிதாங் கூர் அரசைச் சேர்ந்த அஞ்சனாடு முடிய இருந்தது; வட பகுதியில் அவன் பெயர் மறைந்ததாயினும், தெற்கில் அப் பெயர் மறையாது அஞ்சனாடு என்றே இப்போதும் வழங்குகிறது. இப்போதுள்ள நீலகிரி ஜில்லாவும் வய னாட்டோடு சேர்ந்திருந்து கி. பி. 1887ல் தான் பிரிந்தது. இது நீலகிரி எனப்படுவதும், இடைக்காலக் கல்வெட்டு அஞ்சனகிரி என்பதும் நோக்கின், இந் நீலகிரி ஒரு காலத்தே சேரமான் வஞ்சனுக்கு உரியதாயிருந்தது தெரிகிறது," என்று ஆராய்ந்து கூறுகிறார் திரு. ஒளவை. சு. துரைசாமிப் பிள்ளையவர்கள்.

வஞ்சனுக்குரிய பெரும் பெயர் மூதூர்க்கண், நண்ப ராேனார் செல்லுதல் இயலுமே யன்றிப் பகைவர் எவரும் புகுதல் இயலாது; அந்நகர் அத்துணைக் காவலையுடையது; அவனும் அத்துணைப் பேராற்றல் உடையவன்; அம்மூதூர்

மன்றம், வஞ்சனைப்பாடிப் பரிசில்பெறும் உளத்தோடு வந்து குவியும் பாணர் முதலாம் இரவலர் என்றும் பிரியாது வாழும் பெரும் பந்தலை உடைத்து; வஞ்சனும் வருவார் தம் வரிசையறிந்து வழங்கும் வண்மையாள னவன்; வாய்மொழியால் சிறந்தவன்; இரப்பார் சில சொல் கூறுமுன்னரே, அவர் உளம் அறிநது அளிக்கும் அறிவுடையான்; தன் நாடு நோக்கி வருவார் தம் வறுமை யும் வாட்டமும் ஒழிய, வளமும வனப்பும் மிக, வருவாரை அகமும் முகமும் மலர வரவேற்று, அவர் தம கிழிந்த ஆடைகளை அகற்றி, புகை பரந்தது போலும் மெல்லிய நல்லாடை நல்கி, கள்ளும் கறியும் கனிமிகு சோறும அளித்து, ஆரமும் மணியும் அணிவித்து விடுக்கும் அருட்கொடை உடையவன். வஞ்சனுக்குரிய இவ்வகையில் புகழ்களை யெல்லாம் எடுத்துக் கூறி வாயாரப் புகழ்கிறார், புலவர் திருததாமனா.

"பரிசிலா வரையா விரைசெய் பந்தர்
வரிசையின் நிறுதத வாய்மொழி வஞ்சன்
நகைவா குறுகினல்லது பகைவர்க்கும்
புலியினம் மடிந்த கல்லளை போலத்
துன்னல் போகிய பெரும் பெயர் மூதூர்."

"சிறிதிற்குப் பெரிதுவந்து
விரும்பிய முகத்தனுகி, என் அரைத்
துரும்புபடு சிதாஅா நீக்கித் தன் அரைப்
புகை விரிந்தன்ன பொங்குதுகில் உடீஇ
அழல்கான்றன்ன அரும் பெறல் மண்டை
நிழல்காண் தேறல் நிறைய வாக்கி
யான் உண அருளல் அன்றியும், தான் உண்
மண்டைய கண்ட மான்வரைக் கருனை
கொக்குகிர் நிமிரல் ஒக்கல் ஆர
வரையுறழ் மார்பின் வையகம் விளக்கும்
விரவுமணி ஒளிர்வரும் அரவுஉறழ் ஆரமொடு
புரையோன் மேனிப் பூத்துகிற் கலிங்கம்
உரை செல அருளி யோனே."

புலவர் திருத்தாமனார், இயற்கையின் நலங்களை எழில் பெறப் பாடவல்லவராவர்; அவர் காட்டும் வைகறைக் காட்சி காணக் கவின் சிறந்து விளங்குகிறது ; இரவெல்லாம் பேரொளி தந்த வெண்ணிலா மறைகிறது ; வெள்ளி சிறிது சிறிதாக உயர்கிறது ; கோழிகள் நாழிகை அறிந்து கூவத் தொடங்கின ; பொய்கைகளில், தாமரை முதலாம் மலர்கள் மலர்ந்து மணங்கமழலாயின ; பாணர், தம் கையில் யாழ் இசைத்து பண் பாடலாயினர் ; இந்நிலையில் இரவு கழிய வந்துற்றது வைகறை எனக் காட்டும் காட்சியினைக் கண்டு களிப்போமாக :

" மதிநிலாக் கரப்ப, வெள்ளி ஏர்தர,
வகைமாண் நல்லில்..................
பொறிமயிர் வாரணம் பொழுது அறிந்து இயம்பப்,
பொய்கைப் பூ முகை மலரப், பாணர்
கைவல் சீறியாழ் கடன் அறிந்து இயக்க
இரவுப்புறம் பெற்ற ஏம வைகறை."

(புறம் : ௩௯௮)

## ௯௯. தீன்மிதி நாகனார்.

இவர் பெயர், தீன்மிதிநாகன் எனவும், தீன்மதிநாகன் எனவும், தீமிதிநாகன் எனவும் பல்வேறு வகையாக எழுதப்பட்டுள்ளன; நாகன் என்ற இவர் பெயர், இவர் குறிஞ்சி நிலத் தொடர்புடையாராவர் என்பதை உணர்த்துகிறது; இவர் பாடிய பாட்டொன்றும், அக்குறிஞ்சி நில ஒழுக்கமே தழுவி வந்திருப்பது மேற்கொண்ட முடிவை உறுதி செய்கிறது.

தன்னைக் காதலித்த தலைவன் வரைந்துகொள்ள எண்ணாது, களவொழுக்கமே விரும்பி ஒழுகுவதால் உண்டாம் துயரெண்ணி வருந்திய ஒரு தலைமகள், அவ்வருத்த மிகுதியால், உடல் வனப்பிழந்து வாடினாள்; தன் மகளைப் பேணிக்காக்கும்பேரன்பினளாய தாய், அவள் வாட்டத்திற்காம் காரணம் இது என்பதை எளிதில் அறிந்து கொள்ளும் ஆற்றலுடையளாவள்; அவள் அஃதறியின், தலைவியின் ஒழுக்கத்திற்குக் கேடுண்டாம்; அவள் அறியா வண்ணம் காத்தலோ அரிது; இதை உணர்ந்தாள் தலைவியின் தோழி; தலைவியின் கற்பொழுக்கம் கெடாமைக் காத்தலைக் கடமையாக உடையவள் அவள்; இதற்கு வழி, தலைவன் அவளை விரைவில் வரைந்து கொள்வதே என உணர்ந்தாள்; உணர்ந்ததனைத் தலைவனுக்கு உணர்த்த விரும்பினாள்; ஒரு நாள், தலைவன், அவர்கள் வீட்டின் புறத்தே வந்து, அவர்கள் வருகையினை எதிர்நோக்கி நின்றிருந்தான், இதை உணர்ந்த தோழி, அவன் கேட்குமாறு, தலைவியை நோக்கி, "தோழி! நின்வாடிய தோள், வனப்பிழத்தற்குக் காரணம், இது என்பதை நம் தாய் எளிதில் உணர்வள்; ஒரோ வழி, அவள் அஃது அறியாளாய், அதற்காம் காரணம் யாது என வேலனைக் கேட்பின், அவன், முருகனால் வந்தது; ஆகவே வெறியெடுக்க என்றே கூறுவன்; நம் தாயும் அவன் கூறியதை உண்மையென்றே கொள்ளின் நம் வீட்டில் வெறியாட்டு நிகழ்தலோ உறுதி; மகளுற்ற நோய், மன நோய் என

அறியும் மாண்பிழந்து நம் தமர் மேற்கொள்ளும் அறிவிலாச் செயலைக் காண நம் தலைவர் ஆண்டு வருவாராக! என்று கூறினாள். தாயின் அறியாமை கண்டு நகைப்பாள் போல், தலைவன் வரைந்து கொள்ளாமையால், தலைவிபடும் துயரம் இது; அதைத் தாயும் அறிந்துளாள்; அவள் அத்துயர்க்காம் காரணம் இஃது என அறியின் ஏதம் உண்டாம்; அவள் அஃதறியா முன்னர் வரைந்து கொள்வது தலைவன் விரைந்து மேற்கொள்ள வேண்டிய கடமையாம் என்பதை அறிவுறுத்திய தோழியின் அறிவாற்றல் புலப்படப் பாடிய புலவர், தலைவிக்குண்டான நோய், ஆராய்ந்து காண்பார்க்கே தலைவன் தந்த நோய் எனப் புலப்படும்; ஆராயும் அறிவின்றிக் காண்பார்க்கு, அது முருகனால் வந்தது என்றே புலப்படும்; அத்தகைய நோய் தரும் ஆற்றல் உடையவன் தலைவன் என்பதைத் தலைவன், வாளா நோக்குவார்க்கு, கைகரந்த பிடி போன்ற தோற்றத்தையும், ஆய்ந்து அறிவார்க்குத் தன் உண்மைத் தோற்றத்தையும தரும் துறுகல் நிறைந்த நாடுடையவன் என்று கூறுவதால் விளங்க வைக்கும் புலமைத்திறம் பாராட்டற்குரியதாம்.

"மென்தோள் நெகிழ்த்த செல்லல், வேலன்
வென்றி நெடுவேள் என்னும்; அன்னையும்
அது என உணருமாயின், ஆயிடைக்,
கூழை இரும்பிடிக் கைகரந்தன்ன
கேழிருந் துறுகல் கெழுமலை நாடன்
வல்லே வருக தோழி! நம்
இல்லோர் பெருநகை காணிய சிறிதே."

(குறுந் : ககக)

## ௩௪. துறைக்குறுமாவிற் பாலங்கொற்றனர்

கொற்றனர் எனும் இயற்பெயரினராய நம்புலவர், தம் பெயர்க்கு முன்னே, சிறப்பளிக்கும் சொற்கள் பலவற்றைப் பெற்றுளாராயினும, அவற்றுள் எதுவும அவர் வரலாறு உணர்த்தும நெறியில், துணைபுரியும் ஆற்றலுடையதாய்க் காணப்பெறவில்லை. பொருள்வயிற் பிரிவே பொருளாகப் பாடியுள்ளமையானும், அழகிய காதணி ஒன்றை உவமை யாகக் கூறியுள்ளமையானும், புலவர், வணிகர்குலத்து வந்தவரோ எனக் கோடற்கும் இடமுண்டாம் என்ப; இவர் பெயரால் நற்றிணைக்கண் ஒரு பாட்டு உளது.

தலைவன், கொடிய மலைவழிகளைக் கடந்து சென்றுளான்; அவன் பிரிவால் தானுறுதுயரினையும், அவன் சென்ற மலைவழியின் கொடுமையினையும் எண்ணி எண்ணி வருந்தினள் தலைவி; அவரை, அம்மலைநெறியிற் போக்கி விட்டு வாழ்வதினும், என் உயிர் வாழாமையே நன்றும்என்று கூறி விம்மி, விம்மி அழத் தொடங்கிவிட்டாள்; அவள வருத்தமிகுதியால், அவள் உடல் வாட, அவள் உடலிற் பொருந்தியிருந்த வளைமுதலாம் அணிகள் நெகிழ்ந்துவிழ லாயின; தலைவியின் துயர்நிலை கண்டாள் தோழி; தலைவர் பொருள்தேடப் போயுள்ளார்; பொருள்தேடித் தந்தாலன்றி இல்லறம் இனிது நடவாது; இல்லறம் மேற் கொள்வது உற்றார், உறவினர், உயிர்போலும் நண்பர்கள் இவரை வாழ்விக்கவும், தாமும் பிறர்போற்றும் வாழ்வு பெறவுமேயாம்; அவ்வாழ்வு வாழப் பொருள் மிகமிகத் தேவை; இதை மறந்தமையினாலேயே தலைவி வருந்து கிறாள்; கடமை மறந்த அவள் உள்ளத்தே காதல் இடம் பெற்றுளது; கடமையினை நினைவூட்டின், தன் காதற் பெருமையினை மறப்பள் என உணர்ந்தாள்; உடனே, அவள்பாற் சென்று, "அன்புடையாய்! தலைவர், பிரிந்து சென்றது, நண்பர்கள் நல்வாழ்வு வாழவும், நீ அணிபல அணிந்து சிறக்கவும் துணைபுரியும் பொருள்தேடிக் கொணர்தற்கு அன்றோ? இல்லறம் நல்லறமாதற்கு, நாடு

கடந்து சென்றுள்ள, கடமையிற் பிறழா, அவர் இயல்பினை உணர்ந்தாவது, அவர் வரும்வரை ஆற்றியிருத்தல் நின் கடனும் என்பதை உணர்வாயாக! உணர்வுகொண்டு, அவர் வாராமையால் வருந்தும் நீ, அவ்வருத்தம் ஒழிவாயாக" எனக்கூறி அறிவுறுத்தினாள்; தோழியின் இவ் அறிவுரை அமைய வந்துளது புலவர் பாடிய பாட்டு;

"புல்லென் குன்றம்
சென்றோர் மன்ற; செலீஇயர் என்உயிர் எனப்
புனையிழை நெகிழவிம்மி, நொந்து நொந்து
இனைதல் ஆன்றிசின் ஆயிழை! நினையின்,
நட்டோர் ஆக்கம் வேண்டியும், ஒட்டிய
நின்தோள் அணிபெற வரற்கும்
அன்றோ தோழி! அவர்சென்ற திறமே.?"

(நற் : உஅசு)

## ௩௫. தூங்கலோரியார்

தூங்கலோரியார், தூங்கல் எனவும் அழைக்கப் பெறுவர்; ஓரி என்பது, அக்கால அரசரும், பிறரும் விரும்பி மேற்கொண்ட பெயர்களுள் ஒன்றும்; வல்வில் ஓரி என்பது, ஒரு வள்ளலின் பெயராய் வந்துளதும் காண்க; ஓரி, வல்வில் ஓரிஎன வழங்கப்பெற்றுளதே போல், நம்புலவரும தூங்கல் ஓரியார் என அழைக்கப் பெற்றுளார்; ஆகவே, இவா இயற்பெயர் ஓரி என்பதே; தூங்கல் என்பது, அவர் பெற்றுள யாதோ ஓர் சிறப்புக் குறிக்க வந்துளது என்று கொள்க. தூங்கலோரியார் புலவரும் போற்றும் புலமை வாய்ந்தவராவர், தமிழ்ச் சங்கப்புலவர்களுள் தலைமைசால் சிறப்புடையவர் எனப் போற்றப்பெறும் நக்கீரர், நம்புலவரைப் பாராட்டியுள்ளார்; ஊணூர்த்தழும்பன் என்பானைப் பாராட்டும புலவா நக்கீரர், அவன் தூங்கல் ஓரியார் பாராட்டிய பெருமபுகழ் உடையவனுவன் எனப் பாராட்டு முகத்தான், தூங்கலோரி யாரின் பாடற் பெருமையினைப் பாராட்டியுள்ளார்.

> "தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்லிசைப்
> பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்."
>
> (அகம்: ௨௨௭)

ஊணூர்த்தழும்பனைப் பாடியுள்ளார் புலவர் தூங்கலோரி யார் என நக்கீரனுர் கூறியுள்ளாராயினும், அவனை அவர் பாராட்டிய பாட்டு இப்போது கிடைத்திலது.

புலவர் பாக்கள், பழந்தமிழகத்தைப் பார்க்க எண்ணு வார்க்குப் பெருந்துணைபுரிய வல்லனவே எனினும், அக் கால மக்கள்தம அரசியல்நிலை, வாணிபநிலை, பொருள் மதிப்பீட்டு முறைபோன்றனவற்றைத் தெளிய உணர்த்து வனவல்ல: புலவர் தூங்கலோரியார், அக்கால மக்க ளிடையே நிலவிய பொருள் மதிப்பீட்டு முறையிது என் பதை ஓரளவு உணரத் துணைபுரிந்துள்ளார்.

ஒரு தலைவன், அழகிய ஆடை உடுத்தும், மணம்நிறை மாலைதொடுத்தும், அணிபல அணிந்தும், தலையிற் செருகு வன செருகிக்கொண்டும் விழாக்காணச் சென்று, ஆண்டுப் பரத்தையரோடு பழகிவந்தான்; இவ்வாறு சிறப்புற அணிந்து, ஆடல்பாடல் நுகர்ந்து வருவானைக் கண்ட தோழி "ஐய! நீ, இவ்வாறு செல்வச் சிறப்புத் தோன்ற வருவது காணும் இவ்வூரார், "'ஒரே பசுவைக்கொண்டு பெறலாம் சிறுபொருளால் நடந்த, இவன் தன் சீரிலா வாழ்வு, பெருநலம் உடைய பெண்ணினல்லாளாகிய இவள் வந்தபின்னர், வளம் பலவும் நிறைந்து விளங்கலாயிற்று' எனக் கூறுகின்றனர்; இவ்வாறு, இன்றைய நின் செல்வ வாழ்விற்கு வழிசெய்தாளாய, இவள் வருந்தப் பிரிந்து பரத்தையர் ஒழுக்கம் மேற்கொள்ளுதல் பழியுடைத்து" என்று கூறித் தெருட்டினாள். தோழியின் இக்கூற்றமைய வந்த இப்பாட்டின் வழியே, அக்கால மக்கள், ஒருவர் பெற்றுள ஆனிரைகளின் எண்ணிக்கையினைக் கொண்டே அவர்தம் செல்வ அளவினை மதிப்பிட்டனர் என்பதை அறியவைத் துள்ளமை உணர்க; அதேபாட்டில், செல்வத்திற் சிறந்தார், உடுத்தும், தொடுத்தும், பூண்டும், செரீஇயும வாழும் செல்வ வாழ்வும் சிறக்க உரைக்கப்பட்டுளதையும் உணர்க:

"உடுத்தும், தொடுத்தும், பூண்டும், செரீஇயும்
தழையணிப் பொலிந்த ஆயமொடு துவன்றி
விழவொடு வருதிநீயே, 'இஃதோ,
ஓர்ஆன் வல்சிச் சீரில் வாழ்க்கை,
பெருநலக் குறுமகள் வந்தென,
இனி விழாவாயிற்று' என்னும் இவ்வூரே."

(குறுந் : உகரு)

பொருளற்றவன் வாழ்வு, வறண்ட பாலைபோல் வளமும், வனப்பும் இழந்து தோன்றும்; பொருளிலான் இளமையும், பொலிவு இழந்துபோய்விடும் என்ற எண்ணம் உந்த, பொருள்தேடத் துணிந்தான் ஒரு தலைமகன்; அத்துணிவு, குன்றுகளுக்கிடையே அமைந்த சிறுவழி, செல்லுதற்கு அருமையுடையது என்பதை மறக்கச் செய்தது;

ஆனால், செல்லச் சின்னாள் இருப்பதற்குமுன், செல்வந் தேடிவந்த பின்னராம் வாழ்வின் நிலையினை வரைந்து காணத் தூண்டிற்று அவன் உள்ளம்; செல்வந்தேடி வருதல் சிறந்ததோர் இன்பத்தினைப் பெறுதற்பொருட் டன்றே; செல்வந்தேடிச் செல்வார, விரைவில் மீளுதல் ஆகாது; அவர் சென்று, ஆங்குப பொருள் தேடிவரும் காலம்வரை, அவா இளமையோடிருப்பர் என்பது அரி தினும் அரிதாம்; இளமை அவர்பால் நில்லாது கழிந்து விடும்; வாழ்வில் இன்பம் துய்த்தற்கு ஏற்றகாலம் இளமையே; இளமைகழிந்த பின்னர் இன்பம் துய்த்தல் இயலாது; அந்நிலையில், அவர்க்கு எப்பொருளிடத்தும் இன்பநினைவு எழாது; "இறந்துசெய் பொருளும் இன்பம் தரும் எனின், இளமையிற் சிறந்த வளமையும் இல்லை; இளமைகழிந்த பின்றை, வளமை காமம் தருதலும் இன்றே" என்ப. ஆகவே, இன்பம் துய்க்கவேண்டிய இவ் இளமைக் காலத்தே, மறத்தற்கரிய பேரழகும், பெருங் காதலும் உடைய மனைவியைப் பிரிந்து, பொருள்தேடிப் போதல், நம் இளமைப் பருவத்திற்கும், அக்கால இன்பத் திற்கும் அழிவுதரும் செயலேயாம; என்னே இக் கொடுமை!" என்றெல்லாம் எண்ணி வருந்தினன் எனப் பாடிய பாட்டில், பழந்தமிழர், பொருள்தேடிப் பெரு வாழ்வு வாழ்ந்து பிறர்க்குப பயன்பட வாழும் வாழ்வே வாழ்வாம்; அவ்வாழ்வுபெறத் தம இளமையும், இன்பமும் கழியினும் கேடின்று என எண்ணும் உயரிய உள்ள முடையராவர் என்பதை அழகாக எடுத்துக் கூறியுள்ளமை உணர்க.

> "குன்றுகெழு சிறுநெறி அரிய என்னாது
> மறப்பருங காதலி ஒழிய
> இறப்பல் என்பது, ஈண்டுஇளமைகு முடிவே."
>
> (குறுந் : ௧௨௬)

தூங்கலோரியார் பாடிய நற்றிணைப் பாட்டொன்று பழந்தமிழகத்தே உழவர் பெற்றிருந்த செல்வ வாழ்வி னையும், அவ்வுழவர் தம் தொழில்மேற் செல்லும் முறை

யினையும் உணரத் துணைபுரிந்து நிற்கிறது. உழவர் வீடு தோறும் மலைபோல் உயர்ந்த நெற்கூடுகள் பல நிற்கும்; நெற்கூடு நிறைய நெல் அளந்து கொட்டப்பெறும்; தொழில்மேற் செல்லும் உழவர், வெயிலேறின் உழவெருமைகள் மயங்கும் என்பது அறிந்து விடியற்காலையிலேயே செல்வர்; அவ்வாறு விடியலிலேயே செல்லவேண்டியிருப்பதாலும், தம தொழிற்குத் துணைபுரிவாரை ஒன்றுசேர்க்க வேண்டியிருப்பதாலும, அவர் இரவெல்லாம் உறங்காதே இருப்பர்; செல்வார் செல்வதற்குமுன் வரால் மீனைத் தடிந்து உடனிட்டு ஆக்கிய சோற்றை வயிறார உண்டு மகிழ்வர்; வயலிலே சென்று எல்லோரும் ஒன்றுகூடிச் சேற்றில் இறங்கி, நாற்று நடுதற்குமுன் நிலத்தைப் பண்படுத்துவான் வேண்டி, ஆங்கு வளர்ந்துள கோரைகளையும், நெய்தல்களையும் களைந்து எறிவர். சங்ககாலத்திற்கும், இக்காலத்திற்கும் இடையே எத்தனையோ மாறுதல்கள் நிகழவும, அக்காலததே அவர் மேற்கொண்ட உழவுமுதலாம் தொழில்முறைமட்டும் இன்றும் மாறுமல் இருப்பது, தமிழர்கள் மாற்றவொண்ணு, மாற்றவேண்டாத தொழில் முறைகளை அன்றே அறிந்த அறிவினராவர் என்பதைப் புலப்படுத்தி நிற்கிறது:

"மலைகண்டன்ன நிலைபுணர் நிவப்பின்,
பெருநெல் பல்கூட்டு எருமை உழவ!
கண்படை பெறாது, தண்புலர் விடியல்,
கருங்கண் வராஅல் பெருந்தடி மிளிர்வையொடு
புகாவை அரிசிப் பொம்மற் பெருஞ்சோறு
கவர்படு கையை கழுமமாந்தி
நீருறு செறுவில் நாறுமுடி அழுத்தநின்
நடுநரோடுநீ சேறியாயின், வண்
சாயும், நெய்தலும் ஓம்புமதி." (நற் · சுo)

---

## ௯௪. தேவனார்

நாகன், பூதன் என்ற பெயர்களைப் போன்றே தேவன் என்ற பெயரையும் பண்டைத் தமிழமக்கள் தம் இயற் பெயராகப் பயிலமேற்கொண்டிருந்தனர்; பண்டவாணிகன் இளந்தேவன், தமிழ்க்கூத்தன் நாகன்தேவன், பாரதம் பாடிய பெருந்தேவன், ஈழத்துப்பூதன் தேவன், வாயிலான் தேவன், கடுகு பெருந்தேவன் போன்ற பெயர்களை நோக்குக தேவனார், சோணாட்டுச் சிறப்புடை ஊர்களுள் ஒன்றாய ஆர்க்காட்டினை அறிந்து பாராட்டியுள்ளமையால், இவரை அந்நாட்டினராகக் கொள்ளுதல் பொருந்தும். "ஆர்க்காடு, சோழர்க்கு உரியது; அச்சோழர் ஒலிக்கும் மணிகளை இருபாலும் நாலவிடக்கொண்ட யானைகளையும் பொன்னாலாய பேரணிகளையும உடையவராவர். ஆர்க் காட்டுத் தெருக்கள் ஆடும் கொடிகளால் அழகுற்றுத் தோன்றும்; அத்தெருக்கள கள்விற்கும கடைகளையும் கொண்டிருக்கும, ஓயாது ஓடும் தேரொலி, அத்தெரு வெலாம் முழங்கும்" எனச் சோழரைப் பற்றியும், அவர்க் குரிய சோணாட்டினையும சிறப்பித்துப் பாடியுள்ளார்:

"படுமணி யானைப் பசும்பூட் சோழர்
கொடிநுடங்கு மறுகின் ஆர்க்காட் டாங்கண்
கள்ளுடைத் தடவிற் புள்ஒலித தோவாத்
தேர் வழங்கு தெருவு." (நற்: ௨௨௭)

தக்க இன்ன, தகாதன இன்னவென்று ஒக்கவுணரும் உணர்வும, உள்ளத்தை அது சென்றவழிச் செல்லவிடாது, தீதொரீஇ, நன்றின்பால் உய்க்கும் ஆற்றலும உடையவரே அறிவுடையராவர், 'தக்க இன்ன, தகாதன இன்ன என அறிந்து அவ்வழி நடப்பதே அறமாம் ஆகவே அறிவும, அறமும் பிரிக்கலாகாப் பண்புடையனவாம் எனல் பொருந் தும்; எங்கே அறிவுண்டோ, அங்கே அறம் உண்டு; எங்கே அறம் உண்டோ அங்கே அறிவுண்டு; அறவுணர்வு இலா தவர் அறிவிலாதவராவர்; அறிவு அற்றவர், அறம் அற்ற

வராவர்; அறிவிற்கும் அறத்திற்கும் இடையே உண்டாம் இவ்வுறவினை, "அறனறிந்து மூத்த அறிவு" என்ற அருந் தொடர் வழியே அறிவுறுத்தியுள்ளார் ஆசிரியர் வள்ளுவப் பெருந்தகையாரும். இவ்வுண்மையினைப் புலவர் தேவனார் தெளிய உணர்த்தியுள்ளார் ஒரு பாட்டில்.

தான் காதலித்த ஒரு பெண்ணை மணம் செய்துகொள்ளாது களவுப் புணர்ச்சியே கருததுடையனாய் ஒழுகலாயினன்; அதனால் தலைவியின் துயர் பெருகிற்று; அவள் துயர் போக்கித் துணைபுரிய விரும்பினாள் தோழி, உடனே தலைவன்பால் சென்றாள்; "ஐய! தலைவியும் நீயும் களவில் காதலுடையராய் வாழ்தல் ஊரில் அலராகிப் பரவிவிட்டது; 'தலைவன் அறன் உடையனல்லன்; அவன் களவையே பெரிதும் விரும்புகின்றான்; களவு தீது என்பதை அறிவு உடையார் ஒவ்வொருவரும் உணர்வர்; அதை இவன் உணர்ந்திலன்; ஆகவே தலைவன் அறிவற்றவனாவன்; அறிவில்லா இடத்தே அறனும இன்றாம், ஆகவே தலைவன் அறனும் அற்றவனாவன' என்றெல்லாம கூறி அலர் எழுப்புகின்றனர், அவ்வாறு எழும அலருரை இவள காதிலும் விழுந்துவிட்டது; தன்னால் அன்பு செய்யப்பட்டாரைப் பிறர் பழித்துரைப்பது காணப்பொறாது இவள் உள்ளம; அவ்வலருரையால், இவள் நல்லுயிா நில்லாது கழியினும் கழியும்; அலர் எழுதற்குக் காரணமாய நீயே, இவள் உயிர் கழிதற்கும காரணமாகுவை; ஆகவே, இவளை வரைந்து கொள் முயற்சியினை விரைந்து மேற்கொள்வாயாக!" என்று கூறினாள்

தோழியின் இக்கூற்றமையைப் பாடிய இப்பாட்டில், அறிவு—அறம ஆயவற்றிற்கிடையே உண்டாம் உறவினை எடுத்துக்காட்டியதோடு உண்மை அன்பும், உயர்ந்த உள்ளமும் உடைய மனைவியாவாள், தன் கணவனைப் பிறர் பழித்து உரைக்கும் உரைகேட்டு வாழா உள்ளஉரம் உடையவளே; அத்தகைய உரவுள்ளம் உடையார் பழந் தமிழ்க் காலத்தே மிகப் பலராவர் என்ற செய்தியையும் தெளியத் தெரிவித்துள்ளார்:

“அறிந்தோர் அறனிலர் என்றலர், சிறந்த
இன்னுயிர் கழியினும் நனி இன்றே ;
புன்னையங் கானல் புணர்குறி வாய்த்த
பின்ஈர் ஓதி என் தோழிக்கு, அன்றே!
படுமணி யானைப் பசும்பூட் சோழர்
கொடிநுடங்கு மறுகின் ஆர்க்காட்டு ஆங்கண்
கள்ளுடைத் தடவிற் புள்ளொலித்து ஓவாத்
தேர்வழங்கு தெருவின் அன்ன
கௌவை யாகின்றது ஐய! நின் அருளே.”

(நற் : உஉள)

---

## ௬௭. தேவகுலத்தார்

தேவகுலம் எனும் சொல், இறைவன் உறையும் கோயில் எனும் பொருள் உடையது; "ஊரானோர் தேவ குலம்" எனும் தொடரையும காண்க. தேவகுலத்தார் எனும் புலவாதம பெயரும், அவர் பாடிய பாட்டு, குறுந் தொகைக்கண், இறையனார் பாடிய "கொங்கு தேர் வாழ்க்கை" எனும் செய்யுளை அடுத்து வைக்கப்பெற்றிருப் பதும் மதுரைத் திருக்கோயிலோடு இவர் கொண்டிருந்த யாதோ ஒரு தொடர்பு குறித்தேயாம் எனக் கூறுவர் சிலர்.

தலைவன் ஒருவனொடு தான் கொண்ட நட்பின் பெருமை இத்தன்மைத்து எனப் பாராட்டிக் கூறுவாள், "அந்நட்பு, பரப்பால் நிலம்கொள்ளும் பெருமையினும், அது பெரிது; உயர்வால் வானம் பெறும் பெருமையினும் பெருமையுடைத்து; ஆழத்தால் கடல்பெறும் பெருமை யினும் பெருமை உடைத்து" என்று கூறினாள் எனப் பாடித் தலைவன் தலைவியர்க்கிடையே உண்டாம் நட்பின் இயல்பு இத்தன்மைத்தாதல் வேண்டும் என விளங்கவைத் துள்ளார்.

"நிலத்தினும் பெரிதே, வானினும் உயர்ந்தன்று;
நீரினும் ஆர்அளவின்றே; சாரல்
கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு
பெருந்தேன் இழைக்கும நாடனொடு நட்பே."

(குறுந்: ௩)

## ௩அ. தொல் கபிலர்

பரணரையும், பாரியையும் பழகிய நட்பினராகக் கொண்டு வாழ்ந்த கபிலர் வேறு; இவர் வேறு என்பதை அறிவித்தற்கே இவர் தொல் கபிலர் என அழைக்கப்பெற்றுளார்; இக் கபிலர் அக் கபிலரினும் தொன்மை வாய்ந்தவராதலின், இவர் தொல்கபிலர் எனப்பட்டார் என்ப சிலர்; சிலர், இவர் ஆற்று வெள்ளத்தால் பல்லாண்டுகளாக மோதப்பெற்றும அழியாது நிற்கும பெருமை வாய்ந்த கான்யாற்றுக் கரையினைத 'தொல்கரை' என்ற தொடரால் சிறப்பித்தமை குறித்து, "தொல்கரை பொருதிரை நிவப் பின்வரும் யாறு" (நற்: ௧௧௪) இவர் அவ்வாறு அழைக்கப்பெற்றுளார் என்ப. இவர் பாடிய பாக்கள், நற்றிணை, குறுந்தொகை, நெடுந்தொகை ஆகிய மூன்று நூலினும் இடம் பெற்றுள்ளன. குறிஞ்சிநிலக் காட்சிகளையும், அக் காட்டுறை மக்கள் வாழ்வியலையும், அவர்தம் பண்பாட்டினையும் பாடவல்லவராவர் என்பது அவர் பாக்களைப பயின்றார்க்குப் புலனும்.

கோரைக்கிழங்குபோலும் தன் உணவினைப பெறல் வேண்டிப் பன்றி நிலத்தைப பறிக்க, ஆங்குக் கிடந்து வெளிப்போந்த மாணிக்கக் கற்களின ஒளியில், தன் பிடி, தான் ஈன்ற கன்றோடு இனிது உறங்க, அவற்றிற்கு ஊறொன்றும் நேராவண்ணம், களிறு நின்று காக்கும் காட்சியொன்றைக் கண்முன் கொணர்ந்து காட்டியுள்ளார்:

"கேழல் கெண்டிய
நிலவரை நிவந்த பலவுறு திருமணி,
ஒளிதிகழ விளக்கத்து ஈன்ற மடப்பிடி
களிறுபுறம் காப்பக் கன்றொடு வதியும்."

(நற்: ௩௩௬)

மலைநாட்டகத்தே, மண்ணுக்கடியில் கிழங்குகளும், மரங்கள்தோறும் தேனடைகளும் கிடந்து வளங்கொழிக்கும்; ஆண்டுள்ளார், சிற்சிலவே விதைக்கப் பற்பல தினை

களை உதவும் வளம் செறிந்தது அந்நிலத்து மண் எனக் குறிஞ்சிநிலத்து நலத்தினைப் பாராட்டியுள்ளார் ஒரு பாட்டில் ;

“ கிழங்கு கீழ்வீழ்ந்து, தேன்மேல் தூங்கிச
சிற்சில வித்திப் பற்பல விளைந்து
தினைகிளி கடியும் பெருங்கல் நாடு.” (நற் : ௩உஅ)

வேட்டை மேற் செல்லும் கானவர், எதிரிகளைத் தப்பாது கொள்ள வல்ல நாய்கள் பின் தொடர, கொம்பை ஊதி ஒலி செய்துகொண்டே செல்வர் என்றும், ஆண்டு, தன் வில்லாற்றல் காட்டிக் கொன்ற யானையின் கோட்டைக் கொண்டு, அந்நிலத்து மலையகத்தே மண்டிக் கிடக்கும் பொன்பெற அகழ்வுழி, பொன்னுடன், பேரொளி வீசும் மணிகளும் வெளிப் போதரல் கண்டு வியந்து நிற்க, தன் கையுறை யானைக் கோடு, அகழ்ந்ததால் ஒடிய, அதி னின்றும் முத்துக்கள் உதிர, மணி, பொன், முத்து ஆகிய அம்மூன்றையும அளவின்றிப் பெற்று, அவற்றை சந்தனக் கொம்பையே காவும கோலாகக்கொண்டு சுமந்து கொணர் வன் என்றும், கானவர்தம செல்வவாழ்வினைச் சிறக்கப் பாடியுள்ளார் :

“ கோடு துவையாக் கோள்வாய் நாயொடு
காடுதேர் நசைஇய வயமான் வேட்டுவன்.”
(நற் : உஎசு)

“ பெருமலைச சிலம்பின் வேட்டம் போகிய
செறிமடை அம்பின் வல்விற் கானவன்,
பொருது தொலையானை வெண்கோடு கொண்டு,
நீர்திகழ் சிலம்பின் நன்பொன் அகழ்வோன்,
கண்பொருது இமைக்கும் திண்மணி கிளர்ப்ப
வைந்நுதி வான்மருப்பு ஒடிய உக்க
தெண்ணீர்ஆலி கடுக்கும் முத்தமொடு
மூவேறு தாரமும் ஒருங்குடன் கொண்டு
சாந்தம் பொறை மரமாக நறைநார்
வேங்கைக் கண்ணியன் இழிதரும்.” (அகம் : உஅஉ)

பகற்குறி வந்து நீங்கும் தலைவனை நோக்கி, "ஐய! யாம் குறவர் பெறுமகளிராவோம்; இக்குன்றுறை வாழ் வினரேம்; தினைக்காவல் புரிவோர், காவல் கருதி அமைத்த பரணிடத்தே மயில் சென்று வாழும் மலைகளின் இடையே அதோ தெரிவது எம் ஊர்; இரவிற் செல்லாது, ஆண்டு வரின், நீ விரும்பும் தேன் உண்டு மகிழ்தலோடு, வேங்கை யடியில், எம்மவர் நிகழ்த்தும் குரவைக் கூத்தினைக் கண்டு களித்தலும் உண்டாம; ஆகவே தங்கிச் செல்வாயாக" என வேண்டினுள் தோழி, எனப் பாடிக் கானவர்தம் விருந்தேற்றுப்போற்றும் பண்பினைப் பாராட்டியுள்ளமை உணர்க.

"குறவர் மகளிரேம்; குன்றுகெழு கொடிச்சியேம்;
சேணோன் இழைத்த நெடுங்காற் கழுதில்
கான மஞ்ஞை கட்சி சேக்கும்
கல்லகத்தது எம்மூரே, செல்லாது
சேர்ந்தனை சென்மதி நீயே; பெருமலை
வாங்கமை பழுனிய நறவுண்டு
வேங்கமை முன்றில் குரவையும் கண்டே." (நற்: உஎசு)

தலைவி விரும்பிய தலைவனுக்கே அவளை மணம்செய்து தர விரும்பினர், அவள் உற்றார் என்பதை, "நம் தந்தையும், நின்னை அவனுக்கே கொடுக்க இசைந்தனன்; ஊரில் உள ளாரும் நின் பெயரை, அவன் பெயரோடு கூட்டியே வழங்கு கின்றனர்; நம் தாயும், நின் தோளுக்கேற்ற தோழனை அவனையே எண்ணுவள்" என்று கூறுமுகத்தான் உறுதி செய்துவிட்டு, "இனி இம்மணம் நிகழுமோ எனும் அச்சம் ஒழிந்து, அம்மணம் நிகழ்நாள் விரைவில் வந்துறுமாக என நம் இல்லுறை கடவுளரை, நாம் கைகூப்பித் தொழு வோமாக," என்று விரும்பினுள் தோழி எனப்பாடிய பாட்டின்வழியே, தாம் விரும்பும் காதலரையே தாம் பெற்றவிடத்தும், தம் இல்லுறை தெய்வங்களை மறவாது போற்றும் மகளிர்தம் உள்ள மாண்பினை உணர்த்தி யுள்ளார்:

" நாடற்கு
இன்றீம் பலவின் ஏர்கெழு செல்வத்து
எந்தையும் எதிர்ந்தனன் கொடையே; அலர்வாய்
அம்பல் ஊரும் அவனொடு மொழியும்;
சாயிறைத் திரண்ட தோள் பாராட்டி
யாயும் அவனே என்னும்; யாமும்
'வல்லே வருக வரைந்தநாள்' என
நல்லிறை மெல்விரல் கூப்பி
இல்லுறை கடவுட்கு ஓக்குதும் பலியே." (அகம். உஅஉ)

பண்டைக்காலத்துக் கூத்தாடு மகளிர், தம் ஆடற்றொழில் கண்டு மகிழ்ந்த மக்கள், விலையுயர்ந்த நன்கலன் பல நல்கின் பெறுவளேயன்றி, எண்ணெயும், துணியும் அளிப்பராயின், பெறவிரும்பாள் என்ற செய்தியைத் தெரிவித்து அக்கால மக்கள்தம் மனவுயர்வின் மாண்பினைப் புலப்படுத்தியுள்ளார் புலவர் :

" எண்பிழி நெய்யொடு, வெண்கிழி வேண்டாது,
சாந்துதலைக் கொண்ட ஓங்குபெருஞ் சாரல்
விலங்கு மலையடுக்கத் தானும்
கலம்பெறு விறலி யாடும் இவ்வூரே." (நற் : ௩௨அ)

## ௩௧. நப்பண்ணனார்

பண்ணன் எனும் இயற்பெயருடைய நம் புலவர், பெரும்புலமை உடையராதல் அறிந்த அவர்கால மக்கள், சிறப்புணர்த்தும் 'ந'கர இடைச்சொல்லையும், உயர்வுணர்த்தும் 'ஆர்' விகுதியையும் முறையே அவர் பெயர்க்கு முன்னும் பின்னும் சேர்த்து வழங்கிப் போற்றுவாராயினர். நப்பண்ணனார் பரிபாடல் பாடிய புலவர்களுள் ஒருவராவர்; பாண்டிநாட்டிற் பிறந்தவர்; தாம பிறந்த பாண்டிநாட்டின் கண்ணதாய பரங்குன்றினையும், அக்குன்றுறை குமரவேளினையும் பாராட்டிப பணிவதோடு, அந்நாட்டுத் தலைநகராம் கூடன்மாநகரையும், அந்நாட்டு அரசனையும், அவனைச்சூழ இருக்கும் அமைச்சர் முதலாயினாரையும் பாராட்டி மகிழும் பெரும்பற்றும் உடையராவர். தாம் பாடிய பரிபாடற் கண், பாண்டிநாட்டுத் தலைநகராம் கூடலை, உலகத்துள்ளார் அனைவரையும் ஒருங்கே வெல்லவல்ல பேராற்றலும், பேரறிவும் உடையாராவாழ் கூடல் என்றும், பாண்டியனை அறிவானமைந்த அழகுடைப் பாண்டியன் என்றும், அவன் அமைச்சரைக் கடனறிநத கண்போலும் அமைச்சர் என்றும் பாராட்டியுள்ளமை யுணர்க.

"புலத்தினும், போரினும் போர்தோலாக் கூடல்."

"புலமாண் வழுதி."

"கடனறி காரியக் கண்ணவர்."

(பரி: ௧௧: அ, ௨0, ௨௨)

புலவர் நப்பண்ணனார், தாம் பாடிய பரிபாடற்கண், திருப்பரங்குன்றத்தே நிகழும திருவிழாக் காட்சிகளையும், அவ்விழாக் காணச்செல்லும் மக்களின் மனநிலையினையும் நன்கு எடுத்துக்காட்டியுள்ளார். பொருள்தேடிப் பெற்ற பாண்டிநாட்டு மக்கள், அப்பொருளால் பெறலாம் பேரின் பம்பெற வேண்டி, பரங்குன்றத்தே நிகழும் பெருவிழாக் காணச்செல்லும் செயல், அறம் செய்தார் அவ்வறத்தா லாம் பயன் பெறல்வேண்டி துறக்கம் புகுதலோடொக்கும் என உவமை காட்டியுள்ளார் புலவர் :

"அறம் பெரிதாற்றி அதன்பயன் கொண்மார்
சிறந்தோர் உலகம் படருநர் போல." (பரி : கக : க0-கக)

விழாக்காண வருவார்தம் இன்பத்தினைப் பெருக்கு தற்காம் காட்சிகள் பல, ஆங்காங்கே அமைந்திருப்பதை அழகுறக் கூறிவரும் புலவர், ஆங்குள்ள ஓர் ஓவியச்சாலை யின் உயர்வினையும் பாராட்டியுள்ளார் அவ் வோவியச் சாலையின் உள்புக்காருட் சிலர், துருவ சக்கரத்தைப் பொருந்திச்சுழன்றுவரும் ஞாயிறு முதலாம் கோள்களின் இயல்பினை எழுதிக்காட்டும் ஓவியத்தைக் கண்டு நின்றனர்; இரதியும், காமனும் எழுதிய படத்தருகே நின்று சிலர், இவள் இரதி; இவன் காமன் என விளக்கங்காட்ட வியந்து நின்றனர் சிலர்; பூனை உருவுற்ற இந்திரன் இவன்; இவள் அகலிகை; இருவரும் உள்வழிப் புக்க கௌதமன் இவன்; இது, அவனால் அகலிகை பெற்ற கல்லுருஎனக் காட்சியைக் காட்டி நிற்பர் சிலர் எனப் புலவர் கூறும் பகுதி, பழங்கால ஓவியக்கலையின் உயர்வினையுள்ளவாறு உணர்த்துவதாம்.

"என்றூழ் உறவரும் இருசுடர் நேமி
ஒன்றிய சுடர்நிலை உள்படு வோரும்:
இரதி, காமன் இவள் இவன் எனாஅ
விரகியர் வினவ வினாஇறுப் போரும்,
இந்திரன் பூசை, இவள் அகலிகை, இவன்
சென்ற கவுதமன், சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிது என்று உரை செய்வோரும்
இன்ன பலபல எழுத்துநிலை மண்டபம்."

(பரி : கக : ௬௪-௫௬)

விழாக்காணச் சென்றாருள் பேதைப் பருவத்தா ளொருத்தி, தன் தமரினின்றும் பிரிந்து வழிதவறிவிட்டாள்; பிறகு அவர்களை அடையவேண்டி, ஆங்குள்ள கற்களின் இடையிடையே புகுந்து புகுந்து, "ஏஎ" என்றும், "ஓஒ" என்றும் கூவி அழைத்தாள்; அவள் எழுப்பிய அவ்வொலிகளையே, அங்குள்ள குன்றுகளும் எதிரொலித்தன; எதிரெழும் அவ்வொலிகள், குன்றுகள் எதிரொ

லித்ததன் ஒலியே என அறியாது, அவ்வொலி தன்னைப் போன்றே தன் தமர் தன்னை அழைக்கும் ஒலியாம் எனக் கொண்டாள்; அதனால் அவ்வொலி எழுந்த இடந்தோறும் சென்று சென்று கண்டு, ஆங்குத் தன் தமரைக் காண மாட்டாது கண்ணீர்விட்டுக் கலங்கினாள் எனப் புலவர் காட்டும் காட்சி கவின்மிக வுடைத்தாம் :

"பிறந்த தமரிற் பெயர்ந்தொரு பேதை
பிறங்கல் இடை இடைப்புகுப் பிறழ்நது யான்
வந்த நெறியும் மறநதேன், சிறநதவா
ஏஎ, ஓஒ என விளியேறபிக்க
ஏஎ, ஓஒ என்று ஏலா அவவிளி
அவவிசை முழையேற்று அழைப்ப அழைத்துழிச
செல்குவள் ஆஙகுத தமாக்காணமை
மீட்சியும் கூஉக்கூஉம் மேவும் மடமைத்தே."

(பரி : கக · ருஅ-சுரு)

---

## ௪௦. நப்பாலத்தனார்

யாப்பருங்கல உரையாசிரியர்களால், நப்பாலத்தனார் சூத்திரம் எனச் சில சூத்திரங்கள் மேற்கோளாகக் காட்டப்படுதலின், நப்பாலத்தனார் யாப்பிலக்கணமும் செய்துள்ளார்போலும். நப்பாலத்தனார், கொல்லி மலையாண்ட வல்வில் ஓரியின் அவையகத்தே வாழ்ந்து, அவன் ஆற்றலும் அருளும் அறிந்து பாராட்டியவராவர்; தலைவியைப் பிரிந்து தனியே சென்று தேடிப் பெறும்பொருள், கொடிய போர் வல்ல வீரர் கூட்டுத் தலைவனும், பெருவள்ளலும் ஆய ஓரி என்பான், தன்னைப் பாடிவருவார்க்கு வாரி வழங்கும் பெரும்பொருள்போலும் பெருமைத்தே ஆயினும், அவளைப் பிரிந்துவந்து பெறவேண்டியிருப்பதால், அது அத்துணைப் பெருமையுடையதன்று என்று கூறினான் ஒரு தலைவன் எனப்பாடிய பாட்டின் வழியே, ஓரியின் உயர் வினைப் புகழ்ந்து பாடியுள்ளமை யுணர்க:

"வெம்போர்
மழவர் பெருமகன் மாவள் ஓரி
கைவளம் இயைவ தாயினும்
ஐதேகம்ம இயைந்து செய் பொருளே." (நற். ௬௨)

தலைமகளைத் தனியே விட்டுத் தலைமகன் செல்லும் பாலைப் பெருநிலம், போதற்காகாப் பெரும்பாழ் உடையது என்பதை உணர்த்தும் தலைவனும், தலைவியும் அவ்வழியினை அத்துணைக் கொடுமையுடையதாக ஆக்கிய உலகுபடைத்தோன், அவ்வழியில் தானே சென்று தனித்து நடந்து பெருந் துன்புறுவானாக எனக் கூறினர் எனப் பாடிய புலமை பாராட்டற்குரியதாமன்றோ!

"ஐதுஏகம்ம இவ்வுலகு படைத்தோனே." (நற்: ௨௪௦)

## ௬௧. நரைமுடி நெட்டையார்

நரைமுடி நெட்டையார் எனும் இப்பெயர், புலவர்க்கு யாதோ ஒரு காரணம்பற்றி வந்த பெயரேயாம் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை எனினும், அக்காரணம் யாது என அறிந்து காணல் இப்போது அரிதாகிவிட்டது. புலவர் நரைமுடி நெட்டிமையார், காதற் சிறப்பும், கடமையின் உயர்வும ஒருங்கே உணர்ந்த உயர் பேராளராவர். கடமையிற் கருததுடையார், உலகத்து அரியராவர்; ஆள்வினை மேற்கோடல் ஆடவர்க்கு அறனும எனும் உணாவு, உள்ளதகே உரனுடையார்க் கன்றி உண்டாகாது; அவ்வுணர்வு உண்டாதல், பொதுவாகவே அரிது எனின், காதலிற் கன்றிய உள்ளம் உடையார்பால், அக்கடமையுணர்வு உண்டாதல் அரிதினும் அரிதாம்; காதல் உடையார், கடமையுடையராதலும், கடமையுணர்வுடையாா, காதல் உள்ளமுடையராதலும் அரிது; கடமையுணர்வுடையார்பால், காதல் உள்ளம் உண்டாகாது; காதல் உள்ளம் உடையார்பால், கடமையுள்ளம் உண்டாகாது; இவ்விரண்டையும் ஒருங்கே உடையார் உலகத்தில் அரியராவர்; முற்றிலும் முரண்பட்ட இவ்விரண்டினையும் ஒருங்கே உடையார், மீளாததுயருற்று மாள்வர்; அவர் உறும் துயரத்திற்கு எல்லை காணலும் அரிதாம்; என்றாலும, அவ்விரண்டினையும் ஒருங்கே உடையாரையே உலகத்தார், உயர்ந்தோர் எனப் போற்றுவர். செயற்கரிய செய்வாரன்றோ பெரியார்? இதை உணர்ந்தவர் நம்புலவர்; காதல், கடமை ஆய இரண்டினும் தவறாத் தலைமகன் ஒருவன், ஆள்வினை மேற்கோடல் ஆடவர் கடன் எனும் எண்ணம், தன்னைப் பொருள் தேடிப் போமாறு பின்னின்று துரத்த, காதலிபால் சென்ற தன் அன்புள்ளம், ‘இத்தகையாளை, இப்போது பிரிந்து போதல் அறிவுடைமையன்று; ஆகவே பிரியற்க’ என முன்னின்று தடுப்ப, செய்வதறியாது திகைத்து நின்றான். அவன் நிலை, உள்ளே துளைபொருந்திய ஒரு மூங்கில், இருபாலும் தீப்பற்றி எரிய, அதன் உள்ளே அகப்பட்ட எறும் பொன்று, எப்பாலும் போகமாட்டாது இருந்து வருந்து

வது போலாம் என்று பாடிக் காதலிற் பிறழாக் கடமை யுள்ளம் உடையார்தம் நிலையினை உள்ளவாறு உணர்த்தி யுள்ளார் புலவர் :

" ஆள்வினைக்கு எழுந்த அசைவில் உள்ளத்து
ஆண்மை வாங்கக், காமம் தட்பக்
கவைபடு நெஞ்சம், கட்கண் அகைய
இருதலைக் கொள்ளி இடை நின்று வருந்தி
ஒருதலைப் படாஅ உறவி போன்றனம்."

(அகம் : ௩௩௯)

உடல் இயங்க, உயிர் துணைபுரிகிறது ; உயிர் நிற்க, உடல் துணைபுரிகிறது, உடலையின்றி உயிர்நிலைபெறு தலோ, உயிரையின்றி உடல்வாழ்தலோ இயலாது ; நட் புடையார் இருவர், உடலும் உயிரும், ஒன்றையின்றி ஒன்று வாழ மாட்டா ஒற்றுமையுடைய வாதலைப்போன்றே, ஒரு வரையின்றி ஒருவர் உயிர்வாழ மாட்டா ஒன்றியவுள்ளம உடையராதல் வேண்டும் ; அதுவே நட்புடைமையின் நற் பண்பாம் எனத் தாம் உணர்ந்த உணர்வினைத் தன் மனைவி, உடலோடு உயிர் ஒன்றினு லொத்த நட்புடையாள் எனக் கூறிப் பாராட்டினான் ஒருதலைமகன் எனப்பாடிப் புலப் படுத்தியுள்ளார் புலவர்.

தலைவியோடு கூடிவாழும் வாழ்வு, உயிர், உடலோடு கூடி வாழ்ந்தக்கால் உண்டாம் பேரின்பம் போலும்பேரின் பம் தருவதாம் ; தலைவியைப் பிரிந்து தனித்துறை வாழ்வு, உயிர், உடலை விட்டுப்பிரிந்தக்கால் உண்டாம் பெருந் துயர் போலும் பெருந்துயர் தருவதாம் எனக் கூறினான் அத்தலைமகன் என்றும் பாடி, பிரிதல் அறியாப் பெரு வாழ்வு வாழும் பேறுடையார்தம் பெருமையினையும் பாராட்டியுள்ளார் புலவர் :

"நோங்கொல் அளியள்தானே : யாக்கைக்கு
உயிரியைந்தன்ன நட்பின் அவ்வுயிர்
வாழ்தல் அன்ன காதல்
சாதல் அன்ன பிரிவரியோளே." (அகம் : ௩௩௯)

தேர் ஆழி ஓடிய வழியில் நீர் விரைந்து ஓடும் காட்சி, விரைந்தோடும் பாம்பு போலும் எனவும், பயற்றுச் செடியில் முற்றிய காய்கள், கொத்தாக நிற்கும் காட்சி, ஒன்றையொன்று ஒட்டுதலின்றிக் குவிந்து நிற்கும் கைவிரல்கள் போலும் எனவும் கூறிய உவமைகள் புலவர் தம புலமைக்குப் பெருமையளிப்பனவாம் :

"வீங்குவிசைப் பிணித்த விரைபரி நெடுந்தேர்
நோன்கதிர் சுமநத ஆழி ஆழ் மருங்கில்
பாம்பென முடுகுநீர் ஓடக், கூம்பிப்
பற்றுவிடு விரலிற் பயறுகாழ் ஊழ்ப்ப.'

(அகம்: ௩௩௯)

---

## ௬௨. நல்லச்சுதனார்

அச்சுதன் என்பது திருமாலின் திருப்பெயர்களுள் ஒன்று; அப்பெயருடைய இவர், வைணவ சமயமே விளங்கிய சமயமாம் எனும் குறுகிய உள்ளமிலராய், சைவசமயச் சார்புடைய செவ்வேளைபபாடும் பெரும் நன்மையுடையராய்க் காணப்பட்டமையின், நல்லச்சுதனார் எனச் சிறப்பிக்கப் பெற்றுளளார். பரிபாடலில், முருகனுக்குரிய இருபத்தோராவது பாடல் இவர் பாடியதாம்; பரிபாடலில் வரும், 16, 17, 18, 20-ஆம் பாடல்களுக்கு இசை வகுத்தவரும் இவரே.

நல்லச்சுதனார், தாம் பாடிய பரிபாடற்றொடக்கத்தே, முருகன் ஊரும யானை, பூண்ட காற்செருப்பு, ஏந்திய வேல், அணிந்த கடப்பந்தார், அமர்ந்திருக்கும் பரங்குன்று ஆகியவற்றின் இயல்புகளை அழகுறப் பாடியுள்ளார்.

ஆடும் விறலி, அவள் ஆடல்கண்டு மயங்கும் ஒரு தலைவன், அவன் செயல்கண்டு சினக்கும் அவன் மனைவி, தன் கணவன் பிறரை நோக்காது, தன்னையே நோக்குமாறு விரும்பி அவள் மேற்கொள்ளும் ஒப்பனை ஆகியவற்றையும் பாடியுள்ளார் புலவர்.

மேகம் ஒலிக்க ஆடும் மயிலின் விரிந்த தோகைகள், சாந்தாற்றும் சிவிறிகள் போலும்; தும்பிகள் மலர்களிற் படிந்து ஊதுங்கால் எழும் ஒலி குழலோசை போலும்; வண்டோசை, யாழோசை போலும், அருவி விழுதலால் எழும் ஒலி, முழவொலி போலும் எனப் புலவர் கூறுவன, அவர்தம் இசையறி உணர்வினை உணர்த்துவனவாம்

மைந்தர் மகிழ்ந்து மார்பிற் பூசிய சந்தனத்தைத் தடவிப் புலர்த்திமீளும காற்றும், மகளிர் தாது உதிரச் சூடியபூ நிறைந்த கூந்தலினூடே நுழைந்துவரும் காற்றும், முருகனை வழிபடல் குறித்துக் காட்டிய தூபப் புகையினைத் தழுவிவரும் காற்றும் கலந்து மணக்கும் மாண்புடையது திருப்பரங்குன்றம் என்றும் பாடி மகிழ்கிறார் புலவர்.

இவ்வாறு பரங்குன்றையும், அக்குன்றுறை பெருமானையும் பாடிப் பரவிய புலவர், அவன்பால் பொன்னும், பொருளும், போகமும் வேண்டாது,

"குன்றத்து அடியுறை இயைக்கெனப் பரவுதும்
வென்றிக் கொடியணி செல்வ! நிற்றொழுது."

"நன்றமர் ஆயமோடு ஒருங்குநின் அடியுறை
இன்று போல் இயைகெனப் பரவுதும
ஒன்றார்த தேய்த்த செல்வ நிற்றொழுதே"

(பரிபாடல் . உக : கரு-எ; ருஅ-எ0)

அவன் அடியுறை வாழ்வு ஒன்றே வேண்டி நிற்பது, புலவர் தம் திருந்திய உளததிற்கோர் உயர்நத எடுத்துக் காட்டாகும்.



## ௪௩. நல்லழிசியார்

அழிசி எனும் பெயருடையார் பலராவர்; அழிசிநச் சாத்தன் எனும் புலவர் ஒருவரும், ஆர்க்காட்டு அழிசி எனும் வீரன் ஒருவனும் பண்டைக்காலத்தே வாழ்ந்திருந் தனர்என, அக்காலப் பாக்கள் அறிவிக்கின்றன அழிசியார், நல்லவர், பெருந்தகையாளர் என அறிந்த அந்நாள் மக்கள், அவரை நல்லழிசியார் என அழைத்துப் பெருமை செய்த னர். நல்லழிசியார், வையை ஆற்றையும், பரங்குன்றுறை செவ்வேளையும் பாராட்டிப் பாடியுள்ளார்; அவர் தம் முடைய பாக்களிடையே, பாண்டியர் தலைநகராம் கூடலைப் பாராட்டிப் போற்றியுள்ளமையானும், அப்பாண்டி நாட் டின்கண்ணதாய பரங்குன்றைப் பாடியுள்ளமையானும், புலவர் நல்லழிசியார், பாண்டிநாட்டிற் பிறந்தவராவர் எனக் கொள்க.

வையை யாறு, மலைபடுபொருளாம் மிளகுக்கொடி, சந்தனம் முதலாயினவற்றைக் கரைக்கண் கொணர்ந்து குவிப்பது, கொடைத் தொழிலாற் சிறந்த வள்ளல் ஒருவன், பாடிவருவார்க்குப் பொருள்களை வாரி வழங்குவது போலாம் எனவும், அக்கரைக்கண் வந்து குவியும் நுரைத் திரள், மத்தாற் கடைந்த வழி எழும் தயிர்த்திரள்போலும் எனவும் கூறும் உவமைகள் நயஞ்செறிந்து விளங்கு கின்றன :

“ கரையே, கைவண் தோன்றல் ஈகை போன்மென
மைபடு சிலம்பிற் கறியொடும், சாந்தொடும்
நெய்குடை தயிரின்நுரை யொடும், பிறவொடும்
எவ்வயினானும் மீதுமீது அழியும்.”

(பரிபாடல் : ௧௬ : ௧-௪.)

ஒருபால் எழும் பாணர்தம் யாழோசைக்கு எதிராக வண்டின் இன்னிசை எழலும், ஒருபால் எழும் குழலோ சைக்கு எதிராகத் தும்பியின் மூரல் ஒலி எழலும், ஒரு பால் எழும் முழவொலிக்கு எதிராக, அருவிநீர் ஒலி எழ

லும், ஒருபால் ஆடும் மகளிர் ஆடலுக்கு எதிராகக் கொடிகள் ஆடத் தொடங்கலும், ஒருபால் பாடும் மகளிர் தம்மிடற்றுப் பாடலுக்கெதிராக, ஆடும் மயில்கள் தம் அழகிய குரல் எழலும், கல்வி கேள்விகளான் வென்றி பெற விரும்பியவர்கள், தம் ஆற்றலைக் காட்ட மாறுமாறாக முயன்ற செயலோடொக்கும் எனப் புலவர் கூறும் காட்சி புதுமை நலம் பெற்றுப் புகழ்தந்து நிற்பதாம்.

"ஒருதிறம், பாணர் யாழின் தீங்குரல் எழ,
ஒருதிறம், யாணா வண்டின் இமிாஇசை எழ,
ஒருதிறம், கணாஅர் குழலின் கரைபு எழ,
ஒருதிறம், பண்ணார் தும்பி பரந்திசை யூத,
ஒருதிறம், மண்ணார் முழவின் இசை எழ,
ஒருதிறம், அண்ணல் நெடுவரை அருவிநீர் ததும்ப,
ஒருதிறம், பாடல் நல்விறலியர் ஒல்குபு நுடங்க,
ஒருதிறம், வாடை உளர்வயின் பூங்கொடி நுடங்க,
ஒருதிறம், பாடினி முரலும் பாலையங் குரலின்,
நீடுகிளர் கிழமை நிறைகுறை தோன்ற,
ஒருதிறம், ஆடுசீர் மஞ்ஞை அரிகுரல் தோன்ற,
மாறுமாறு உற்றன போல் மாறெதிர் கோடல்
மாறட்டான் குன்றம் உடைத்து"

(பரிபாடல் : கஎ : கூ-உக)

## ௬௬. நல்லிறையனார்

"கொங்குதேர் வாழ்க்கை" எனத் தொடங்கும் குறுந்தொகைப் பாட்டைப் பாடிய இறையனார் வேறு: இவர் வேறு; நல்லிறையனார், குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவனைப் பாடிய புலவர்களுள் ஒருவராவர்; பாடற்குரிய பண்பாடு பல பெற்றவன் கிள்ளிவளவன்; தன் நிலத்திற்கு அரசிறையாகத் தரவேண்டிய பொருளைத் தர இயலாமை உண்டாய காலத்தே அரசவை வந்து, இயலாமையினை எடுத்துக் கூறிய புலவர் ஒருவர்க்கு, அவர் தர வேண்டிய நிலவரியினை நீக்கியதோடு, பெரும் பொருளும் கொடுத்தளித்த பெருந்தகையாளன்; புலவர் ஒருவர் வேண்டினார் என்பதற்காகவே, கொல்லும் கருத்துடன் தன் யானையின் காற்கீழிட்ட பகையரசன் மக்கள் இருவரையும் உயிரோடு போகவிடுத்த உயர்பேராளன், பெரும் புலவனும் ஆவன். அத்தகையானைப் பாடிப் பெருமையுற்றார் நம்புலவர் நல்லிறையனாரும்.

புலவர்தம் வறுமை போக்கி வாழ்வளித்தல் தம் கடனும் எனக் கொள்ளும் அறிவுடையார் எவரும் இல்லாத காலத்தும் அவ்வறிவுடையனாய், அருள்செய்ய வல்லான் கிள்ளிவளவனே என உணர்ந்து அவனை அடைந்து பாடிய புலவர், தாம் பாடிய அப்பாட்டில், அவனுக்குரிய காவிரியைப் புகழுங்கால், அதுவும் அவன் இயல்பே உடையது என்று கூறுவார், அது, "ஆற்றுப் பெருக்கற்று அடிசுடும் அக்காலத்தும் ஊற்றுப் பெருக்கால் உலகூட்டும்" உயர்வுடையது; அக்காவிரி பாயும் நாட்டையுடைய அவனும், அவ்வருள் அறம் உடையனவன் என்று கூறும் பகுதி பாராட்டற்குரியதாமன்றோ?

"கோடை ஆயினும், கோடா வொழுக்கத்துக்
காவிரி புரக்கும் நன்னாட்டுப் பொருந!"

(புறம் : ௩௯௩.)

## ௪௫. நல்லெழுனியார்

தகடூர் ஆண்ட அதிகமான் நெடுமானஞ்சியின் வழி வந்தார், 'எழுனி' என அழைக்கப்பெறுவர்; நல்லெழுனியாரும் அவன் வழிவந்தவராதல் வேண்டும். திருமாலைப் பாராட்டி இவர் பாடிய பாட்டொன்று பரிபாடற்கண் இடம் பெற்றுளது.

கார்ப்பருவம் வந்துற்றதாக, கருத்து எழுந்த பெரிய மேகத்தைத், திங்களும் ஞாயிறும் இருபாலும் இருந்து அணிசெய்வதேபோல, சங்கும் சக்கரமும் இருபுறமும் விளங்க ஏந்திய கைகளையுடைய திருமால், எனப் புலவர் காட்டும் திருமால் காட்சி, சிலப்பதிகாரத்தே அடியார்க்கு நல்லார் காட்டும்,

> விரிகதிர் ஞாயிறும், திங்களும் விளங்கி
> இருமருங்கு ஓங்கிய இடைநிலைத் தானத்து
> மின்னுக் கோடி யுடுத்து, விளங்குவில் பூண்டு
> நன்னிற மேகம் நின்றது போலப்
> பகையணங்கு ஆழியும், பால்வெண் சங்கமும்
> தகைபெறு தாமரைக் கையின் ஏந்தி
> நலங்கிளர் ஆரம் மார்பிற் பூண்டு
> பொலம் பூவாடையிற் பொலிந்து தோன்றிய
> செங்கண் நெடியோன்" (சிலம்பு : ௧௧ : ௪௬-௫௧)

காட்சியோடொத்து கவின்சிறந்து தோன்றுதல் காண்க.

> "பருவம் வாய்த்தலின் இருவிசும்பு அணிந்த
> இருவேறு மண்டிலத்து இலக்கம் போல
> நேமியும் வளையும் ஏந்திய கையால்
> கருவி மின் அவிர் இலங்கும் பொலம்பூண்
> அருவி உருவின் ஆரமொடணிந்த நின்
> திருவரை அகலம்." (பரிபாடல் : ௧௩ : ௭ - ௧௨)

*

## ௬௧. நல்வெள்ளியார்

இவர் பெயர், நல்வெள்ளியார் எனவும், மதுரை நல் வெள்ளியார் எனவும, நல்லொளியார் எனவும் பலவாறு காணப்படும். வெள்ளியார் என்ற பெயரை நோக்கி, இவரைப் பெண்பாற் புலவர் என்று சிலர் கருதுவர்; சுக்கிரனுக்கு வெள்ளி எனபதும் பெயராம் என்பதை நோக்கின், இவரைப் பெண்பாலர் என்றே கொள்வது அத்துணைப் பொருந்தாது என்பது விளங்கும். இவர் பாடியனவாக, நற்றிணையில் இரண்டு பாடல்களும், குறுந் தொகையில் ஒன்றும், அகததில் ஒன்றுமாக நான்கு பாடல்கள் உள்ளன

தலைவர் சென்ற காட்டில், வானம் இன்னே பெய்ய மின்னும்; ஆதலின் வருவர் எனத் தலைமகளைத தேற்றும் தோழி கூற்றும், அன்னை வெறியாடினுள் எனத் தலைவற்குக் கூறி வரைவொடு வரவேண்டுவோமாக எனத் தலைமகன் கேட்கத் தோழிகூறும் கூற்றும், நீ வருநதுணையும் வருந்தி வாடினுள் தலைவி எனும் தோழி கூற்றும், அறத்தொடு நிற்கும் தலைமகள் கூற்றும் தோன்ற அவர் பாடிய பாடல் கள் படித்தற் கினியனவாம்.

"எல்லார்க்கும் நன்றாம் பணிதல்; அவருளும் செல்வர்க்கே செல்வந்தகைத்து" என்றதை உட்கொண்டு, தலைவன்பால் தோன்றிய பணிவுடைமையினைப், "புரவலன் போலும் தோற்றம் உறழ்கொள, இரவல் மாக்களிற் பணி மொழி பயிற்றி" (அகம். ௩௨) எனக் கூறுவதும், அன்பால் உருகும் உள்ளத்திற்கு மழைபெய்யக் கரைந்த மண்ணை உவமையாக்கி, "இடுபெயல் மண்ணின்ஞெகிழ்பு அஞர் உற்ற என்உள்" எனக் கூறுவதும் நயம் செறிந்து காணப்படும். (அகம் : ௩௨.)

## ௬௭. நற்றங்கொற்றனர்

குறிஞ்சித்திணை தழுவிய நற்றிணைப் பாட்டொன்று, நற்றங்கொற்றனர் பாடியதாகக் காணப்படுகிறது என்பதல்லது இவர் வரலாறாகப் பிற எதுவும அறிதற்கில்லை. களவொழுக்கம் மேற்கொண்டு ஒழுகும் தலைவன், இடையிடையே பிரிந்துபோவதால், தான் வருந்துவதையும், அவ்வருத்தத்தால் தன் நலம் கெடுவதையும், அவனுக்கு உணர்த்தி, விரைந்து வந்து வரைந்துகொள்ள விரும்பும் தன் விருப்பத்தினை அவனுக்கு அறிவிக்க விருமபிய தலைவி, ஒருநாள் அவன் தன் வீட்டினபுறத்தே வநதுளான் என்பதறிந்து, அவன் கேட்குமாறு, தன் தோழியை முன்னிலைப் படுத்தி, "தோழி! அழகிய வேலைபபாடமைந்த தோள்வளை வேண்டி, அது பெறுமையால் அழுதேனுக, நம் தந்தை, நம தலைவன், நமமைவிட்டு இடையிடையே பிரிநதுபோய் விடுதலை அறிநதான்போல, யான் வெறுத்துக கழற்றினும் கழலாததும, சிறிது நெகிழினும, தான் நிற்க வேண்டும் இடமவிட்டு நீஙகாததுமாய மிகச சிறிய வளையினைச் செய்து, செறிதது, தலைவன் பிரிவால் உண்டாம் நம் தோளின் துவட்சி, பிறர்க்குப் புலனுகாவாறு செய்து விட்டான்," என்று கூறினுள் எனப் பாடிய பாட்டு, பொருள் இன்பம் பயந்து பொலிவுற்று விளஙகுகிறது.

புலவர் பாடிய பாட்டு, அவர் ஒரு கைதேர்ந்த மருத்துவர்; மருத்துவத் தொழிலை மாசறக் கற்றவர் என்பதையும் நமக்குப் புலனுக்குகிறது, "நோய் நாடி, நோய் முதல்நாடி, அது தணிக்கும வாய்நாடி வாய்ப்பச் செயல்;" "உற்றுன் அளவும், பிணி அளவும், காலமும் கற்றுன் கருதிச் செயல்." இவை வள்ளுவர் கண்ட மருத்துவ முறை; இம்முறையினை நன்கு அறிந்தவர் நம் புலவர்; தீர்தற்கரிய நோயுடையான் ஒருவன், அதைத் தீர்க்கவல்ல மருத்துவன் ஒருவன்பால் சென்று, "ஐயா! எனக்கு வந்துள்ள நோய்இது; ஆயினும், நான் வேண்டும் நன் மருந்து இது; ஆகவே அதைத் தருக!" என வேண்

டின், மருத்துவன், அவன் வேண்டும் மருந்தை அளிக்காது, அவன் நோயறிந்து, அந்நோய் போதற்காம் அரிய மருந்து எது என ஆராய்ந்து அம்மருந்தினையே கொடுப்பன்; கொடுத்தல் வேண்டும்; அவ்வாறு கொடுப்போனே நல்ல மருத்துவனாவன்; மருத்துவத் தொழிலின் இன்றியமையாச் சிறப்புடைய இவ்வுண்மையினைப் புலவர் நன்கு அறிந்துள்ளார்; தன் மகள், அழகிய தோள்வளை வேண்டினளாயினும், அதைத் தராது, அவட்கு அப்போது வேண்டுவது அவள் கையினின்றும் கழலாச் சிறுவளைகளே என அறிந்து அவற்றை அளித்த தந்தை செயல், நன் மருத்துவன் செயல் போலாம் என உவமை காட்டியதிறம், புலவர்தம் புலமைக்கும், அவர்தம் உலகியல் அறிவிற்கும் பெருமையளித்து நிற்கிறது:

"திருந்துகோல் எல்வளை வேண்டி யான் அழவும்,
அரும்பிணி உறுநர்க்கு வேட்டது கொடாது,
மருந்துஆய்ந்து கொடுத்த அறவோன் போல,
என்னை வாழிய பலவே! பன்னிய
மலைகெழு நாடனொடு நம்மிடைச் சிறிய
தலைப்பிரிவுண்மை அறிவான் போல
நீப்ப நீங்காது, வரின் வரை அமைநது,
தோட்பழி மறைக்கும் உதவிப்
போக்கில் பொலந்தொடி செறீஇயோனே."

(நற்: கஙௌ)

---

## ௬௮. நற்றமனுர்

நற்றமனுர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம்பெற்றுளது. மணம்புரிதற்காம் பொருள்வேண்டிப் பிரிந்துசென்ற தலைமகன் விரைந்து வந்திலன்; அதனுல் வருந்தினுள் தலைவி; கைவளை கழன்று போமாறு தோள்கள் மெலிந்துவிட்டன; கண்கள் ஒளிகுன்றி அழகிழந்துவிட்டன; நெற்றியில் பசலையும் பாய்ந்துவிட்டது; தலைமகளின் இயல்பறிந்த ஊரார், அலர்தூற்றிப் பழிக்கவும் தொடங்கிவிட்டனர்; அவர் அலர்கேட்டுப் பெரிதும் வருந்தினுள் தலைவி; அவள் துயர் துடைக்க விரும்பிய தோழி, பிரிந்துசென்ற நம் தலைவர், நம்மாட்டுப் பேரன்புடையர்; ஆகவே, அவர், நாம் வருந்த நெடிதுநாள் நில்லார்; விரைவில் வந்தருள்வர்; வருந்தற்க எனக் கூறினுள்; தோழியின் இவ் அன்புரை, தலைவியின் உளத்துயரை ஓரளவு போக்கிற்று; அதனுல் சிறிது மகிழ்ந்த தலைவி, "தோழி! தலைவர் வருவர் எனக் கூறிய நின் சொல், வெப்பம் மிக்க உலையில், கொல்லன், பனைமடல்கொண்டு தெளித்த சிலவாயநீர், அவ்வுலை நெருப்பை அடியோடு அழிக்காது எனினும், சிறிதாவது அழித்தலைப்போல், என் துயரை ஓரளவு குறைத்தது; நீ வாழ்க!" எனக் கூறி வாழ்த்தினுள். தலைவியின் இக்கூற்றினைப் புலவர் மிகவும் திறம்படப் பாடியுள்ளார்.

"தோளே தொடி கொட்பு ஆனு; கண்ணே
வாளீர் வடியின் வடிவிழந் தனவே;
நுதலும் பசலை பாயின்று...என்று
வெவ்வாய்ப் பெண்டிர் கௌவை தூற்ற
நாமுறு துயரம் செய்யலர் என்னும்
காமுறு தோழி! காதலங் கிளவி,
இரும்புசெய் கொல்லன் வெவ்வுலைத் தெளித்த
தோய்மடற் சின்னீர் போல
நோய்மலி நெஞ்சிற்கு ஏமமாம் சிறிதே." (நற்: ௧௩௩)

---

## ௱௨௧. நாகம்போத்தனார்

போத்தன் என்பது புலவர்தம் இயற்பெயர்; நாகன், அவர் தந்தை பெயர்; போத்தனூர் எனும் பெயருடைய ஓரூர், கோவை மாவட்டத்தில் உளது. புலவர் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் இடம் பெற்றுளது. வினைமேற்கொண்டு பிரியக் கருதிய தலைமகன் ஒருவன், கார்காலத் தொடக்கத்தே வருவன் எனக் கூறிச்சென்றான். அவன் சொல்லைத் தேறி ஆற்றியிருந்தாள் தலைவி; கார் காலம் தொடங்கிவிட்டது; செம்மண் புழுதி நிறைந்த மேட்டு நிலத்தே வளர்ந்து, காற்றால் அலைப்புண்டு கிடக்கும் வரகின் இலையை, நாட்காலத்தே வந்த மான் குட்டியொன்று கடித்துத் தின்பதைக் கண்டாள்; அதனால் கார்காலம் வந்துவிட்டது என்பதைக் கண்டு கலங்கினாள்; தலைவியின் கலக்கம் கண்ட தோழி, அவளை அடுத்து, "தோழி! நீ காணும் இக்கார்காலக் காட்சி, தலைவர் சென்ற நாட்டின் கண்ணும் உண்டு; அவற்றைக் காணும் அவர், 'இக்காட்சியைக் காணும் தலைவியின் கைவளை கழன்று உகாமையோ அரிது' என எண்ணுவர்; ஆகவே, அவர் நில்லாது வருவர்; வருந்தற்க," எனக் கூறித் தேற்றினாள். தோழியின் கூற்றினைப் பாட்டாக்கித் தந்துள்ளார் புலவர்:

"செவ்விகொள் வரகின் செஞ்சுவல் கலித்த
கௌவை நாற்றின் கார்இருள் ஓர்இலை
நவ்வி நாண்மறி கவ்விக் கடன்கழிக்கும்
காரெதிர் தண்புனம் காணின் கைவளை
.......................... ..... .........
சோர்குவ அல்ல அன்பர்கொல் நமரே."

(குறுந். ௨௮௨)

## ௫௦. நாமலார் மகன் இளங்கண்ணன்

நம் புலவர், நாமலார் என்பார்தம் மகனார்; இளங் கண்ணன் எனும் இயற்பெயரினர் என அவர் பெயர் அறி விக்கும் வரலாறன்றி வேறு எதையும் அறிதற்கு இல்லை.

சென்ற வினைமுடித்து வீடுநோக்கி வரும் தலைமகன் தன் மனையகத்தே உறையும் தன் மனைவியையும், ஆழ்ந்த நீரில் ஒன்றையொன்று முரணிநிற்கும இரு கயல்மீன் களைப்போலும் கண்களையும, இனிய சொற்களையும் உடைய அவள் அழகையும், தான் இல்லாமையால் வருந்தும் அவள் துயர்நிலையினையும் எண்ணினான்; உடனே அவள் இருக்கும் இடத்தை விரைந்தடைய விரும்பினான்; மாலைக்காலம் வரு வதற்குமுன் ஆங்குச் சென்றடையானாயின், இடைவழியில் ஆணும் பெண்ணுமாய மானினங்கள் மகிழ்நது ஆடும் காட்சியைக் கண்டு தானும் வருந்தவேண்டிவரும் என உணர்ந்தான், உடனே பாகனை விளித்து, "பாகனே! நம் தேரிற்பூட்டிய குதிரைகள் காற்றெனக் கடிதுசெல்லும் இயல்புடையன என்பதை அறிவேன்; அவை அவ்வாறு செல்லுமாறு செலுத்த வேண்டுவது நின் கடன், மாலை வாராமுன் மனையடையுமாறு கடவுவாயாக" என வேண்டி னான். தலைவன் வேட்கை விளங்கும் புலவா பாட்டொன்று குறுந்தொகைக்கண் வந்துளது:

> "பரல் அவல்படு நீர்மாந்தித துணையோடு
> இரலை நன்மான் நெறிமுதல் உகளும்
> மாலைவாரா அளவைக் கால்இயல்
> கடுமாக் கடவுமதி பாக! நெடுநீர்ப்
> பொருகயல் முரணிய உண்கண்
> தெரிதீங் கிளவி தெருமரல் உயவே." (குறுந் : ௨௫௦)

தனித்துக் கிடக்கும் தலைவி, நீர்ததும்பும் கண்ண ளாய்க் கலங்கி நிற்கின்றாள் என்பதைப் பாகனுக்கு உணர்த் தும் தலைவன், அவள் கண்களுக்கு ஆழ்ந்த நீரில் ஒன்றோ டொன்று முரணிநிற்கும் கயல்மீன்களை உவமைகூறி, அம் மீன்களைப்போன்றே அவள் கண்களும் கண்ணீர் வெள் ளத்துள் ஆழ்ந்து கிடக்கின்றன என்பதை அறியவைத் தான் எனப் பாடிய பாடல் பாராட்டற்கு உரித்தாம்.

# ருக. நெடும்பல்லியத்தை

நெடும்பல்லியத்தனார் எனும் பெயருடைப் புலவர் ஒருவர் உளர் ; அவர் தாம் பாடிய பாட்டொன்றில், யாழ், ஆகுளி, பதலைபோலும் பல இசைக் கருவிகளைத் தொகுத்துக்கூறிச் சிறப்பித்துள்ளமையால் அப்பெயர் பெற்றார் என்ப. அக்காரணம் நம் புலவர்க்கும் பொருந்தும் எனக் கோடற்கு இடமின்று. நெடும்பல்லியத்தையார், நல்லிசைப் புலமை மெல்லியலாருள் ஒருவராவர். அழகிய பாட்டொன்று இவர் பெயரால குறுந்தொகைக்கண் இடம் பெற்றுளது.

தலைவனும், தலைவியும் மணம் புரிந்துகொண்டு மனையறம் மேற்கொண்டு வாழும் மனைக்குச் சென்றிருந்தாள் தோழி ; ஆங்குத் தலைவன், தலைவியைத் தனித்துக் கண்டு அளவளாவ விரும்பும் விரைவினைக் கண்டாள், தலைவனிடத்தே சென்றாள் ; “ ஐய ! தலைவி, நினக்கு மிகவும் எளியளாய், நின் அருகிலேயே இருக்கும் இக்காலத்திலேயே அவளைக் கண்டு அளவளாவ, இவ்வளவு விரைவுகாட்டும் நீ, கார்த்திகைப் பிறைபோல், யாங்கள் காண்டற்கு அரியராகிய களவுக்காலத்தில் இவளைக்கண்டு அளவளாவ, நீ எத்துணை விரைவுற்றனையோ ? அதை எண்ணிப்பார்க்கும் என் உள்ளம் மிகவும் வருந்துகிறது,” என்று கூறி அவன் அன்பினைப் பாராட்டினாள்.

தோழியின் பாராட்டுரையினைப் பாட்டாக ஆக்கித் தந்த புலவர், தலைவியைத் தன் மனையகத்தே பெற்றுள்ளமையால், வேண்டும்போதெல்லாம் தன் வேட்கையினைப் போக்கிக்கொள்ளும் வாய்ப்புடைய அவன், அதற்காக மிகவும் அல்லற்படுதல் நீரில் இறங்கி, ஆம்பல் போலும் மலர் கொய்வார், நீர் வேட்கையுற்றவழி, அவ்வேட்கை போக்கும் நீரிடையே இருந்தும், வேட்கை நீங்க அல்லலுற்று விரையும் அறியாமை போலாம் என்று கூறிய உவமை உயர்ந்த புலமை வாய்ந்ததாம்.

பிறை தொழும் வழக்கம் பண்டைக்காலத்திலும் உண்டு என்பதையும் புலவர் குறித்துள்ளார் :

“ அயிரை பரந்த அந்தண் பழனத்து
ஏந்தெழில் மலர தூம்புடைத் திரள்கால்
ஆம்பல் குறுநர் நீர்வேட் டாங்கு இவள்
இடைமுலைக் கிடந்தும் நடுங்கலானீர் ;
தொழுதுகாண் பிறையிற் றோன்றி, யாம் நுமக்கு
அரியம் ஆகிய காலைப்
பெரிய நோன்றனிர், நோகோ யானே.”

(குறுந் : கஎஅ)

---

# ௫உ. நெய்தற் கார்க்கியன்

கவுதமன் என்பதேபோல், கார்க்கியன் என்பதும் ஒரு முனிவர் பெயராம்; அவர் பெயர், நம் புலவர்க்கும் இடப் பெற்றுளது; தாம் பாடிய பாக்கள் தோறும், குறிஞ்சி ஒழுக்கமே நிகழ, நெய்தற் கருப்பொருள் தந்து பாடிய சிறப்பால் புலவர் நெய்தற் கார்க்கியன் என அழைக்கப் பெற்றுளார்.

தலைவன் குறைமுடிப்பதாக வாக்குறுதி அளித்து வந்த தோழி, தலைவிபாற் சென்று, "தோழி! தலைவன் ஏறிவந்த கொடிஞ்சியொடு கூடிய நெடிய தேர், மணி ஒலிக்க வந்தது நம்மைக்காண; நம்மைக் காணவந்த அத் தேரை, நாம் ஏற்றிப் போற்றியிருத்தல் வேண்டும்; தம்மை நோக்கி வருவார்தம் குறையைப் போக்கித் துணைபுரிதல் தகுதியுடையார்தம் தலையாய கடனும்; அதனை யாம் செய் திலேம்; அதனால் நாணம் இழந்தோம் நாம், இன்மை உரைத்தார்க்கு அது நிறைக்கலாற்றாக்கால் தன் மெய் துறத்தலே தலையாய அறமாம, அதையும் நாம் செய்தி லேம்; நம் செயல் எனக்கே பெரிதும் வருத்தமாயுளது; நின்பாற்கொண்ட அவன் காமம் அளி பெருமையான் அழிந்துவிடுமோ எனவும் அஞ்சுகின்றேன்" என்றெல லாம கூறி அவனை ஏற்குமாறு செய்தாள். தோழியின் இக் கூற்றினைப் பாட்டாக ஆக்கியுள்ளார் புலவர்:

"கொண்கன் ஊர்ந்த கொடிஞ்சி நெடுந்தேர்
தெண்கடல் அடைகரைத் தெளிமணி ஒலிப்பக்
காணவந்து நாணப் பெயரும்;
அளிதோ தானே காமம்;
விளிவது மன்ற நோகோ யானே." (குறுந் : உகஉ)

தலைவன் வரைந்து கொள்ளாமல் தனித்து வாழும் வாழ்வு தாங்கற்கரிய துயர் உடையது; அவ் வாழ்வில் நெடிதுநாள் வாழலும் இயலாது என்பதைத் தலைவி தன் ஊரின் மேலேற்றிக் கூறினள். எனப் பாடினர்:

"இன்னா உறையுட் டாகும்
சின்னாட்டு அம்ம! இச்சிறு நல்லூரே" (குறுந் : ௫௫)

---

# ௫௩. பக்குடுக்கை நன்கணியார்

நன்கணியார் என்பது புலவர்தம் இயற்பெயராம். இவர் பெயர்க்கு முன்வரும் பக்குடுக்கை யெனும் சிறப்பு, புலவர்தம் ஊர்ப் பெயரைக் குறிப்பதாம என்று கொள்வர் சிலர்; பக்கு என்பது பை எனப் பொருள்படும்; புலவர் முற்றத் துறந்த முனிவராதலின், பையையே உடையாகக் கொண்டிருந்தனர், அதனால், பக்குடுக்கை எனும் அடை, இவர் பெயர்க்குமுன் கொடுக்கப்பட்டுளது என்று கூறுவர் மற்றும் சிலர்; "ஒருவருக்கு உடுப்பவை இரண்டாக வேண்டியிருப்பவும, ஒன்றையே இரண்டாகப் பகுத்துடுக்கும் காரணத்தில், பக்குடுக்கை நன்கணியர் எனபபட்டார் என்றற்கும், ஒருவரது வறுமைநிலையைப் பக்குடுக்கை யெனச் சிறப்பிததுரைத்த நலங்கண்டு, சான்றோர் இவ்வாறு சிறபபித்துப பாராட்டினா என்றற்கும் இடனுண்டு" என்று எழுதுவாரும் உளர்.

உலகம் தோன்றியநாள் தொடங்கி இன்று வரையிலும், உலகில் போா ஓய்ந்திலது, போர் நிகழாத நாட்டையோ, அது நிகழாத காலததையோ காணல் அரிது; எங்கும் போர்; எபபொழுதும போர், காரணம் என்ன? மக்களிடையே காணும மன வேற்றுமையே அம்மன வேற்றுமை ஏன் உண்டாயிற்று? அவ் வேற்றுமையை உண்டாக்கி வளர்பபது எது? அதற்கு எத்தனையோ காரணங்களைக் காட்டுவர் அறிஞர், ஆயினும், நாம் வாழும் இவ்வுலகம், பொருளை அடிப்படையாகக் கொண்டு இயங்குவது என்ற அறிவுக்கண்கொண்டு நோக்குவார்க்கு, மக்கள்தம் மனவேற்றுமைக்கு, அம் மக்களிடையே நிலவும் பொருள்வேற்றுமையே தலையாய காரணமாம் என்பது எளிதிற் புலப்படும்; ஒருவன் செல்வத்தில் செழிக்கின்றான்; மற்றொருவன் வறுமையில் வாடுகின்றான்; ஒருவன் மாடிவீட்டில் வாழ்கின்றான்; மற்றொருவன் மண்குடிசையும் பெறமாட்டாமல் மண்ணிற் கிடந்து புரள்கின்றான்; ஒருவன் பட்டாடை புனைகின்றான்; மற்றொருவன் பழங்

கந்தலும் பெறமாட்டாது பரதவிக்கின்றான்; ஒருவன் வீட்டில் அறுசுவை உண்டி; மற்றொருவன் கையில், அவன் உண்டு எறிந்த எச்சில் இலை; இவ் வேறுபாடு, மக்கள் தம் உள்ளத்தே மன வேற்றுமையினை எளிதில் வளர்த்து விடுகிறது; அதனால், அம் மக்களிடையே போரும், குழப்பமும் புகுந்துவிடுகின்றன; இந்நிலை மேலும் நீட்டிக்க விடுதல் நன்றன்று, இந்நிலையினை மாற்றவேண்டுவது அறிவுடையார் கடனாம்; உலகின் நிலையினையும், அந்நிலைக்காம் காரணத்தையும் உள்ளவாறுணர்ந்த உயர்ந்தோர், அந்நிலையினை மாற்றி, நிலையான அமைதி நிலவும் அறவழிகளை அறிந்து அறிவித்தல் வேண்டும்; அதை விடுத்து, இந்நிலை இயற்கையின் விளைவு, அது ஆண்டவன் படைப்பு; அதை மாற்றுவது நம்மால் இயலாது; மாற்ற முயல்வதும் பாவம் என்று கூறுவது அறிவுடைமையாகாது.

இவ்வுண்மையினை இரண்டாயிரம ஆண்டுகட்கு முன்பே உணர்ந்தவர் புலவர் பக்குடுக்கை நன்கணியார். "ஒரு வீட்டில் துன்பந்தரும பிணப் பறையும், எதிர் வீட்டில் மகிழ்ச்சியூட்டும் மணப் பறையும ஒலிக்கவும், கணவனொடு கூடிவாழும் கவின்மிகு வாழ்வுடையாளொரு மங்கை மலர்சூடி மகிழவும, கணவனை இழந்தாளொரு காரிகை, கண்ணீர் விட்டுக் கலங்கவும் இயங்கும் உலகக் காட்சிகள், உண்மையில் உறுதுயர் தருவதாம்; படைக்குபபோதே, இவ்வாறு இருவேறுநிலை நிலைபெறவே படைததுவிட்டான் உலகைப் படைத்தோன் என்று கூறுவீராயின், அவ்வாறு படைத்த அவன், உண்மையில் அறிவற்றவனேயாவன்; படைத்த அவன், அக்கருத்தோடு படைததானல்லன்; அவ்வேற்றுமையை உண்டாக்கியவரும், அதை வளர்ப்பவரும் நாமே; ஆகவே, உலகின் இயல்புணர்ந்த உயர்ந்தோர், இவ் இன்னாமை ஒழித்து, இனிது தலைதூக்குமாறு உலகின் இயல்பினை மாற்றி அமைக்க முன்வருவாராக," என்று கூறும் புலவர்தம் பொருளுரை, உலகில் அமைதி காணவே அமைக்கப்பட்டது எனப் பறை சாற்றப்படும் உலக மக்கள் மன்றத்தே சென்று ஒலிக்குமாக.

"ஓர் இல் நெய்தல் கறங்க, ஓரில்
ஈர்ந்தண் முழவின் பாணி ததும்பப்,
புணர்ந்தோர் பூவணி அணியப், பிரிந்தோர
பைதல் உண்கண் பனிவார்பு உறைப்பப்,
படைத்தோன் மன்ற அப் பண்பிலாளன் ;
இன்னாதம்ம இவ்வுலகம் !
இனிய காண்க இதன் இயல்புணர்ந்தோரே."

(புறம் : கஅ௯ச)

இருவேறு நிலைநிற்க இவ்வுலகைப் படைத்தவன் பண்பிலாதவனுவன் எனக் கூறும் புலவர்தம் பொருளுரை. 'இறந்தும் உயிர்வாழும் இழிநிலை உண்டாகவே படைத்துளான், உலகைப் படைப்போன்' எனக் கூறுவீராயின், அவ்வாறு படைதத அவன் பரந்து கெடுக—"இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின், பரந்து கெடுக உலகியற்றியான்" எனக் கூறும் வள்ளுவர் வாக்கோடு ஒற்றுமை கொண்டு உயர்ந்து தோன்றுவது காண்க.



# ருச. படைமங்க மன்னியார்

படைமங்க மன்னியார் என்பது இவர் இயற்பெயரா? அல்லது காரணப் பெயரா? இது காரணப பெயராயின், இது ஏன் அவருக்குப் பெயராயிற்று? அவர் இயற்பெயர் என்னையிற்று? இவ்வினைக்களுக்கு விளங்க விடையளித்தற்கு இல்லை. அவா இயற்பெயர் மறைநதுவிட்டது; இது அவர் காரணப் பெயர், தன்படைமுழுதும் கெட்டவிடத்தும், தளராது நினறு போராற்றி வென்ற வீரன ஒருவனைப் படைமங்க மன்னியான் எனப் பாராட்டிய சிறப்பால், இவர்க்கு இப்பெயர் உண்டாயிற்று எனக் கூறுவர் சிலர். இவர் பாடிய மகட்பாற் காஞசி மகிழ்தற்குரியது

நாரைகள், மருதமரக்கிளைகளில் வாழ்வதை வெறுப்பின், காஞசிமரக்கிளைகளில் சென்று தஙகும என்று கூறி, நாரை வாழ்தற்காம நீர்வளமும், மரமபல வளர்தற்காம மண்வளமும் உடையது எனத தோன்றசசெய்யும் திறங் கண்டு மகிழ்க.

"தெண்ணீரப், பொய்கைமேய்ந்த செவவரி நாரை
தேஙகொள் மருதின் பூஞ்சினை முனையின்,
காமரு காஞ்சித் துஞ்சும்." (புறம் : நடுக)

வருவார்க்கு வரையாது வழங்கும் எயினன் என்ற வள்ளல் ஒருவனையும், நலம்பல பெற்றுச் சிறந்த வாகை என்ற பெயருடைய அவன் ஊரையும் புலவர் தம்பாட்டில் பாராட்டியுள்ளார் :

"என்றும் வண்கை எயினன் வாகை அன்ன
இவள் நலம்." (புறம் : நடுக)

---

## ௫௫. பதுமனார்

பதுமனார், பெரும்பதுமனார், மீளிப் பெருமதனார் எனவரும் புலவர் தம் பெயர்களில் வரும் பதுமனார் எனும் சொல், அப்பெயருடைப் புலவர்கள், சைனசமயத் தொடர்புடையராவர் என்பதை உணர்த்தும் என்ப.

தலைவன் பிரிவுத்துயரால் வருந்தி உறக்கம் ஒழிந்திருந்த ஒரு தலைவி, இரவெல்லாம் கண்விழித்துக் காத்திருப்பவள், இடை இரவு மிக்க இருளை உடையதாக உளது; என் துயர் அறிந்து போக்க வேண்டிய தாயும், தமரும் அக்கவலை இலராய் இனிது உறங்குகின்றனர்; உலகத்து உயிர்கள் எல்லாம் தம் உணர்வு இழந்து ஒருங்கே உறங்குகின்றன; என் உயிர் போன்றுளாய தோழியும் உறங்கி விட்டாள்; இந்நிலையில் உறங்காதிருப்பவள், உறுதியாகக் கூறுகிறேன், யான் ஒருத்தியே என்று கூறி வருந்தினாள் எனப் பொருளமையப் பாடிய புலவர் பாட்டு, சிறுசிறு சொற்றொடரான் ஆக்கப்பெற்று அழகுற்று அமைந்துளது.

> “நள்ளென் றன்றே யாமம், சொல்லவிந்து
> இனிது அடங்கினரே மாக்கள், முனிவின்று
> நனந்தலை உலகமும் துஞ்சும்,
> ஓர்யான் மன்ற துஞ்சா தேனே.”
>
> (குறுந் : ௬)

## ருக. பராயனூர்

பராயனூர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது. தன்னாற் காதலிக்கப் பட்டாளொரு பெண், தனியே, கடற்கரைச் சோலைக்கண் நின்றாளை நோக்கி, "பார்க்கப் பார்க்க குறையாப் பேரழகுடையாய்! தோழியரோடு கூடி ஆடி மகிழ்தலும் செய்யாது, நெய்தல் மலர்கொய்து மகிழ்ந்து சூட்டிக் கோடலும் புரியாது ஈண்டு நிற்பாய் யாரையோ நீ; கடலகத்தே வாழும் கடற்றெய்வமோ? கழியருகே நிற்பாளொரு காரிகையோ? விரைந்து விடைதருவாயாக; நின்னைப் பணிந்து வேண்டுகிறேன்," என்று கூறினானாக, அவன் கூற்று அவட்கு உள்ளமகிழ்ச்சியை உண்டாக்க, அம்மகிழ்ச்சி, வாயகத்தே தோன்றிய சிறுநகை வழியாகவும், பெரிய கண்வழியாகவும் புலப்படக் கண்டு களிமகிழ் வெய்தினான் இந்நிகழ்ச்சியை அழகிய பாட்டாக ஆக்கித் தந்துள்ளார் புலவர்.

"ஒள்ளிழை மகளிரொடு ஓரையும் ஆடாய்;
வள்ளிதழ் நெய்தல் தொடலையும் புனையாய்;
விரிபூங் கானல் ஒருசிறை நின்றோய்
யாரையோ? நிற்றொழுதனம் வினவுதும்;
கண்டோர் தண்டா நலத்தை, தெண்திரைப்
பெருங்கடல் பரப்பின் அமர்ந்துறை அணங்கோ?
இருங்கழி மருங்கு நிலைபெற்றனையோ?
சொல் இனி மடந்தை! என்றனென்; அதன் எதிர்
முள்ளெயிற்று முறுவலும் திறந்தன;
பல்லிதழுண்கணும் பரந்தவாற் பனியே."

(நற்: கருரு)

# ருஎ. பறநாட்டுப் பெருங்கொற்றனர்

பெருங்கொற்றனர் எனப் பெருமையாக அழைக்கப் பெறும் புலவர்க்குரிய நாடாகக் கூறப்படும் பறநாடு குறித்து எதுவும தெரிந்திலது; இவர் பாடிய பாட்டொன்று நெடுந்தொகை நித்திலக்கோவையில் இடம் பெற்றுளது.

கார்காலத் தொடக்கததே வருவேன் என உறுதி கூறிச் சென்ற தலைவன் விரைவில் வநதிலனே என வருந்தி நின்ற தலைவியின் வருத்தததினைப போக்க எண்ணிய தோழி, வேனிலின் இறுதிக்காலத்தே, கார்மேகம் கால் வீழத்தொடங்குவதைக் காட்டிக், காாகாலம் தொடங்கும் காலம் அண்மையில் உளது; ஆகவே அவர் விரைவில் வந்துவிடுவர்; வருந்தற்க என்று கூறுவாள், கணவன் வரும்வரை ஆற்றியிருப்பதே கற்புடை மனைவியர்க்குக் கடனும் என்பதை அவட்கு அறிவூட்டுவான் வேண்டி, அவளைக் "கற்பான் மேம்பட்ட தலைவியே!" என விளிதது, "பலாவும், மூங்கிலும் செறிந்த மலைச்சாரல் களில், யானைகள் கூட்டமாகச் செல்வதைப் போல், ஞாயிறு மறையுமாறு பரவி எழுந்து, பாம்பின் படம் அழிய இடிதது, ஆலியும் அழிதுளியும் கொண்டு, நின் புயல்போல் கறுதத மேகம் கால் இறங்கிவிட்டது; இனி, இவ்வூரார் கூறும் அலருரை அடங்குமாறு காதலர் வந்து சேருவர்; மெல்ல நடந்துவந்து, கால் இறங்கிய மேகக் காட்சியினைக் காண்பாயாக," என்று கூறினள் என்ற கருத்தமைய வந்துளது புலவர் பாடிய அப்பாட்டு. (அகம்: ௩௨௩)

## ҧஅ. பனம்பாரனார்

ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியத்திற்குப் பாயிரம் அளித்த பெருமை உடையவரும், "வடவேங் கடம், தென்குமரி ஆயிடைத் தமிழ் கூறு நல்லுலகம்" எனத் தமிழகத்திற்கு எல்லைவகுத்துக் காட்டியவருமாய பனம்பாரனார் ஒருவர் உளர், அவர் அகத்தியனார் மாண வருள் ஒருவராவர், தொல்காப்பியனாரோடு ஒருங்கிருந்து கற்றவர் என்றெல்லாம் கூறப்பெறுவர்; அவரும், குறுந் தொகை ஐம்பத்திரண்டாம் செய்யுளைப் பாடிய புலவர் பனம்பாரனாரும் ஒருவரோ? வேறோ? உறுதியாகக் கூறு தற்கில்லை.

தலைவன் வரைவு வேண்டிவர, அவனைத் தமர் ஏற்றுக் கொண்டதை அறிந்து மகிழ்ந்த தலைவிபால், "தோழி! இன்றைய இம்மகிழ்ச்சிக்கு யானே காரணம், ஊரார் கூறும் அலர் உரையினைக் கேட்டும், அன்னை, இற்செறித் தும் வெறியாட்டெடுத்தும் கொடுமை செய்வது கண்டு, அணங்கால் வருந்தியவளைப்போல் நீ வருந்துவது கண்டு, யானும் வருந்தி, சிறிது சிறிதாக, நும் களவொழுக்கம் நம் தமர்க்குப் புலனும் வண்ணம் அறத்தொடு நின்றேன்; அதன் விளைவே, இன்று, தமர் தலைவனை வரைவேற்றுக் கொண்டது" என்று கூறினாள். துணைபுரிந்த தோழியின் கூற்றினைப் பாட்டாக்கித் தந்துள்ளார் புலவர் :

"ஆர்களிறு மிதித்த நீர்திகழ் சிலம்பில்
சூர் நசைந்தனையையாய் நடுங்கல் கண்டே,
நரந்தம் நாறும் குவையிருங் கூந்தல்
நிரந்திலங்கு வெண்பல் மடந்தை
பரிந்தனென் அல்லனோ இறை இறையானே."

(குறுந் : ருஉ)

---

## ருசுல. பாண்டரங்கண்ணனார்

பாண்டரங்கண்ணனார், இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளியைப் பாடிய புலவர்களுள் ஒருவர்; இராசசூயம் வேட்ட பெருநற்கிள்ளி, சேரமான் மாரிவெண்கோ, பாண்டியன் கானப்பேரெயில் தந்த உக்கிரப்பெருவழுதி ஆய இரு வேந்தர்களோடும் நட்புப் பூண்டு விளங்கிய நல்லரசனாவன; ஔவையாரால் பாராட்டப்பெற்ற பெருமை உடையவன்; தேர்வண்மலையனைப் படைத் துணையாகக்கொண்டு பகைவரை வென்றவன். இவன் படையால் பாழான பகைவர் நாடுகளைக் கண்ட புலவர், வருந்தி, அழிவுத் தொழிலை அவன் மேலும் மேற்கொள்ளாவாறு அறிவூட்ட விரும்பினார்.

"கொன்றபின் அன்றோ முதலைநின்றழும்?" என்ப, ஆத்திரத்தில் அறிவிழந்து நிற்பார்க்கு அறிவூட்டல் ஆகாது. அந்நிலையில் அறிவூட்ட முற்படுதல் அறிவுடைமையுமாகாது; அவர் ஆததிரம் அடங்கிய பின்னா, அவர் அருகில் அமர்ந்து, அவர் ஆத்திரத்தால் உண்டான அழிவின் பெருமையினை அடுக்கிக் கூறியக்கால், என் ஆத்திரத்தின் விளைவா இத்துணைக் கேடும்? என்ற எண்ணம் எளிதில் தோன்றலும் கூடும, மக்கள்தம் இம் மன இயல்பினை உணர்ந்த புலவர், இராசசூயம்வேட்ட பெருநற்கிள்ளிபால் சென்று, "கருமபுவளர் கழனியல்லது, பிற காடு எதையும் கண்டறியா வளம்செறிந்த வயல்களால் விளக்கம் உற்ற பகைவர் நாட்டகத்தே பெருந்தீயெழப் பெரும்போர் வென்றனை நீயும், பகைவர்தம் நெலவளம் மிக்க வயல்களைக் கொள்ளையிட்டும், அப்பகைவர்தம் மனையகத்து மரங்களையே விறகாக்கொண்டும், அப்பகைவர் உண்ணும்நீர் கொள்ளும் காவற்குளங்களில் களிறுகளைக் குளிப்பாட்டியும், அவர் ஊரகததே தீ பரவச்செய்தும் பாழ்செய்து பெருமையுற்றன நின்படையும்," எனப் பகைவர் நாட்டினைப் பாழ்செய்த அவன் ஆற்றல்,

அவனுக்கு அத்துறையில் துணைபுரிந்த அவன் படைப் பெருமை ஆகியவற்றைப் பாராட்டுவார்போல், அவனால் அவன் பகைவர் நாட்டகத்தே உண்டாய அழிவுகளை நிரலே காட்டி, அவன் அறிவுக்கண் திறக்கத் துணைபுரிந் துள்ளார் புலவர் ; ஒருவரோடொருவர் பகைத்துப் பெரும் போர் புரிதலே பெரும் பணியாம் எனக்கொண்டு வாழ்ந்த வேந்தர்களிடையே பிறந்த பெருநற்கிள்ளி, தம் காலத்தே வாழ்ந்த தம் பகையரசர்களோடு பெருநட்புடையனாய் விளங்கியது புலவர்தம் அறிவுரையால் போலும்! புலவர் தம் தொண்டின் பெருமைதான் என்னே !

“ விளைவயல் கவர்பு ஊட்டி,
மனைமரம் விறகாகக்
கடிதுறை நீர்க் களிறு படீஇ
எல்லுப்படவிட்ட சுடுதீ விளக்கம்
செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரிற் றோன்றப்
புலம்கெட இறுக்கும் வரம்பில்தானை ;
.. .. ..... .. .. ..... ........ ..... . ... .....
கரும்பல்லது காடறியாப்
பெருந்தண்பணை பாழாக
ஏம நன்னாடு ஒள்ளெரி ஊட்டினை.” (புறம் : கசு)

## ௬௦. பார்காப்பான்

உலகநாதன் என்பதேபோல்,பார்காப்பான் என்பதும், திருமாலுக்குரிய பெயர்களுள் ஒன்றுபோலும்; அப் பெயருடையராய நம் புலவர், பாரகாபரன் என்றும், பாரகரபரன் என்றும், பாரகாபான் என்றும் பலவாறு அழைக்கப்பெற்றுளார் என ஏடுகள் எழுதுகின்றன. இவர் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் இடம்பெற் றுளது.

"தோழி! கார்காலத் தொடக்கத்தே மலரும் இயல் புடைய கோங்கும் முதல்மலர் மலர்ந்துவிட்டது; பொருள்வயிற்சென்ற தலைவர் வந்துவிட்டார் என அறிவிக்க முன்வரும் தூதுவரும் வந்திலரே! என்னோடு துயிலுதலையும், துயிலுங்கால் அவர்க்கு அணையாகிப் பயன் தரும் என் கூந்தலையும் அவர் மறந்துவிட்டார் போலும்" எனக் கூறி வருந்தினாள், தலைவனைப் பிரிந்து தனித்துத் துயருறும் ஒரு தலைமகள் எனப் பாடியுள்ளார் புலவர்:

"கோங்கின்
தலையலர் வந்தன; வாரா தோழி!
துயிலின் கங்குல் துயில் அவர் மறந்தனர்;
பயில் நறுங் கதுப்பின் பாயலும் உள்ளார்;
செய்பொருள் தரல் நசைஇச் சென்றோர்
எய்தினரால் எனவரூஉம் தூதே." (குறுந் : ௨௫௪)

## ௬௰௧. பாலாசிரியர் நப்பாலனார்

பாலனார் என்பது இவரது இயர்பெயர்; ந, சிறப்பு இடைச்சொல்; நப்பாலத்தனார் என்ற பெயருடையார் ஒருவர் உளர், பாலாசிரியர் என்ற சிறப்பு இவர்க்கு ஏன் உண்டாயிற்று என்பது புலனாகவில்லை. இளம்பாலாசிரியர் என்ற சிறப்புடைய புலவர் சிலர் உளர்; அவர்கள் இளம் பால் என்ற ஊரினா என்று ஆராய்ச்சியாளர் கூறுவர். இளம்பாலாசிரியர் எனபதே பாலாசிரியர் என வந்ததாகக் கொள்ளின், இவரையும், இளம்பால் என்ற அவ்வூரின ராவர் என்று கொள்ளலாம்.

"இரும்பை உருக்கி வார்த்துச் செய்தாற் போன்ற வலிய கைகளையுடைய கானவன், யானை வேட்டம் சென்று, வெண்கடம்ப மரத்தின் மறைவிலே இருந்து அவ்வழிவந்த யானையை, ஆராய்ந்துகொண்ட அம்பு, அதன் மார்பில் தைக்குமாறு ஏவிக் கொன்று, தன் பகையைப் பாழாக்கும் வலிவு அமைந்த அதன் கொம்புகளைக் கொணர்ந்து, புல் வேய்ந்த தன் குடிசையைச் சூழ வேலியாக ஊன்றி, தன் வீட்டு மன்றத்தில் உள்ள பலாவின் பழத்தினின்றும் செய்த மதுவினை உண்டு மகிழ்ந்து, பின்னர்ச் சந்தன விறகால் சமைத்த சோற்றையும, ஊனையும, தன் சுற்றம் சூழ இருந்து உண்டு வாழவன்," எனக் கூறும கானவன் வாழ்க்கை நம் கண்முன் வநது தோன்றுமாறு செய்துள் ளார்.

"இரும்பு வடித்தன்ன கருங்கைக் கானவன்,
விரிமலர் மராஅம் பொருந்திக், கோல்தெரிநது,
வரிநுதல் யானை அருநிறத் தழுத்தி,
இகலடு முன்பின் வெண்கோடு கொண்டு,தன்
புல்வேய் குரம்பை புலர ஊன்றி,
முன்றில் நீடிய முழவுறழ் பலவின்
பிழிமகிழ் உவகையன், கிளையொடு கலிசிறந்து
சாந்த ஞெகிழியின் ஊன்புழுக்கு அயரும்."

(அகம்: ௧௭௨)

## கூஉ. பாலாசிரியர் நற்றமனார்

நற்றிணைப்புலவர் வரிசையுள், நற்றமனார் என்ற பெயருடையார் ஒருவர் உளர்; அவரின் இவர் வேறு என்பதை அறிவித்தற்கு, இவர் மதுரைப்பாலாசிரியர் நற்றமனார் என அழைக்கப்பெற்றுளார்; இவர் முன்னர்க்கூறிய பாலாசிரியர் நப்பாலனாருக்கு உறவினராதலும் கூடும் என்பதல்லது, இவர் குறித்து வேறு கூறுதற்கில்லை.

"ஐய! பெருமழை பொழிந்த நள்ளிரவில், குஞ்சரத்தைக் கொன்ற புலி, அவ்வெற்றிக்களிப்பால் முழங்கும் காட்டகத்து வழியில் வருதலை அஞ்சுகின்றேம், ஆகவே, இனி இரவில் வாரற்க" என இரவுக்குறியை மறுத்து, "நாளைமுதல், இவளும், யானும் தினைகாக்கச் செலகின்றேம்; ஆதலின், எங்கள் தினைப்புனத்தைச் சார்ந்து ஓடும் அருவிக்கரையில் காந்தட் பூ மலர்ந்திருக்கும் இடத்திற்கு வந்து பகற்காலத்திலேயே இவளைக் கண்டு செல்க" என்று கூறிப பகற்குறி நேர்வாள் போன்று, "அருவியாதலின் நீராட வருவாரும் உண்டு; காந்தள் மலரும் இடமாதலின், மலர்பறிக்க வருவாரும் உண்டு, ஆகவே, பகற்குறியும் பயனுறாது என அப்பகற்குறியையும் மறுத்து, "இருவகைக் குறியும் இயலாதாகலின் வரைந்து கொள்வதே வழியாம்" என்ற எண்ணம் தலைமகன் உளத்தே தோன்றச் செய்யும் தோழியின் திறம் தெரிவிக்கும் செய்யுளொன்று, இவர் பாடியதாக நெடுந்தொகைக்கண் வந்துளது.

மரங்கள் செறிந்து வளர்ந்துள்ளன; அம்மரங்கள் மிக மிக உயர்வுடையன என்று கூற விரும்பிய புலவர், மரங்களில் ஏறிஏறி வாழ்வதையே வழக்கமாகக் கொண்ட குரங்குகளாலும் ஏறமாட்டா மரங்கள் "மந்தியும் அறியா மரம் பயில் இறும்பு" என்று கூறிய நயம் நயத்தற்குரியதாம். (அகம்: கூஉ.)

---

# ௯௩. பாவைக்கொட்டிலார்

பாவை என்பது இளைய மகளிர் வைத்து விளையாடும் ஆடற்பொருள்களுள் ஒன்றாய பதுமை; கொட்டில் என்பது சிறு வீடு. மகளிர் மணலால் மனையமைத்து அதில் பாவையை வைத்து விளையாடினாராக, அம் மனையைப் பாவைக் கொட்டில் எனச் சிறப்பித்துப் பாடினமையால் புலவர் இப்பெயர் பெற்றார் போலும்.

வடநாட்டு வாழ்வினராய ஆரிய அரசர்கள், தமிழகத்தைத் தம் ஆட்சிக்கீழ்க் கொண்டுவர அன்றே முயன்றனர்; ஆனாலும், அவர் வெற்றி பெற்றாரல்லர்; இச் செய்திக்குச் சங்கப் பாக்கள் பலவும் சான்று பகர்கின்றன; ஆரியப் படையொன்று, மலையமான் திருமுடிக் காரிக்குரிய முள்ளூரைச் சூழ்ந்துகொண்டது என்றும், அப்படையை அவன் ஒருவனே அடித்துத் துரத்தினான் என்றும் நற்றிணைப் பாட்டொன்று கூறுகிறது:

"ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர்ப்
பலருடன் கழித்த ஒள்வாள் மலையனது
ஒருவேற்கு ஓடியாங்கு." (நற் : கஎ0)

இவ்வரலாற்றிற்கு மேலும் சான்றளிக்கும் ஒரு நிகழ்ச்சியைப் புலவர் பாவைக்கொட்டிலாரும் குறிப்பிடுகின்றார்; விற்படை, வேற்படைகளால் பெருமையுற்ற சோழர்க்கு உரியதும், வில்லரணால் சூழப்பெற்றதுமாய வல்லம் எனும் நகரை முற்றி, அதைச் சூழ உள்ள காவற் காட்டகத்தே தங்கிய ஆரியப்படை, தமிழரசன் ஒருவனால் முற்றும் அழிவுற்றது எனக் கூறுகிறது அவர் பாட்டு:

"வென்வேல்
மாரி அம்பின் மழைத்தோல் சோழர்
வில்லீண்டு குறும்பின் வல்லத்துப் புறமிளை
ஆரியர் படையின் உடைக." (அகம் : ௩௩௬)

இவ் வரலாற்று நிகழ்ச்சியோடு, மற்றும் இரு நிகழ்ச்சிகளையும் புலவர் குறிப்பிட்டுள்ளார். மக்களுக்கு அடங்காது

திரியும் விலங்குகளை அடக்கி ஆளும் மக்கள், இறுதியில் அவ்விலங்குகளினாலேயே மாள்வர் என்ப. யானை அறிந் தறிந்தும் பாகனையே கொல்லும் இயல்புடையது; யானை யொடு பழகும் பாகன், இறவாது உயிர் வாழ்தல், அவ் யானை அவனைக் கொல்லாமல் விட்டிருப்பதினாலேயே ஆம் என்றும், நெருஞ்சிப்பூ, ஞாயிறு கீழ்த்திசை யிருப்பின் கிழக்கு நோக்கும்; மேற்றிசைச் செல்லின், மேற்கு நோக்கும்; உச்சி வானத்திலிருப்பின், உச்சியை நோக்கும என்றும் கூறுகிறார் புலவர் :

"பாகன் நெடிது உயிர்வாழ்தல் காய்சினக்
கொல் களிற்றுயானை நல்கல் மாறே."

"சுடரொடு திரிதரும் நெருஞ்சி." (அகம் : ௩௩௬)

## கூச. பிரமசாரி

வாழ்நாள் முழுதும் மணம் செய்துகொள்ளாமலே, அருளறம் மேற்கொண்டு வாழ்ந்த அறவோருள், இவர் சிறந்தவராதலின், இவர் பிரமசாரி என்றே பெயரிடப்பட்டுள்ளார்; வெறிவிலக்கு அறத்தொடு நிற்கும் துறையமைய வந்த பாட்டொன்று புலவர் பெயரால் நற்றிணைக்கண் வந்துளது.

தலைவி யொருத்தி, தன்னைக் காதலிக்கும் தலைவன், தவறாது வந்து தலையளி செய்யுங்கால், அவன் வரும் வழியேதம் கருதியும், அவன் வாராக்கால், தன் தனிமை கருதியும் வருந்தி வாடினாள்; தன் மகள் வாட்டத்திற்காம் காரணம் இஃது என அறியமாட்டா அவள் தாய், வேலனை வேண்ட, அவன் முருகன் அணங்கியதால் உண்டாயது எனக் கூறினன் உடனே, தாய் வெறியாட்டெடுக்கத் தொடங்கிவிட்டாள்; இந்நிலை மேலும் நீட்டிக்க விடுதல் நன்றன்று; உண்மையினை உள்ளவாறு உரைத்து விடுதலே நன்று என உணர்ந்தாள் தோழி; ஆயினும், அதை விளங்க உரைத்தல் நாகரிகமன்று எனக் கொண்டாள்; தாய் எடுக்கும் வெறியயாகளத்திற்குச் சென்றாள்; ஆங்கே தாய் கேட்குமாறு, "முருகா! தலைமகளுக்குற்ற நோய் நின்னால் வந்ததன்று என்பதை நீ நன்கு உணர்வை; உணர்ந்தும், அது நின்னால் வந்தது எனக் கூறி, இவ் வேலன் எடுக்கும் இவ் விழாவிற்கு வருதல் தகுதியன்று; தகுதியிலாச் செயல் புரிநத நீ, கடவுளேயாயினும், அறிவற்றவனே ஆகுவை," எனக் கூறி உண்மையினை யுணர்த்தினாள் எனப் பாடியுளளார் புலவர்:

"நாடன், மார்பு தரவந்த படர்மலி அருநோய்
நின்னணங்கு அன்மை அறிந்தும், அண்ணாந்து
காரநறுங் கடம்பின் கண்ணி சூடி
வேலன் வேண்ட வெறிமனை வந்தோய்!
கடவு ளாயினும் ஆக,
மடவை மன்ற; வாழிய! முருகே!" (நற்: கூசு)

## கூ௫ பிரமனார்

இவர் வரலாறு குறித்து ஒன்றும் விளங்கவில்லை; நிலையாமை கூறி அறம் வலியுறுத்தும் இவர் செய்யுள் பாராட்டற் குரியதாம்.

குன்றுகளும், மலைகளும் மண்டிக்கிடக்கும் இம் மண்ணுலகம், தமிழரசர் மூவர்க்கும் ஒப்ப உரிமையுடையதாகும்; அரசர் அனைவர்க்கும் பொதுவான இவ் வுலகைப், 'போகம் வேண்டி, பொதுச்சொல் பொறாது,' ஒருவராகவே நின்று ஆண்ட அரசர்களும் உளர், அவ்வாறு உலகெலாம் ஒரு குடைக்கீழ் வைத்து ஆண்ட அரசர்களும் இறவாது நிலை பெற்றாரல்லர்; அவர் தம் வாழ்நாட்களும் வற்றிவிட்டன; அத்தகையாரும் மாண்டு மறைந்தே போயினர்; அவர் ஈட்டிய பெரும் பொருளும், அவர் போவுழி, அவர்க்குத் துணையாய்ப் போகவில்லை; அப் பெரும் பொருளை இழந்தே அவர் சென்றனர், ஆகவே, வாழ்வும் வளமும், செல்வமும் உயிர்க்கு நல்ல துணையாகா; இப் பிறப்பில் அவரவர் செய்யும் அறவினையே, அவ்வுயிர்க்கு உற்ற நற்றுணையாம்; உற்றாரும், உறவினரும் கூடி அழப் போம் உயிர், இவ்வுலகை விட்டு, இறவாப் பேரின்பம் நிறைந்த வீட்டுலகை அடைதற்குத் தெப்பமாய்த் துணைபுரிவது அவ் அறவினை யொன்றே, புணையாம் அவ் அறவினையை மறந்து கைவிட்டார், வீட்டுலகை அடைதல் இன்றாம்; ஆகவே, "அன்றறிவாம் என்னாது அறம் செய்க," என்ற அறவுரையினை அள்ளித்தரும் அழகிய பாட்டைப் பாடியுள்ளார் புலவர்:

"குன்றுதலை மணந்த மலைபிணித்து யாத்த மண
பொதுமை சுட்டிய மூவர் உலகமும்,
பொதுமையின்றி ஆண்டிசி னோர்க்கும்
மாண்ட அன்றே யாண்டுகள்? துணையே
வைத்ததன்றே வெறுக்கை; வித்தும்

அறவினை யன்றே விழுத்துணை; அத்துணைப்
புணை கைவிட்டோர்க்கு அரிதே; துணை அழத்
தொக்கு உயிர் வெளவுங்காலை
இக்கரை நின்று இவர்ந்து உக்கரை கொளலே.''

(புறம்: ௩௫௭)

தமிழரசர் மூவர்; அம் மூவர்க்கும் உரியது இத் தமிழகம் என்ற உண்மை புலனுமாறு, ''வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு,'' (தொல்: செய்: ௭௯) எனக் கூறும் தொல்காப்பியனார் கூற்றுப்படியே, ''பொதுமை சுட்டிய மூவர் உலகம்,'' எனப் புலவர் கூறுவது குறித்துக் கொளற் பாலதாம்.

## கூகூ. பிரான் சாத்தனார்

பெருஞ் சாத்தனார், பேரிசாத்தனார் எனச் சாத்தனார் எனும் பெயருடையார் பலராதலின், அவரின் வேறு அறிதற்கு இவர் பிரான் சாத்தனார் என அழைக்கப் பெற்றுளார். தாம் பாடிய நற்றிணைப் பாட்டில், சாத்தனார், நல்ல அறவுரை ஒன்றை அமைத்துப் பாடியுள்ளார்;

"Work while you work, Play while you Play" என்பது ஒரு ஆங்கிலப் பழமொழி; தொழில் ஆற்ற வேண்டிய காலத்தே அது ஆற்றவேண்டும்; ஆடவேண்டிய காலத்தே ஆடி மகிழ்தல் வேண்டும். இளையோர்க்கு இன்பம் தரும் காலம, அவர் ஆடி மகிழும் அக்காலமாம்; ஆடல், பாடல்களால் அவர் கொள்ளும் மகிழ்ச்சி, அவர் உடலையும, உள்ளத்தையும் வளர்ததுத் துணைபுரிகிறது என்ப, உடலும், உள்ளமும் வளரவேண்டிய இளமைக் காலத்தே, அவற்றை வளர்க்கும், ஆடல் பாடலை அவர் கொள்ளாதிருத்தல் அறிவுடைமை யன்று, அவ் அறியாமை நிகழாவண்ணம் நின்று காத்தல் பெற்றோர்தம் பெருங் கடமை. இளமையில், ஆடிப் பாடி வளராத மக்கள், வாழ்க்கையில், நல்லுடலும, பலவளமும் பெற்று விளங்கல் இயலாது; அவர் அவ்வாறு ஆடிப் பாடி மகிழா வண்ணம அடக்கி வளர்த்தல் அறிவுடைமையும் அன்று; அறமும ஆகாது. இவ் வுண்மையினை உணர்ந்த புலவர், ஆடிப்பாடி அகம மகிழவேண்டிய தன் மகளை, இற்செறித்த தாய்க்கு உணர்த்துவார்போல் உலகத்தார்க்கு உணர்த்தியுள்ளார்:

"விளையாடு ஆயமொடு ஓரையாடாது
இளையோர் இல்லிடத்து இற்செறிந் திருத்தல்
அறனும் அன்றே; ஆக்கமும் தேயும்." (நற் : கூஅ)

---

## கூஎ. புல்லங் கண்ணனார்

புல்லன் என்ற சொல், மக்கள் பெயராகவும், அவர் பெயர்க்கு முன்வரும் சிறப்புணர்த்தும் அடையாகவும் பழந்தமிழ்க் காலத்தே பயில வழங்கப்பெற்றுளது. கண்ணம்புல்லன், பூதம் புல்லன், புல்லன்கீரன் என்ற பெயர்களைக் காண்க. பொதும்பில் புல்லாளங் கண்ணியார் என்ற பெயருடைய புலவர் ஒருவர் உளர், அவர் பெயர்க்கண் காணப்பெறும் புல்லாளம் என்பதை நோக்கியவழி, புல்லன் என்பது புல்லாளன் எனத் திரிந்ததோ, புல்லாளன் என்பது புல்லன் எனத் திரிந்ததோ என்ற தெளியலாகா ஐயம் எவர்க்கும் உண்டாதல் இயல்பே. இவர் பாடிய பாட்டொன்று அகநானூறு, மணிமிடை பவளத்தின்கண் வரிசை செய்யப்பெற்றுளது.

பாலை நிலத்தில் பயின்று, அவ்வழி வருவாரை ஆறலைத்து வாழும் அந்நில மக்களின் வடிவழகை, "வளைந்து வளைந்து சுருள்கொண்ட மயிருடையார், வாரிவிடா மயிர் உடையார்," "வணர்சுரி, வடியாப்பித்தை வன்கண் ஆடவர்" என எழுதிக் காட்டுவது இயல்பாக அமைந்துளது. வண்டுகள் ஒலிக்கும் மலர்சூடிய, இருண்டு தழைத்து அடர்ந்த கூந்தல் உடையாள், அழகிய மாமைநிற மேனியுடையாள்; ஆராய்ந்து தொடுத்த அணியுடையாள் என அக்கால இளமகள் ஒருத்தியின் அழகினைப் புலவர் நம்முன் ஓவியம் செய்து உணர்த்துகின்றார் :

"சுரும்புஉண ஒலிவரும் இரும் பல் கூந்தல்,
அம் மா மேனி, ஆய் இழைக் குறுமகள்."

(அகம்: கசுக)

## ௬௮. புறத்திணை நன்னாகனார்

நாகனார் எனும் இயற்பெயருடைய நம்புலவர், புறத்திணை தழுவிய பாக்களைப் பாடும் வன்மையும், பல நல்ல பண்புகளும் கொண்டு விளங்கினமையால், புறத்திணை நன்னாகனார் என அழைக்கப் பெற்றுள்ளார் புறத்திணை நன்னாகனார், ஓய்மான் நல்லியக் கோடன், ஓய்மான் வில்லியாதன், கரும்பனூர் கிழான் ஆய தொண்டை நாட்டுத் தலைவர்களையே பாடியுள்ளமையான், அத் தொண்டை நாட்டிற் பிறந்தவராதல் வேண்டும். புலவர் ஓய்மான் நல்லியக் கோடனை இரண்டு பாக்களாலும், ஓய்மான் வில்லியாதனை ஒரு பாட்டாலும், கரும்பனூர் கிழானை இரண்டு பாக்களாலும் பாராட்டியுள்ளார்.

ஓய்மான் நல்லியக் கோடன், ஓவியர் குடியிற் பிறந்தவன், அவனுக்குரிய நாடு, ஓய்மானாடு என்ற பெயரால் வழங்கப்பெறும்; ஓவியர் மாநாடு என்பதே ஓய்மானாடு என மருவி வழங்கலாயிற்று தென்னார்க்காடு மாவட்டம் திண்டிவனத்தைச் சூழ உள்ள நாடே பழந்தமிழ்க் காலத்தில் ஓய்மாநாடு என்ற பெயர் பெற்றிருந்தது. இந்நாட்டில், மாவிலங்கை, வேலூர், எயிற்பட்டினம், கிடங்கில், ஆமூர் என்பனபோலும் பேரூர்கள் பல இருந்தன; இவற்றுள், அரசியற்றலைநகராம் சிறப்புற்றது மாவிலங்கையாம், வளத்தாற் சிறந்தது ஓய்மாநாடு; தோழியரோடு கூடி ஆடி மகிழும் அந்நாட்டு இளமகளிர், கோரைக்கிழங்கு வேண்டிப் பன்றி உழுததால் உண்டாய சேற்றினைக் கிளறுவராயின், ஆங்கு, ஆம்பற்கிழங்கொடு, யாமை ஈன்ற முட்டைகளும் அவர்க்கு அகப்படும்; அத்துணை வளஞ் செறிந்தது அந்நாடு எனப் புலவர் கூறுவர்:

“ ஓரை ஆயத்து ஒண்டொடி மகளிர்
கேழல் உழுத இருஞ்சேறு கிளைப்பின்
யாமை ஈன்ற புலவுநாறு முட்டையைத்
தேன் நாறு ஆம்பல் கிழங்கொடு பெறூஉம்.”

(புறம் : ௧௭௬)

ஓய்மா நாட்டைப்போன்றே, அதன் தலைநகராம் மாவிலங்கையும் வளமைசால் பெருநகராய்ப் போற்றப்படுகிறது; நெல்லறுக்கும உழவர், தம்முடைய கூரிய அரிவாள், மிகுதொழில் மேற்கொண்டமையான், வாய்மழுங்குமாயின், மேலும் மடிந்திராது விரைந்து அரிதல் வேண்டித் தீட்ட எண்ணுவார் அச்சேற்றிற் படிந்துகிடக்கும் ஆமையின் முதுகு ஓட்டைத தீட்டுகே கல்லாகப் பிறழக்கொண்டு, அதன்மீது, அதைத் தீட்டுவர்; இத்துணை வளம்செறிந்த அந்நகர், பகைவர் அணுகுதற்கரிய அரணும் உடைத்தாயிருந்தது; அந்நகரைச் சூழ அரிய அரண் அமைய, அவ்வரணைச்சூழ நீண்ட மதில் நிற்க, அம்மதிலைச்சூழ, ஆழ்ந்த அகழி கிடக்கும் என அதன் வளமும், வன்மையும் ஒருங்கே தோன்றப் பாடியுள்ளார்.

“நெல்லரி தொழுவர் கூர்வாள் மழுங்கின்
பின்னை மறத்தொடு அரியக் கல்செத்து
அள்ளல் யாமைக் கூன்புறத்து உரிஞ்சும்
நெல்லமல் புரவின் இலங்கை.. .. .. ..”

“குறும்படு குண்டகழ் நீண்மதில் ஊரே.” (புறம் : ௩௭௯)

நல்லியக் கோடன், கொடைநலம் ஒன்றே உடையானல்லன்; அவன் குணங்களால் நிறைந்த குன்றெனப் போற்றத்தகுவன்; அவன் குணநலமும், கொடைநலமும், இடைக்கழிநாட்டு நல்லூர் நத்தத்தனார் எனும் புலவர், அவனைப் பாராட்டிப் பாடிய சிறுபாணாற்றுப் படைக்கண் காணப்படும், “செய்ந்நன்றி அறிதலும், சிற்றினம் இன்மையும், இன்முகம் உடைமையும், இனியனாதலும், அஞ்சினர்க்கு அளித்தலும, வெஞ்சினம் இன்மையும், ஆணணி புகுதலும், அழிபடை தாங்கலும், கருதியது முடித்தலும், காமுறப்படுதலும், ஒருவழிப் படாமையும், ஓடியது உணர்தலும், அரிவையர் ஏத்த அறிவு மடம்படுதலும், அறிவு நன்கு உடைமையும், வரிசையறிதலும், வரையாது கொடுத்தலும்” என்ற தொடர்களில் தோன்றி நிற்றல் காண்க.

இத்துணை நல்லோனாகிய நல்லியக்கோடனைக் காணும் பேறுபெற்ற புலவர், தம்மை அவன்பால் கொண்டு உய்த்த

தம் ஆகூழை அகம் மகிழ்ந்து வாழ்த்தினர், அவன் ஆளும் தொண்டை நாட்டிற் பிறந்து வாழும் பேறுடையராய புலவர், அவன் அழகையும், அருமையையும் எண்ணுந் தொறும், இத்துணை அண்மையனுய இவனைக் காணப் பெருது அந்தோ! என்வாழ்நாள் பல கொன்னே கழிந்து விட்டனவே! அந்தோ என்னே என் பேதைமை! பாரியின் பறம்புமலைக் கண்ணதாய சுனைநீர், உலக மக்கள் அனைவ ராலும ஒருங்கே விரும்பப்பெறும் சிறப்புடையது என்ப; அச்சுனைநீர், தேடிப்பெற வேண்டுவதின்றித் தம்மூரகத்தே இருந்ததாகவும், அதை விரும்பிச் சென்று வேட்கைதீர உண்டு மகிழாமல் மனத்திடை அதை நினைப்பதும் செய் யாது இகழ்ந்து இருந்தாரைப் போன்றனன்றே ஆயினேன் யானும், என் அறியாமை இருந்தவாறு என்னே! என நல்லியக் கோடனைக் காணுது கழிந்த நாட்களுக்காகக் கண் ணீர் விட்டுக் கலங்கியுள்ளார் புலவர்

"நல்லியக் கோடனை
உடையை வாழி! எற்புணர்ந்த பாலே!
பாரி பறம்பின் பனிச்சுனைத் தெண்ணீர்
ஓரூர் உண்மையின் இகந்தோர் போலக்
காணுது கழிந்த வைகல் காணு
வழிநாட்டு இரங்கும் என்நெஞ்சம், அவன்
கழிமென் சாயல் காண்தொறும் நினைந்தே"

(புறம் : கஎசு)

நல்லியக் கோடனின் நல்லியல்புகளை இவ்வாறு நாவா ரப் பாராட்டிய புலவர், அவன், தம் பாராட்டைப் பெற்றுப் பெரும் பொருள் அளிக்கப்பெற்று மகிழ்ந்த பின்னர், அவன் அளித்த அந்நாள தொடங்கி, இனி எந்நாளும் பிறர்பாற்சென்று பொருள்வேண்டி இரவேன் யானும்; வருவார்க்கு வழங்க மறுக்கும் வன்கணளர்தம் வாயி லிடத்தேயன்றி, வருவார்க்கு வாரிவழங்குதலை வரையாது மேற்கொள்ளும் வள்ளியோர்தம் வாயிலிடத்தும் ஒலித்த லைச் செய்யாது என் கிணைப்பறையும் என அவன் அளித்த

பொருளால் தாம் பெற்ற பெருவாழ்வின் பெருமிதம் தோன்றப் பாராட்டுவாராயினர். இவ்வாறு நல்லியக் கோடனைப் பாராட்டும் புலவர், நல்லியக் கோடன்போலும் நல்லோர் பரிசில் தந்து பேணத்தகும் பெருமையுடையரே தாமும் என்பதை உணர்ந்தவரா, பிறர் உள்ளத்தே உள்ளுவதனை, உள்ளத்தால் உய்த்துணரும் உணர்வுத்திறன் உடையேன் யான் என்றும் கூறியுள்ளார்,

“இரவினானே ஈத்தோன் எந்தை
அன்றை ஞான்றினொடு இன்றினூங்கும்
இரப்பச் சிந்தியேன்; நிரப்படு புணையின்
உளத்தின் அளக்கும் மிளிர்ந்த தகையேன்;
நிறைக்குளப் புதவின் மகிழ்ந்தனெனாகி
ஒருநாள், இரவலர் வரையா வள்ளியோர் கடைத்தலை
ஞாங்கர் நெடுமொழி பயிற்றித்
தோன்றல் செல்லாது என்சிறுகிணைக் குரலே.”

(புறம் : ௩௭௬)

ஓய்மான் நல்லியக்கோடன் வழியில் வில்லியாதன் என்ற பெயருடையானொரு வள்ளலும் வாழ்ந்திருந்தான்; நல்லியக்கோடனைப் பாடிய புலவர் புறத்திணை நன்னாகனார், வில்லியாதனையும் பாட விரும்பியுள்ளார், பால்நினைந்தூட்டும் நற்றாய்பால் சென்று பால் உண்ண ஓடும் குழவியின் உள்ளம் எவ்வளவு விரைவுடைத்தாமோ, அவ்வளவு விரைவு, அவனைப் பார்த்துப் பாராட்டவேண்டும் என்ற தம் உளத்திற்கும் உண்டாம் எனப் புலவர் கூறுவது, அவன் பெருமையையும் அவனைப் பாராட்ட விரும்பும் அவர் வேட்கையினையும் விளக்கிநிற்றல் காண்க. அவன் புகழ்கேட்ட புலவர், உடனே, வானுற உயர்ந்து விளங்கித் தோன்றும் மலைகள் பலவற்றைக் கடந்து அவன்பால் வந்ததாகக் கூறுகின்றனர். பிறர் மனைசென்று பாட எண்ணேன் எனக் கூறும் புலவரை விரைந்து வரச்செய்யும் அவன் வண்மையின் சிறப்பினை என்னென்பது!

"கேட்டதற் கொண்டும் வேட்கை தண்டாது
விண்தோய் தலைய குன்றம் பின்பட
நசைதர வந்தனென் யானே வசையில்
தாயில் தூஉம் குழவி போல." (புறம் : ௩௭௧)

அவனைக் கண்டு பழகிய புலவர், தம பாட்டைப் பெற லாம் பீடும பெருமையும் உடையான் அவன் ஒருவனே என்பதையும், அததகையான் அவையிடை அமர்நது அவ னளிக்கும் சிறப்பினைப் பெறலாம சீருடையார் தாம் ஒரு வரே என்பதையும் உணர்ந்தார், உணாந்த அவ்வுண்மை யினை உளத்திடையே மறைத்து வைத்திடாது, உரை யிடையிட்டு உணர்த்தியும் உளளாா

"யானே பெறுக அவன்தாள் நிழல் வாழக்கை .
அவனே பெறுக என் நாவிசை நுவறல்." (புறம் : ௩௭௯)

தொண்டை நாட்டில், வேங்கட மலையைச் சூழக் கொண்ட திருவேங்கடக் கோட்டத்தில் கரும்பனூர் என் றோர் ஊர் உளது; அது, இககாலத்தே கருமபூர் என வழங்குகிறது அக் கரும்பனூரில் வாழ்திருந்தாரொரு வள்ளல்; அவன் கரும்பனூர்கிழான் என அக்காலத்தவரால் அழைக்கப பெற்றான், அக் கரும்பனூர் நன்செய், புன் செய்களாலாய நல்ல வளங்களைப் பெற்றிருநதது; மென் னிலம் எனப்படும் அந்நாட்டு மருத நிலங்களில், இனத் தோடுகூடி இரைதேடி உண்ணும நாரைகள், வஞ்சிமரக் கிளைகளில் உறங்கி, முற்றிய கரும்பின் வெண்ணிறப் பூவைக் கொழுதி மகிழும; வன்னிலம் எனப்படும் புன் செய்களில், வரகின் அரிகாலின்கண் வாழும் எலியை அலைததுப் பிடிக்க முயலும் குறும்பூழ்ப் பறவையின் ஆர வாரங்கேட்ட குறுமுயல் அஞ்சி அவ்விடம்விட்டு ஓடும்; இருப்பைப்பூ உதிர்ந்து மணக்கும் அவ்வூரிடத்தே, விழா வற்ற காலத்தும், உழவர் உண்கலம், கெடிற்று மீன்கலந்த உணவாலும், உளம விரும்பும் கள்ளாலும் நிறைந்து தோன்றும் எனக் கரும்பனூரின் கவின்மிகு வளத்தினைப் பாடிக் காட்டுவர் புலவர் புறத்திணை நன்னாகனார் :

"மென்பாலான், உடன் அணைஇ
வஞ்சிக் கோட்டு உறங்கும் நாரை
அறைக் கரும்பின் பூவருந்தும் ;
வன்பாலான், கருங்கால் வரகின்
அரிகால் கருப்பை அலைக்கும் பூழின்
அங்கட் குறுமுயல் வெருவ, அயல
கருங்கோட்டு இருப்பைப் பூவுறைக் குந்து,
விழவின்றாயினும், உழவா மண்டை
இருங்கெடிற்று மிசையொடு பூங்கள் வைகுந்து."

(புறம் · ௩௮௪)

கரும்பனூர் கிழானைக்கண்டு பாராட்டி அவனால் சிறப்புச் செய்யப்பெற்ற புலவர் நன்னாகனார், "யாம் ஆங்கிருந்தக்கால், இறைச்சியும், சோறும் கலந்த உணவை மிகவுண்டு தெவிட்டி வெறுத்த நிலையில், பால் கலந்துசெய்தனவும், வெல்லப்பாகு கலந்து செய்தனவுமாய பண்ணியங்களை இது மிக இனிது என்றுகூறி, மெல்ல உண்டு மகிழ்ந்து வாழ்வேம்" என்றும், "கரும்பனூர்கிழான், நிணம் கலந்த நல்ல சோற்றுணவில், நீரினும் மிகுதியாக நெய்யைப் பெய்து எமக்கு அளித்துப் புரந்து, மண்ணவரெல்லாம் கண்டு மனம் நாணும்படியாகப் பெரும்புகழ் பெறுவன் ; ஆங்கு வாழ்ந்த அந்நாட்களில், யாம் உணவுண்ட உண்ணும் கலங்களில், உண்ணமாட்டாது ஒழித்துவிட்ட மிக்க உணவை, அவ்வுண்கலத்திடையே வைத்து மடித்து எறிந்தும், தின்னுங்கால், பற்களிடையே சிக்கிக் கொண்ட ஊனைத் தோண்டி எடுத்தும் மகிழுமாறு நிகழ்ந்த நாட்களை அறிவோமேயன்றி, சென்ற நாட்களையோ, இனிவரும் நாட்களையோ, எண்ணி அறிந்தோமில்லை" என்றும், இவ்வாறு அவன் ஊட்ட உண்ணும் மகிழ்ச்சியால், தம் வாழ்நாள்பற்றிய நினைவையும் மறந்து கிடக்கும் புலவர், "கரும்பனூர்க் கிழானின் பேரன்பைப் பெற்ற எமக்குப் பொன்தான் என்ன ஒரு பொருளா? நெல் முதலாம்பொருள்தான் ஒரு பொருளா? நறுமணம் தரும் கள்தான் ஒரு பொருளா? இவற்றையெல்லாம்

யாம் மதிக்கவும் செய்யேம்" என்றும், "கரும்பனூரன் காதலைப்பெற்ற யாங்கள், இனி வறுமை கண்டு வாடவும் செய்யேம்; ஆகவே, உலகில் வறுமையை வாழச்செய்ய வரும் வெள்ளி, எங்கு நிற்கினும் எமக்கு என்?" என்றும் செம்மாந்து கூறிச் சிறப்பிப்பாராயினர்:

"ஊனும் ஊணும் முனையின் இனிதெனப்
பாலிற் பெய்தவும் பாகிற் கொண்டவும்
அளவுபு கலந்து மெல்லிது பருகி,
விருந்துறுத்து ஆற்றி இருந்தனெம்."

(புறம்: ௩௮௧)

"நிணம் பெருத்த கொழுஞ் சோற்றிடை
மண் நாணப் புகழ் வேட்டு
நீர்நாண நெய்வழங்கிப்
புரந்தோன் எந்தை."

"உண்ட நன்கலம் பெய்து நுடக்கவும்,
தின்ற நண்பல் ஊஉன் தோண்டவும்
வந்த வைகல் அல்லது
சென்ற எல்லைச் செலவறியேனே."

"நெல் என்னும்? பொன் என்னும்?
கனற்றக் கொண்ட நறவு என்னும்?"

"புரந்தோன் எந்தை, யாம் எவன் தொலைவதை?
அன்னோனை உடையேம் என்ப; இனி வறட்கு
யாண்டும் நிற்க வெள்ளி!"

(புறம்: ௩௮௪)

வருவார் எவர்க்கும் வரையாது வழங்கும் வள்ளியோனுடைய கரும்பனூர்கிழானை, நீர்நிலையினைக் கடக்கவருவார் பெரியவராயினும், சிறியவராயினும், அவர் அனைவரையும் இருகரையினும் மாறிமாறிக் கொண்டுபோய்விடும் பொருள் கருதாது, அறமே கருதி உழைக்கும் தெப்பத்தோடு உவமித்துச் சிறப்பிக்கும் புலவர், குலைகுலையாகப் பூத்துக் காய்த்துக் கனிந்து கிடப்பினும் பிறராற் கொள்ளப்படாவாறு

மூட்கள் நிறைந்த கொடிகள் பின்னிக்கிடக்கும் புதரிடை நின்று வற்றும் மரம் நிற்கும் பாழிடத்தே பெய்த மழை போன்றது, ஈயாதார் இடத்தே மண்டிக்கிடக்கும பெருஞ் செல்வம எனக் கொடாமன்னரைப் பழித்துப் பாடியுள்ளார் :

" உறுவரும் சிறுவரும் ஊழ்மா றுய்க்கும்
அறத்துறை அம்பியின் மான, மறப்பின்று
இருங்கோள் ஈராப் பூட்கைக்
கரும்பனூரன் காதன் மகனே "

" துணரியது கொளாஅவாகிப் பழம் ஊழ்த்துப்
பயம் பகர்வறியா மயங்கரில் முதுபாழ்ப்
பெயல் பெய்தன்ன செல்வத் தாங்கண்
ஈயா மன்னர் " (புறம் : ௩அக)

---

## சாசுல. பூங்கண்ணன்

புலவர் பூங்கண்ணனார், காண்பார்க்கினிய கண் பெற்றுள்ளமையான், இப்பெயர் பெற்றார் போலும். இவர் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் வந்துள்ளது.

பொருள் தேடிப்போகும் ஆடவர், அவ்வினையைக் குறைவற முடித்தன்றி மீளார்; அவ்வாறு மீளல் அறனும் அன்று; அவர் ஆக்கமும் தேயும், வினைமேற் சென்ற அவர், அவ்வினை முடியுங்காறும, தம் மனைவி மக்களை நினைத்தலும கூடாது; அவர் நினைப்பு உண்டாயின், அவரால் மேற்கொண்ட வினையை விரைவில் முடிப்பது அரிதாகிவிடும், ஆகவே, அந்நிலையில் அவர்க்கு அவர்தம் மனைவி மக்களைப்பற்றி அறிவிப்பதும் கூடாது; அறிவிக்கப் பெறின், இருந்து வினைமுடிப்பதால், விழுநிதியே வருவதாயினும, தம மனைவி மக்கள் வருநதும் அநநிலையில், அதைப் பெற எண்ணவும் செய்யார்; தம் மனைவி மக்கள்பால் தலையாய அன்புடையராய தமிழகத்து ஆடவர்தம் மன இயல்பினை உணர்ந்த புலவர் தொல்காப்பியனார், "கிழவி நிலையே வினையிடத்து உரையார" என விதி வகுத்துள்ளார்.

பொருள் தேடிப்போன தலைவன் விரைவில் வந்திலன்; அவன் வாராமையால், பயனற்றுக கிடக்கும் பாயலைக் காணுந்தொறும் கண்ணீர்விட்டுக் கலங்குகிறாள் தலைவி; தலைவியின் துயர்நிலை அறிந்த தோழி, அவள்பால் சென்று, "அன்புடையாய்! தலைவர விரைவில் வந்தெய்துமாறு, அவர்க்கு நின் நிலையினை அறிவிக்கும் தூதுவரை விடுத்தலும் கூடும்; ஆனல், அவர் நின்னிலையினை அறியின், தாம் மேற்கொண்ட வினையினை முடிக்காதே மீண்டுவிடுவர்; அதனல், நம் இல்லறம் இனிது நடத்தற்கு வேண்டும் விழுநிதியினை நாம் இழப்போம்; அந்நிலை உறுதல் அறமாகாது; ஆகவே, அவர்க்குத் தூதனுப்பும் செயலை யான் புரிந்திலேன்; அதனல் அவர் நின்னிலையினை அறியாராயினர்; ஆகவே, அவர் இன்னமும் வந்திலர்; இதை எண்

ணிச் சிறிது ஆற்றியிருத்தலே நினக்கு அறமாம்,'' என்று கூறினாள். தோழியின் கூற்றமைய வந்துளது புலவர் பாடிய அப் பாட்டு :

"கேளார் ஆகுவர் தோழி! கேட்பின்
விழுமிது கழிவதாயினும், நெகிழ்நூல்
பூச்சேர் அணையில் பெருங்கவின் தொலைந்தநின்
நாள்துயர் கெட, பின் நீடலர் மாதோ."

(குறு : ௨௫௩)

இந்தப் பாட்டில், காட்டுவழியே செல்லும் பழந்தமிழ் மக்கள், இராக்காலத்தே தங்கட்குக் காட்டகத்துக் கொடு விலங்குகளால் ஊறு எதுவும் நேராமை கருதி, புலி தங்கிப்போய கற்குகைகளுள் தங்கிச் செல்வதும் உண்டு என்ற செய்தியையும் அறிவித்துள்ளார் :

"புலிபுகா வுறுத்த புலவுநாறு கல்லளை
ஆறுசெல் மாக்கள் சேக்கும்." (குறுந் : ௨௫௨)

## ௭0. பூதங்கண்ணனார்

கண்ணனார் எனும் இயற்பெயருடைய நம் புலவர் பூதன் எனும் பெயருடைப் பெரியார் ஒருவரைப் பெற்ற தந்தையாக்கொண்ட பெருமையுடையவராதலின், பூதங் கண்ணனார் என அழைக்கப்பெற்றுள்ளார். இவர் பெயரால் இப்போது கிடைத்துளது ஒரு பாட்டே; அது நற்றிணைக் கண் இடம் பெற்றுளது.

தம்பால் விருப்பின்றி ஒழுகுவார் பின்சென்று பணிந்து வாழ்தலினும் வாழாமையே நன்றாம் எனும் இறப்ப உயர்ந்த உள்ளமுடையானொரு தலைவன், தான் விரும்பும் ஒரு தலைவி, தன்பால் விருப்பமின்றித் தோழியர் சூழ்ந்துவர ஆடலை விரும்பி அகல்வதைக் கண்டான். ஆடல் உவந்து ஆயம் சூழப் பந்தொடு செலலும் அவள், தன்பால் விருப்பம் இலளாயினும், தான் உற்ற நோயைப் போக்கவல்ல மருந்தாவாள அவளே; அவளையன்றி வேறு இல்லை என்பதை அறிந்த அவன், தன் தகுதியினை நினையானாய், அவள் அருளினும், அருளாளாயினும், அவள்பின் சென்று நிற்றலையே பெரிதும் விரும்புவானாயினன், தன் நெஞ்சை நோக்கி, "நெஞ்சே! ஒட்டார் பினசெனறு ஒருவன் வாழ்தலின், அந்நிலையே கெட்டான் எனபபடுதல் நன்று எனும் உயர்பேரெண்ணம் உடையை நீ என்பதை அறிவேன, ஆயினும், இவளையின்றி வாழ்தல் என்னால் இயலாது; பின்சென்று பணிந்து நிற்றற்காகாத் தாழ்வுடையள் அல்லள் இவளும்; நெடுந்தேர் வழங்கும நீள் பெருஞ் செல்வம் உடையன் இவள் தந்தை; அடுத்து முயன்றால் ஆகாதது இல்லை என்ப; பலகாலும் பின்செல் லின், இவள் அருள் செய்தலும் கூடும்; ஆகவே நெஞ்சே! என்பொருட்டு இவள் பின்சென்று இரந்து நிற்றலை முனி யாது மேற்கொள்ள வேண்டுகின்றேன்," என்று கூறினன்.

தலைவனின் இக்கூற்று அமையப் பாடிய தம் பாட்டில் புலவர் பூதங்கண்ணனார், பின்சென்று இரவாப பேருள்ளம் உடையானே பெரியோனவன்; அத்தகையான், தான்

காதலியின் பேரன்பைப் பெறவேண்டிப் பலகாலும் பணிந்து நிற்றலைப் பெரிதும் உவப்பனுயின், அச்செயல், அவனுக்கு மேலும் பெருமையளிக்கும் பெருஞ்செயலாம் என்ற அரிய உண்மைகளை உரைதது உலகத்தார்க்கு உயர் வழி காட்டியுள்ளார்.

உயரிய ஒழுக்கநெறி யுணர்த்திய அப்பாட்டிலேயே, மழைபெய்யத் தழைத்து மலர்ந்து மணங்கமழும் சந்தனச் சோலைகளையும, நெடிய தேர் வழங்குவனவும், நிலவு போலும் வெண்மணல் பரந்தனவுமாய முன்னிடங்களை யுடைய மனைகளையும் கொண்ட தமிழகத்தின் தனிச்சிறப் பினையும் காட்டியுள்ளார்.

"கொண்டல் மாமழை குடக்கேர்பு குழைத்த
சிறுகோல் இணர பெருந்தண சாநதம்
வகைசேர ஐம்பால் தகைபெற வாரிப்
புலர்விடத்து உதிாதத துகள்படு கூழைப்
பெருஙகண் ஆயம் உவப்பத், தந்தை
நெடுந்தேர் வழஙகும் நிலவுமணல் முற்றத்துப்
பந்தொடு பெயரும் பரிவிலாட்டி
அருளினும், அருளாளாயினும், பெரிதழிந்து
பின்னிலை முனியல்; மாநெஞ்சே! என்னதூஉம்
அருந்துயர் அவலம் தீாக்கும்
மருந்து பிறிதுஇல்லை, யான் உற்ற நோய்க்கே."

(நற் · கசO)

## எக. பூதனார்

பூதனார் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது; தாய் வீட்டிலேயே இருப்பின், தான் விரும்பும் காதலனை மணந்து கற்புடையளாதல் இயலாதாம் என உணர்ந்த ஒரு பெண், தமர் அறியாவண்ணம், தன் காதல னோடு அவனூர் சென்றுவிட்டாள்; அதை அறிந்தாள் அவள் தாய்; அவளோ அவள்மாட்டுப் பேரன்புடையவள்; பேணி வளர்த்தவள்; தன் மகளை அன்பால் அணைத்துக் கொள்ளுங்கால், அன்பின் பெருக்கால் இறுக அணைத்துக் கொள்ளின் அவள் மார்பகம் வருந்துமோ என எண்ணும் அத்துணைப் பேரன்புடையாள், அவள் மகளோ, அணைத்த கையைத் தாய் சிறிது நெகிழ்த்தினும், தாய்க்குத் தன்பால் அன்பு குறைந்துவிட்டதுபோலும் என எண்ணி வருந்தும் அத்துணை அறியாமையுடையாள, அத்தகையாள் ஏதிலான் ஒருவனுடன், கொடிய கோடையில் நிழலற்றதும், புலி வழங்கப்பெறுவதும் ஆய நீண்ட காட்டுவழியே சென்று விட்டமையினை எண்ணி எண்ணி வருந்தினாள். அவ்வாறு வருந்துவாள், மகளை மணக்கும் அத்தலைமகன், யான் வருந்த அவளைக் கொண்டுசென்ற கொடுமையுடையனே னும், என் மகள்பால் பேரன்புடையனாதலை அறிந்து ஓரளவு ஆறுதல் கொண்டேன் என்பதை, அவர்கள் செல் லும் காட்டுவழியில் வாழும் ஆண்புலி, வழிப்போவாரைக் கொல்லும் கொடுமை உடையதே ஆயினும், அது ஈன்று பசித்திருக்கும் தன் பெண்புலிக்கு இரை தேடித்தந்து பேணும் பேரன்புடையதாம் என்று கூறுவதால் உணர்த் தினாள். தாயின் இத் தனியன்பு தோன்றப் பாடிப் பாராட்டியுள்ளார் புலவர்: (நற்: உக).

## எஉ. பூதன் இளநாகனார்

இவர் மதுரையில் வாழ்ந்தவர்; பூதன் என்பாரின் மகனும் மாண்புடையவர்; இளநாகனார் எனும் இயற்பெயர் உடையவர்; மதுரை மருதன் இளநாகனார் என்று பெயருடைய புலவர் ஒருவர் இருப்பதால், இவர் பூதன் இளநாகனார் எனப் பெயர் பெற்றார். இருதிறப் படைகளும் தன் ஆண்மையினைப் போற்றுமாறு ஒரு வீரன் பெற்ற வெற்றிச் சிறப்பை விரித்துரைக்கும் தானைநிலை என்ற துறை தழுவி வந்த பாட்டொன்று, இவர் பாடியதாகப் புறநானூற்றில் இடம் பெற்றுளது.

பகைவர் படை முழுதும் பாழானமைக்கு அவ்வீரன் ஒருவனே காரணமானான், இதை விளக்க, ஆயர்மகள் ஒருத்தி தெளித்த பிரை, குடத்தில் உள்ள பால் முழுதும் திரிந்து தயிராதற்குக் காரணமாதலைப்போல், அப்பெரும் படை அழிவிற்கு அவன் ஒருவனே காரணமானான் என்று கூறிய உவமை, அவர் புலமையினை உணர்த்துவதாம்; இவ்வாறு, இவன் பெற்ற வெற்றிக்கு இவன் பிறந்த குடியே காரணமாம என்பதை உணர்தத, அவனைப் பெற்ற பெருமைசால் அம்மையார், செமமுதுகுடி வந்த சீர்சால் புகழுடையாா என்று சிறப்பித்தார்; அவள் தன் மகனைத் தன் குடிக்கேற்ற மாண்புடையனாக்குதலில் கருத்துடையளேயன்றித் தன்னை ஒப்பனை செய்துகொள்ளும கருத்துடையளல்லள் என்பார், அவள் தன் தலைக்கு நறும் மணம் நாறும் பொருள்பூசி அறியாமையால் நரைதத தலையினளாயினாள் என்றும் கூறியுள்ளார்:

> "நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்,
> இரங்கா ழன்ன திரங்குகண் வறுமுலைச
> செம்முது பெண்டின் காதலஞ் சிறாஅன்,
> மடப்பால் ஆய்மகள் வள்ளுகிர்த் தெறித்த
> குடப்பால் சில்லுறை போலப்
> படைக்கு நோயெல்லாம் தானா யினனே."

(புறம்: உஎசு)

## எங. பூதன் தேவனார்

தெய்வங்களைக் குறிக்க வழங்கும் பெயர்களாகிய பூதன், தேவன் என்பனவற்றை முறையே தந்தை பெயராகவும் தம் பெயராகவும் கொண்டு வாழ்ந்த புலவர் பூதன் தேவனார் பாடிய பாக்கள் இரண்டு; நற்றிணையில் ஒன்றும், குறுந்தொகையில் ஒன்றுமாக இடம் பெற்றுள்ளன அவ்விரண்டும்.

தன்பால் பேரன்புடையனாய்த் தான் விரும்பும் தழை உடையும், தண்ணறு மாலையும் தந்தானையே மணந்து, மாண்புநிறை கற்புநெறியினைக் கைப்பிடிக்க விரும்பினாள் ஒரு பெண்; அது நிறைவேறற் பொருட்டுத் தைந்நீராடி நோன்பேற்கவும் துணிந்தாள், உயிரிற் சிறந்ததாம் கற்பினைக் காத்தல் கருதி, நோன்பேற்கும் அந்நிலையினும் தாயிற் சிறந்ததாம் நாணை நழுவவிட்டாளல்லள்; நீராடச் செல்வாள் நாணும், நல் தோழியரும் தன்னைச் சூழ்ந்து வரவே சென்றாள், அத்தகையாளொரு தமிழ்மகளைப் புலவர் பூதன் தேவனார் தம் பாட்டிடை வைத்துப் போற்றியுள்ளார் :

> "தழையும் தாரும் தந்தனன் இவன்என
> இழையணி ஆயமொடு தகுநாண் தடைஇத்
> தைஇத் திங்கள் தண்கயம் படியும்
> பெருந்தோட் குறுமகள்." (நற் : அ0)

கார்ப்பருவத் தொடக்கத்தே வருவன்; கவலற்க என, உறுதி உரைத்துப் பொருள்தேடிப் போயிருந்தான் ஒரு தலைவன்; சென்ற அவன் அப்பருவம் வந்துற்ற பின்னரும் வந்திலன்; சென்ற தலைவனின் வருகையினை ஒவ்வொரு நாளும் எதிர்நோக்கியிருந்தாள்; "இன்று காலை வந்திலர்; ஆயினும், மாலை நில்லாது வருவர்" என்றும், "இன்று மாலை வந்திலர்; நாளைக் காலை நில்லாது வருவர்" என்றும் அவன் வரும் வழிநோக்கி இருந்து இருந்து ஏமாந்தாள்; இதனால், அவள் துயர் அளவின்றிப் பெருகலாயிற்று; இந்நிலையில்,

அவள் வீட்டை வாழிடமாக்கொண்ட புறாக்களுள், ஆண் புறா, தன் அன்பிற்குரிய பெண்புறா தன் அருகிலேயே இருப்பவும் அடங்காது, மேலும் நெருங்க அணைந்து அமருமாறு அதைப் பலகாலும் கூவி அழைத்து இமைப்பொழுதில் பெற்றுப்பேரின்பம பெறுங் காட்சி, அவள் துயர் மேலும் பெருகத் துணைபுரியலாயிற்று. இதனால், பெருநதுயருறும் அந்நிலையிலும, அவள் அவன்மாட்டுச் சினங்கொண்டாளல்லள்; மாறாக, "அவர் சென்றவழி பெடையொடு பிரியாது உறைந்து பேரின்பம் உறும துணைப்பறவைகளைப் பெறாது, உணவுதேடித திரியும் தனிப்பறவை ஒன்றையே பெற்றுப பாழுற்றிருப்பதேயாம; அவ்வழி, ஈங்குள்ளன போலும் துணைப்பறவைகளை உடைததாயின், அக்காட்சியினைக காணும் அவர் நில்லாது விரைந்திவண் வந்திருப்பர்" என்றே வருந்தினாள்; என்னே அவள்தன் பண்பாடு!

இவ்வாறு கணவன்மாட்டுத் தவறு காணாதாள்போல் கூறினாளாயினும், துணையொடு வதியும புறாவைப் பாராட்டியும, தின்பொருள் தேடித்திரியும் தனிபபறவையினைப் பழித்தும் கூறும் முகத்தான், மனைவியோடிருந்து மகிழ்ந்துறைவோரே மாண்புடையார், அவள் வருநத தனிததுச் சென்று பொருள்தேடித்திரிவார் போற்றுதற்குரியராகார் என்ற தன் உட்கருததை உரையாது உரைத்துக் கருத்திலாக் கணவனைக் கண்டித்தும் உள்ளார்; என்னே அவர்தம் அறிவு! இததகையாளொருத்தியைப் படைத்துப் பண்புரைக்கும் புலவர்தம் புலமைதான் என்னே!

"வைகல் வைகல் வைகவும் வாரார்;
எல்லா எல்லை எல்லையும் தோன்றார்;
யாண்டுளர் கொல்லோ? தோழி! ஈண்டு இவர்
சொல்லிய பருவமோ இதுவே; பல்லூழ்
புன்புறப் பெடையொடு பயிரி இன்புற
இமைக்கண் ஏதா கின்றே! ஞெமைத்தலை
ஊன் நசைஇ ஒருபருந்து இருக்கும்
வானுயர் பிறங்கல் மலையிறந் தோரே." (குறுந்: உ அ௫)

கன்று ஈன்ற எருமை நிறையப் பால்தர வேண்டின், அது நிறையப் புல் மேய்தல் வேண்டும்; ஆகவே, அவ்வெருமை, அதை உண்ணுமாறு ஊரில் உள்ள சிறுவர்கள், எருமைக் கன்றுகளைத் தொழுவத்தே விடுத்துவிட்டு, விடியற்காலையிலேயே புல்மேய ஓட்டிச் செல்வர். ஆனிரை ஓம்பும் இத்தொழிற் சிறப்பைப் புலவர் உணர்ந்து உணர்த்தியுள்ளார் ஒரு பாட்டில் :

"மன்ற எருமை மலர்தலைக் காரா
இன்தீம் பால்பயம் கொண்மார் கன்றுவிட்டு
ஊர்க்குறு மாக்கள் மேற்கொண்டு கழியும்
பெரும்புலர் விடியல்." (நற் · 80)



## ஏசு. பூவண்டல் நாகன் வேட்டனார்

பூவண்டல் என்பது ஓர் ஊர்; அவ்வூரினராய இவர் மதுரை சென்று வாழ்ந்தமையால், மதுரைப் பூவண்டல் நாகன் வேட்டனார் என அழைக்கப்பெற்றார்.

வரையாது வந்தொழுகும் தலைவன்பால், "தலைவ! நின்னோடு கொண்ட தொடர்பால் உண்டான தலைவியின் உடல்வேறுபாட்டினைத் தாய் அறிய நேரின், அதன் விளைவு என்னுமோ? அறியேன்; அஞ்சுவல்; ஆகவே விரைவில் வரைந்துகொள்ள வருவாயாக" எனக் கூறும் தோழியின் கூற்றமைந்த செய்யுளில், "தலைவ! எங்கள் தமர், தம் மகளை—நின்னால் விரும்பப்பெற்ற இவளைத் தம்பால் வந்து வேண்டுவார்க்கு மணஞ்செய்துதரும் எண்ணமுடையராவர்; இதை அறியாத நீ, அவரைக் கேட்டு மணந்து இவள் நலத்தினை நுகரும நேரிய வழியினை விடுத்து, இவ்வாறு களவில் இவளைக் காணவருகின்றனையே நின் அறியாமையினை என்னென்பது!" எனப் பழிக்க விரும்பி, அதை வெளிப்படக் கூறாது, "தினை முற்றக் கண்டு கொய்துகொண்டு செல்வுழிக் களம்பாடி வருவார்க்கு வழங்குவதைப் போன்றே ஆங்குக் கூடியிருக்கும் பறவை இனங்கட்கும் தினை அளிததுச் செல்வர் எங்கள் தமர்; அதை அறியாது, இத்தினையைத் திருடித் தின்ன வரும் கிளிகளை உடைய நாடு நின்நாடு" என்று அவன் நாட்டுக் கிளிகளின் இயல்பு கூறுவாள்போல் கூறினாள் தோழி" எனப்பாடிய புலவன், புலமை போற்றற்குரியதா மன்றோ?

"பைந்தினை
பவளச் செவ்வாய்ப் பைங்கிளி கவரும்
உயர்வரை நாட! நீ நயந்தோள் கேண்மை
அன்னை அறிகுவளாயின், பனிகலந்து
என்னுகுவ கொல்?" (நற்: ௩௧௭)

## ௭௫. பெருங்கண்ணனார்

புலவர் பெருங்கண்ணனார் பாடிய பாக்கள் மூன்று; அவற்றுள் ஒன்று நற்றிணையிலும், ஏனைய குறுந்தொகையிலும் இடம் பெற்றுள்ளன.

பொருள்தேடிப் பிரியவேண்டிய நிலை வந்துற்றது ஒரு தலைவனுக்கு; அந்நிலையில், அவன் மென்மையும, மணமும் நிறைநது பிடரிவரை தாழும தழைத்த கூந்தலும், பனை போல் பருத்த தோளும், மகளிர்க்கு மாண்புதரும் மடப்பமும் உடைய தன் மனைவிநல்லாளை ஒரு பக்கமும், நீரற்றதும், நீண்டு செல்வதும், நிழலற்றதுமாய தான் செல்ல வேண்டிய வழிக்காட்சியை மற்றொரு பக்கமும் நிறுத்திக் கண்டான்; இத்துணை இனிமையுடையாளைப் பிரிந்து இக் கொடிய காட்டுவழியிற் சென்று கலங்கவேண்டுமாயின், செல்வார், இவளினும் சிறந்த ஒரு பொருளைப் பெறுபவராதல் வேண்டும்; ஆனால், இவளினும் சிறநத ஒருபொருள் உலகில் இல்லை என்பதை உணாவான் அவன், ஆகவே, பொருள்விரும்புமதன் உள்ளத்தை விளித்து, "உள்ளமே! இவளை ஈண்டுப் பிரிந்து ஆண்டுப் போநது, அத்துயர் தாங்கும் ஆற்றல் இல்லேன யான், ஆகவே, யான் வந்திலன்; அவ்வாற்றல் வாய்க்கப்பெற்ற நீ அவ்வழிச் சென்று, சிறந்தது பெற்றுச் சிறப்புறுவாயாக!" என்று கூறி வாழ்ததுவதோடு, நீ செல்லும் அவ்வழி, வருந்திய தன் பிடிக்கு உணவு தேடித்தந்து இன்புற்று வாழும் களிறுகளை உடையது என்பதை உணர்ந்தால், உடனுறை வாழ்க்கையினை வெறுக்கும் உறுதி உண்டாதல் எவர்க்கும் அரிதாம் என்பதை உணர்வை என்று கூறி, பிரிந்துசேறல் பண்பன்று என அறிவுரையும் கூறினன். இவ்வாறு பொருளினும் பண்புநிறை மனைவியே மாண்புடையாள் எனக் கருதும் தலைவன் கூற்றினைப் பாட்டிடைவைத்துப் பாடியுள்ளார் புலவர்:

"தண்ணிய கமழும் தாழிருங் கூந்தல்
தடமென் பணைத்தோள் மடநல்லோள் வயின்
பிரியச சூழ்ந்தனை யாயின், அரியதொன்று
எய்தினை வாழிய! நெஞ்சே! செவவரை
அருவியான்ற நீரில் நீளிடைக்
கயந்தலை மடப்பிடி உயஙகுபசி களைஇயர்
பெருங்களிறு தொலைத்த முடத்தாள் ஓமை
அருஞ்சுரம் செல்வோர்க்கு அல்கு நிழலாகும்
குன்ற வைப்பின் கானம்
சென்றுசேண் அகறல் வல்லிய நீயே." (நற்: கஙௌ)

தாம் வாழிடம் திரும்பும் பறவைகளும் ஒலித்தன; மலர்களும் குவிந்தன. கடற்கரைச் சோலையும், வழங்குவாரற்றுத் தனிமையுற்றது; தலைவனைப் பிரிந்து தனித்துத் துயருறும் நம்மைப்போன்றே, வானமும், ஞாயிறுமறைய அழகிழந்துவிட்டது எனத் தலைமகளொருத்தி வாயில் வைத்து நெய்தல் நிலத்து மாலைக் காட்சியை மனம் மகிழ்ந்து பாடியுள்ளார் புலவர்:

"புள்ளும் புலம்பின; பூவும் கூம்பின;
கானலும் புலம்புநனி உடைத்தே, வானமும்
நம்மே போலும் மம்மர்த் தாகி
எல்லை கழியப் புல்லென் றன்றே." (குறுந்: ௩௰)

# எகூ. பெருஞ்சாத்தனார்

சாத்தன், பெருஞ்சாத்தன் என்ற பெயருடையார் பலராவர்; வீரனும வள்ளலுமாய் விளங்கிய ஒல்லையூர் கிழான் மகன் பெருஞ்சாத்தன் என்பான் ஒருவனும் உளன். அப்பெயர் பூண்ட இப்புலவர் பாடிய பாட்டொன்று குறுந்தொகைக்கண் உளது.

கணவர்த் தொழுதெழும் கற்புடை மகளிர் பிறதெய்வங்களைத் தொழ எண்ணார், காதல நிறைந்த கணவரைப் பெறமாட்டாமையால கன்னிப பெண்கள் உறும் துயரால் உடல் மெலிந்தாராயின், அதைப் பேயாற்கொள்ளப்பட்டமையால் உண்டாய விளைவு எனக் கோடல் பெரும் பேதைமை, இநத உண்மைகளை உணர்ந்தவர் நம் புலவர். தான் விருமபிய தலைவன் விரைந்துவநது வரைந்துகொள்ளாமையால் வருநதிய தன் உடல வேறுபாட்டினைக் கண்ட தன் தாய், அது பேயாற் கொள்ளபபட்டமையால் உண்டாயது எனப் பிறழக்கொண்டு, அது தீருமாறு ஆட்டை அறுத்தும், தினைப்பலி கொடுதததும், பல்வேறு இசை ஒலிககவும், ஆற்றிடைக் குறைகளில் வெறியாட்டெடுத்தாளாக, அவள வேண்ட, ஆணடு வெளிப்படுதலல்லது, தான் உற்ற நோயைப் போக்க இயலாத முருகன்போலும பிற தெய்வங்களையும் வழிபடவேண்டி வந்ததே என வருந்தினள் ஒரு தலைவி எனப் பாடிய அவர் பாட்டின்வழி அவ்வுண்மைகள் புலனாதல் காண்க.

"மறிக்குரல் அறுத்துத், தினைப்பிரப்பு இரீஇச
செல்லாற்றுக் கவலைப் பல்லியம் கறஙகத
தோற்றம் அல்லது நோய்க்கு மருந்தாகா
வேற்றுப் பெருந்தெய்வம் பலவுடன் வாழ்த்திப்
பேஎய்க் கொளீஇயள் இவள்எனப் படுதல்
நோதக்கன்றே." (குறுந் : உசுங)

# எஎ. பெருந்தேவனர்

பெருந்தேவனர் என்றபெயருடைய புலவர் பலராவர்; கடுகு பெருந்தேவன், பாரதம் பாடிய பெருந்தேவன் என்பாரைக் காண்க. புலவர் பெருந்தேவனர் பாடிய நற்றிணைப் பாட்டு நவில்தொறும் நயஞ்செறிந்து விளங்குகிறது.

களவொழுக்கமே விரும்பியொழுகும் தலைவன், ஒரு நாள் இரவு தலைவியின் மனையருகே வந்திருந்தானுக, அஃதறிந்த அத்தலைவி, "எம்முடைய ஊர்முகத்தேயுள்ள அழகிய நீரத்துறை அருகே வளர்ந்து வானளாவ நீண்டிருக்கும், கடவுள் உறையும் முதிய மரததில் அமர்ந்திருக்கும், வளைந்த வாயும், தெளிந்தகண்ணும், கூரிய உகிரும் உடைய வலிமிக்க கூகையே! நின்வாயினின்றும் வெளிவரும் நின் கடிய குரல்ஒலி, பறையோசைபோலப் பிறரை வருத்துவதாகும்; நினக்கு, ஆட்டிறைச்சியோடு நெய்யைக் கலந்து ஆக்கிய வெண்சோறும், வெள்ளெலியின் சூட்டிறைச்சியும் நிரம்பக் கொடுக்கின்றேன்; என்பால் குறையாத அன்புடையராய் வரும் எம் காதலர் வருகையினை எதிர்நோக்கித் துயில் ஒழிந்து கிடக்கும் இராக் காலத்தே, ஊரார் அஞ்சி விழித்துக்கொள்ளுமாறு நின் கடியகுரலைக் காட்டாதிருப்பாயாக" என அவன் கேட்குமாறு கூறி, இரவுக்குறி இடையீடுபடும் என்பதையும், அதனல் தான் வருநதவேண்டிவரும் என்பதையும் அறிவுறுத்தி, விரைந்து வரைந்துகொள்ள வழிசெய்தாள் எனப் பாடிய அப்பாட்டின் நயம் அறிந்து மகிழ்வோமாக!

"எம்மூர் வாயில் ஒண்துறைத் தடைஇய
கடவுள் முதுமரத்து உடனுறை பழகிய
தேயா வளைவாய்த் தெண்கண் கூருகிர்
வாய்ப்பறை அசாஅம் வலிமுந்து கூகை!
மையூன் தெரிந்த நெய்வெண் புழுக்கல்
எலிவான் சூட்டொடு மலியப் பேணுதும்;
எஞ்சாக் கொள்கை எம்காதலா வரல் நசைஇத்
துஞ்சாது அலமரும் பொழுதுநின்
அஞ்சுவரக் கடுங்குரல் பயிற்றதீமே."                (நற் : அ௩)

# எஅ. பெரும்பதுமனார்

பெரும்பதுமனார், அகப்புறப் பாடல்களை அழகாகப் பாடவல்லராவர்; மீளிப் பெரும்பதுமனார் என்பாரொருவர் உளர்; அவர் வேறு; இவர் வேறு.

இரவலரும், புரவலரும் வாழவேண்டிய இவ்வுலகில் அவ்விருவர்க்கிடையே இருக்கவேண்டிய உறவுநிலை இத் தகைத்தாதல் வேண்டும் எனப் புலவர் கூறும் பொருளுரை பொன்னேபோல் போற்றற்குரித்தாம்; நிறையப் பழுத்து நிற்கும் ஆலமரத்தை அடைந்து அதன் பழம் உண்டு மகிழும் பண்பினவாய பறவையினம், இம்மரத்துப் பழத்தை நேற்று உண்டோம்; ஆகவே, இன்றும் அம் மரத்திற்கே செல்லுதல் நன்றன்று என்று எண்ணுமல், நாளதோறும் அம்மரத்தையே அடைந்து, அதன் பழத் தையே உண்டு மகிழும். அதைப்போலவே, வள்ளியோன் ஒருவனை அடைந்து அவன் தரும் பரிசிற்பொருள் பெற்று வாழும் பாணர், கூத்தர் முதலாம் இரவலர்களும், தம் கைப்பொருள் குறையுந்தொறும், அவன்பாலே சென்று பரிசில் வேண்டிநிற்பர்; அவ்விரவலர் வாழ்வும் வறுமையும் தமக்கெனத் தனியே உடையரல்லர்; தம்மை விரும்பி வரவேற்று வழங்கும் வள்ளியோர் வாழ்வே அவர்கள் வாழ்வாம்; அவ்வள்ளியோர் வறுமையே அவர்கள் வறு மையாம் எனப் புலவா கூறும் பொருளாழம் பாராட்டற் குரியதாம்.

"கடவுள் ஆலத்துத் தடவுச்சினைப் பல்பழம்
நெருநல் உண்டனம் என்னது, பின்னும்
செலவு ஆனுவே களிகொள் புள்ளினம்;
அனையர் வாழியோ! இரவலர்; அவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்
உடைமை யாகும் அவர் உடைமை;
அவா இன்மையாகும் அவர் இன்மையே."

(புறம்: கககூ)

தமரொடு வாழின், தான் விரும்பும் காதலனைப் பெற்று மகிழ்தல் இயலாது எனத் தலைவி உணர்ந்தாளாக, அவளைத் தன்னூர்க்குக் கொண்டு சென்று மணக்கத் துணிந்து, அவள் தமர் அறியாவாறு தன்னுடன் கொண்டு செல்லலாயினன் தலைவன்; அவர்கள் இருவரும் உடன் செல்வதை வழியிற்கண்டார், "கையில் வில்லும், காலில் வீரக் கழலும் உடையனாய்க் காட்சியளிக்கின்றான் இவன்; கையில் வளையும், காலிற் சிலம்பும் ஒலிக்கச் செல்கிறாள் இவள; நல்லவராக, நன்னிலை உடையவராகத் தோன்றும் இவர்கள யாரோ? இத்தகையார், தம் உற்றார்தம் உறு துணையைப் பெறமாட்டாராய் இவ்வாறு இக்காட்டுவழி வந்து அந்தோ! வருந்துகின்றனரே!" என்றும், "இத் தகைய கொடிய காட்டுவழியில், மிகமிக மெல்லியளாய இந்நல்லாளை அழைத்துச்செல்ல இளகிய நெஞ்சுடையார் எவரும் எண்ணார்; இவளை முன்னே நடக்கவிட்டு அவட்குப் பாதுகாவலாய், அவள் பின்னழகை நோக்கி மகிழ்ந்து பின்செல்லும் இவ்விளையானுள்ளம் உண்மையில் இடி யினும் கொடிதே' என்றும் கூறி வருந்தினர். வழியிடைக் கண்டார், இவ்வாறு வருந்திக்கூறும் கூற்றமைய வந்துள்ள புலவர் பாக்கள் படிக்குந்தொறும் பேரின்பம் தருவனவாம்:

"வில்லோன் காலன கழலே; தொடியோள்
மெல்லடி மேலவும் சிலம்பே; நல்லோா
யார்கொல்? அளியர்!..................
வேய்பயில் அழுவம் முன்னி யோரே." (குறுந்: எ)

"வையெயிற்று ஐயன் மடந்தை முன்னுற்று
எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்
காலொடு பட்ட மாரி
மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே."
(நற்: உ)

தமிழகம், ஆரியரையும் அவர்கள் பழக்க வழக்கங் களையும், மிகப்பழைய காலத்திலேயே அறிந்திருந்தது; தமிழகத்து வாழ்க்கையினை ஆரியர் சங்ககாலத்திற்கு

முன்னரே மேற்கொண்டுவிட்டனர் ; அத்தகைய ஆரியருள் ஒருசாரார், கழைநட்டுக் கயிறுகட்டி, அக்கயிற்றின்மேல் நின்று ஆடிக் காட்டுவர் ; அவ்வாறு அவர் ஆடும் ஆட்டத்திற்கேற்ப பறையொலித்துக் காட்டுவர். இத்தகைய ஆடலை ஆரியக்கூத்து எனப் பெயரிட்டு அழைப்பர் ; இக் கூத்து உண்மையினை, "ஆரியக் கூத்தாடினாலும், காரியத்திலே கண்" என்ற பழமொழியும் வலியுறுத்தும். புலவர் பெரும்பதுமனார், ஆரியர் ஆட அடிக்கும் பறையொலி போல், வாகையின் வெண்ணெற்று ஒலிக்கும் என்று கூறி இக் கூத்துண்மையினைப் புலப்படுத்தியுள்ளார் :

"ஆரியர்,
கயிறாடு பறையின், கால்பொரக் கலங்கி
வாகை வெண்ணெற்று ஒலிக்கும்." (குறுந் : எ)

---

## எசுல. பெருமருதனுர்

மதுரை மருதன் இளநாகனுர், மதுரை மருதங்கிழார் என மருதன் பெயருடையார் பலராதலாலும், அவர் எல்லாரினும், இவர் யாதோ ஒருவகையான் பெருமையுற்றிருந்தமையாலும் இவர் மதுரைப் பெருமருதனுர் என அழைக்கப்பெற்றுளார். இவருக்கு இளநாகனுர் என்ற ஒரு மகனுர் உளர்; அவரும் இவரைப்போன்றே ஒரு நல்லிசைப் புலவராவர்; இவர் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுள்ளது.

வாடைக்காற்று வீசுவதால் கரும்புகள் பூக்கும் எனவும், கரும்புகள், வெண்ணிறப் பூக்கள் வரிசையாக மலர்ந்து தோன்ற விளங்கும் காட்சி, வேந்தர்க்கு வீசும் வெண்கவரி போன்றுளது எனவும், கார்காலத்தே மேகங்கள் குவியல் குவியல்களாய் இயங்குவதால், ஞாயிறு மறைப்புண்டு தோன்றும் காட்சி, அஞ்ஞாயிறு கண்களை மூடிமூடித் திறப்பதுபோலும் எனவும், கார்காலக் கழிவின் கண்தோன்றும் கூதிர்க்காலத்து இடையாமத்தே பனி மிகமிக அதிகமாம் ஆதலின், அக்காலப் பனியினைக் கால் கொண்ட பனி எனவும் புலவர் கூறுவது எத்துணைப் பொருத்தம் உடைத்தாம் என்பதையும், புலவர் அவற்றின் இயல்பினை நன்கு உணர்ந்தே கூறியுள்ளார் என்பதையும் அவற்றின் இயல்பினை அறியும் வாய்ப்புடையார் அனைவரும் உணர்வர்.

“வளரா வாடை உளர்புநனி தீண்டலின்,
வேழவெண்பூ விரிவன, பலவுடன்
வேந்துவீசு கவரியின் பூம்புதல் அணிய,
மழைகழி விசும்பில் மாறி ஞாயிறு
விழித் திமைப்பதுபோல் விளங்குபு மறைய
எல்லை போகிய பொழுதின் எல்லுறப்
பனிக்கால் கொண்ட பையுள் யாமம்.” (நற்: உசக)

# ௮௰. பெருமருதன் இளநாகனார்

இவர் பெருமருதன் என்பாரின் மகனார்; இளநாகனார் என்ற இயற்பெயருடையார்; மருதன் இளநாகனார் என்பாரின் வேறு அறிவித்தற்பொருட்டுப் பெருமருதன் இளநாகனார் என அழைக்கப் பெற்றுளார்.

தலைவன் விரைவில் வரைந்துகொள்ளானாகவே, தலைவிக்கு உள்ளத்துயர் மிக்கது; அதனால் அவள் உடல் நலமும் குன்றிற்று; தன் மகளின் உடல்நலக்குறையறிந்த தாய், அதற்காம் காரணம் யாதென அறிந்து அவள் வரைவிற்கு வழிசெய்தல் ஒழிந்து, அவளைப் புறத்தே போகாவாறு இல்லில் அடைத்து, அவள் நோய்தீர வெறியாட்டெடுக்கத் தொடங்கினாள். தாயின் செயலால் தலைமகள் துயர் மிக்கது, தாய்க்கு அறிவுவரச்செய்து தன் மணத்திற்குத் துணைபுரிவாரைத் தேடினாள்; தான் அதுகாறும் காத்த தினை அவள் கண்முன் நின்றது; தினை கதிர்வாங்க வேண்டிய காலத்தே வாங்காது காலம் தாழ்க்குமாயின், தம்மில் தவறு நிகழ்ந்ததாகவும், அதனாலேயே தினை கதிர் விட்டிலது எனவும் உணர்வர் அந்நில மக்கள்; அத்தவறு யாது என ஆராய்ந்து அறிந்து அதைப் போக்குவர். இதையுணர்ந்த தலைவி, அத்தினையை நோக்கி, "தினையே! நின்னை இதுகாறும் கிளி முதலாயின அழிக்காவாறு காத்தேன்; அவ்வாறு காத்து நின்றது, புனங்காவல் கருதி ஆங்கிருப்பதால் தலைவனைக் காணலாம் என்ற எண்ணத்தினாலேயேஆம் என்பதை நீ அறிவாய்; அவ் அன்பிற்கு வழிசெய்யாது அன்னை என்னை இற்செறித்துவிட்டாள்; இச்செயல் அறனன்று என்பதை அறிவாய்; அறிந்த வறியார் நாட்டில் கதிர்விட்டு வளர்தல் நினக்கு முறையன்று; மேலும் என்னை இற்செறித்துவிட்டமையால் நீயும் நின்னைக் காப்பாரை இழந்துவிட்டனை; அதனால் கிளி முதலாய பறவைகள் நின்னை அழிக்கத் தொடங்கிவிட்டன; இவ்வாறு எனக்குத் துயர் விளைத்ததோடு நினக்கும் கேடு சூழ்ந்துவிட்டாள் அன்னை; கேடு சூழ்ந்தாரைக்

கதிர்விடாது நின்று கெடுப்பதும் பழியன்று, ஆகவே தினையே! அன்னைக்கு அறிவுவருமாறு, சிறிதுகாலம் கதிர்விடுவதைத் தாழ்த்தி வைப்பாயாக! அதனால், நின்னைக் காத்த எனக்குத் துணை செய்தாயுமாவாய்; நினக்குக் கேடு சூழ்ந்தாரை ஒறுத்தாயுமாவாய்" என்று கூறி வேண்டினாள். இவ்வளவு பொருள்களும் ஒருங்கே தோன்றுமாறு, புலவர் பெருமருதன் இளநாகனார் பாடிய பாட்டொன்று நற்றிணைக்கண் இடம் பெற்றுளது.

"நன்மலை நாடனை நயவா, யாம் அவன
அளிபே ரன்பின் நின்குரல் ஓப்பி
நிற்புறங் காத்தலும் காண்போய! நீஎன
தளிரேர் மேனித் தொல்கவின் அழியப்
பலிபெறு கடவுள் பேணிக் கலிசிறந்து
தொடங்குநிலைப் பறவை உடங்குகுரல் கவரும்
தோடு இடங்கோடாய், கிளர்ந்து
நீடினை விளைமோ வாழிய தினையே." (நற் உருக)



# - பேயனார் -

## முதலிய ௩௰௯ புலவர்கள்



ஆசிரியர் :

புலவர், கா. கோவிந்தன், எம். ஏ,

கழக வெளியீடு : ௭௨௨

சங்கத் தமிழ்ப்புலவர் வரிசை - ௧௫

# பேயனார்

## முதலிய ௱௨௬ புலவர்கள்



புலவர், கா. கோவிந்தன், எம். ஏ.,
எழுதியது



திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,
திருநெல்வேலி. :: சென்னை-1.

# பதிப்புரை

காலம் இடையீடில்லா நுண்பொருள். அது, நல்லன அல்லன யாவும் செய்யவல்லது, நல்லன செய்தது பழையதான சங்ககாலம்; அக்காலந்தந்த நறுமணமலர்கள் பல; அம்மலர்களே சங்ககாலத்திய பொங்கருட் புலமையாளர்.

இவர்கள் செவ்விய சீரிய கூரிய தீஞ்சொல் வளன் நிறைந்த செந்தமிழ்ச் செய்யுளாம் தீந்தேன் தந்து அறிவுப்பசியாற்றிய அருந்திறலினராவர்.

இப்பெரியார் வரிசைகளுள், '**பேயனர்**' முதலவராக '**வேளாதத்தர்**' ஈற்றினராக முப்பத்தொன்பதின்மராவர். இவர்தம் வரலாறு கூறும் நூலுக்குப் **பேயனர்** எனப் பெயர் சூட்டிச் சங்கத் தமிழப் புலவர் வரிசையில் கக ஆவதாக வெளியிட்டுள்ளோம். இதனை அவர்கள் பாவின் நய ஆய்வோடு கெழும ஆக்கித்தந்தவர் **திரு. புலவர், கா. கோவிந்தன்** அவர்கள்.

தமிழக நன்மாந்தர்கள் இதனையும், இவ்வரிசையில் வெளிவந்துள்ள ஏனைய சங்கத் தமிழப் புலவர் வரிசை நூல்களையும் வாங்கிக் கற்று அறிவுத்துறையாம் பணைப்பணைத்த பெருஞ் செல்வத்தைப் பெற்று இன்புறுவார்களென நம்புகின்றோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

# உள்ளுறை

# பேயனார்



## தோற்றுவாய்

தமிழ் இலக்கியம் ஒரு கரைகாணாப் பெருங்கடலாம்; பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியம் போலும் நூல்களையும், பிற்காலத்தனவாய எத்தனையோ புராணங்கள், கோவை, உலா, அந்தாதி, மாலை போலும் நூல்களையும் எண்ணிக்காணின், அவற்றுட் பொதிந்துகிடக்கும் பாக்கள் எத்தனை எத்தனை ஆயிரங்களோ? அவற்றை ஆக்கியளித்த ஆசிரியப் பெருமக்கள் எத்தனை எத்தனை நூற்றுவரோ? தமிழனாய்ப் பிறந்த ஒவ்வொருவனும், இந்நூல்களைக் கற்றுத் தேர்தல் வேண்டுமாயினும், அவை யனைத்தையும் கற்றுத் தேர்தல் கனவினும் இயலாத காரியமாம்; ஆயினும், அவற்றைக் கல்லாது விடுதல், கழுவாயற்றதோர் விழுமிய குற்றமாம்; "கல்வி கரையில; கற்பவர் நாள்சில" என்ப. ஆகவே, அவற்றுள் தலையாய நூல்கள் சிலவற்றையாவது அறிந்து பயன்கோடல் வேண்டும். தமிழ் நூல்களுள், பத்துப்பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு, ஐம்பெருங்காப்பியம், ஐஞ்சிறுகாப்பியங்களாய நூல்கள் எல்லாம், ஏறக்குறைய ஒருகாலத்தே தோன்றியனவே ஆயினும், அவற்றுள் பத்துப்பாட்டு, எட்டுத்தொகையாகிய நூல்களையே, அறிஞர்கள், சங்க இலக்கியம் எனப் பெயரளித்துப் போற்றுவர்.

பத்துப்பாட்டு, எட்டுத்தொகையாகிய அந்நூல்களுள் அடங்கிய பழந்தமிழ்ப் பாக்கள், பண்டைத் தமிழகக் காட்சியினைப் பளிங்கெனக் காட்டும் படக்காட்சியாகும்:

அவற்றுட் புக்குக்காணவல்லார், அன்றைய தமிழ்நாட்டைத் தம் கண்ணெதிரே காணவல்லராவர்; அன்று, தமிழகம் அரசியல் நிலைகுறித்துப பிரிக்கப்பெற்ற பல்வேறு நாட்டுப் பிரிவினை, அவற்றிடைச் சிறப்புற்று விளங்கிய ஆறு, மலை, ஊர்கள், ஆங்காங்கு வாழ்ந்த பல்வேறு இனமக்கள், அவர்கள் மேற்கொண்டிருந்த தொழில் வகைகள், அம் மக்களிடையே வளர்ந்து வளங்கொழித்த மரம், செடி, கொடிகள், நீரினும, நிலத்தினும், நீலவானத்தினும் வாழ்ந்த உயிர் வகைகள், அன்றைய சிறறூர, பேரூர் நிலைகள், ஆஙகாஙகு நடைபெற்ற அககாலப பெரு விழாக்கள், அன்று வாழநத மக்கள் மனவளம் ஆக அனைத்தையும் அறிவிததது நிற்கினறன அப்பாக்கள். அப் பாக்களைப பாடிய புலவர்களால் நமக்கு அறிமுகமான பேரரசர்களும், குறுநிலத தலைவர்களும், கொடைவள்ளல் களும் பலராவர்; அத்தகையாருள் நூற்றுஎழுபத்தைவர் வரலாறு, அவர் பாக்களால் நமக்கு அறியக் கிடக்கின்றன; அப்பாக்களின் வழித்துணைபெற்று நாம் காணவல்ல ஊர்கள், அஞ்சில், அட்டவாயில், அம்பர், அரிசில், அரிமண வாயில், அரையம், அலைவாய், அழுந்தூர், அழும்பில், அள்ளூர், ஆமூர், ஆர்க்காடு, ஆலங்கானம், ஆலங்குடி, ஆலததூர், ஆவினன்குடி, ஆவூர், இடும்பில், இடைக்கழி நாடு, இடைக்காடு, இடையாறு, இரணியமுட்டம், இருந்தையூர், ஈர்ந்தூர், ஈழம், உகாய்க்குடி, உம்பற்காடு, உரோடகம், உறத்தூர், உறந்தை, ஊணூர், எயிற்பட்டினம், எருமைநாடு, ஏரகம், ஐயூர், ஒக்கூர், ஒல்லையூர், கச்சி, கச்சிப்பேடு, கடம்பின் பெருவாயில், கரும்பனூர், கருவூர், கழாத்தலை, கழார், கழுமலம், கள்ளில், காப்பியாறு, காமூர், காவிரிப்படப்பை, கானப்பேரெயில், கிடங்கில், கிள்ளி மங்கலம், குடநாடு, குடநதை, குடவாயில், குமட்டூர், குழூமூர், குறும்பூர், குன்றூர், கூடல், கூடலூர், கொடுகூர், கொண்கானம், கொற்கை, கோடிக்கரை, கோவலூர், கோவூர், சாய்க்காடு, சிறுகுடி, சிறைக்குடி, செங்கண்மா, செந்தில், செருப்பாழி, செல்லூர், சோணாட்டுப்பூஞ் சாற்றூர், தகடூர், தண்கால், தண்டாரிணியம், தலையாலங்

கானம், தாமல், திருப்போர்ப்புறம், துளுநாடு, துறையூர், தேமுதுகுன்றம், தேனூர், தொண்டி, நாஞ்சில், நாலூர், நான்மாடக்கூடல், நியமம், நீடூர், நெய்தலங்கானல் நெல்லினூர, நேரிவாயில், பருவூர், பல்குன்றக்கோட்டம், பவத்திரி, பாடலி, பாமுளூர, பாரம், பிசிர், பிடவூர, புகார், புனல்சீர்நாடு, பூழி, பெருங்குன்றூர், பொறையாறு, போஒர, மதுரை, மருநகூர்பபட்டினம், மழபுலம, மாங்காடு, மாங்குடி, மாடலூர், மாந்தை, மாவிலஙகை, மிழலே, முககாவனுடு, முசிறி, முத்தூறு, முளளூர, மோகூர், மோசி, வஞ்சி, வல்லம, வலஅர, வாகைபபறந்தலே, வாட்டாறு, வியலூர, விளஙகில், விரைமுன்துறை, வெண்ணி, வெளியம, வெளளூர், வேமபற்றூர, வேமபி, வேலூர், வேளூர, முதலியனவாம அயிரி, ஆனபொருநை, கங்கை, காரி, காவிரி, சிலம்பாறு, சேயாறு, சோணே, பஃறுளி, பெண்ணேயாறு, பெரியாறு, வையை முதலிய ஆறுகளேயும், அதலேக்குன்றம், அயிரைநெடுவரை, இமயக் குன்று, ஏழில்நெடுவரை, கவிரம், குடமலே, குதிரைமலே, குமரிக்கோடு, குருகொடுபெயர் பெற்றமலே, கொலலி, கோடை, நவிரம், நன்றூ, நேரி, பரஙகுன்று, பறம்பு, பொதியில், மாலிருங்குன்றம், முதிரம், வேஙகடம முதலாய மலேகளேயும் நமக்கு அறியக் காட்டுகின்றன அப்பாக்கள். அதியர், அருவாளர், ஆரியர், ஆவியர், ஒளியர், ஓவியர், கொங்கர், கோசர், தொண்டையா, நந்தர், பரதவர், பூழியர், பொதுவர், மழவர், மோரியர், யவனர், வடுகர், வேளிர் முதலாம் பலவேறு இனததார் தம் வரலாறுகளேயும் விளங்க உரைக்கின்றனர் அப்புலவாகள.

இவ்வளவு வரலாறுகள் விளங்கத் துணைபுரியும் பத்துப்பாட்டு எட்டுத்தொகையாகிய நூல்களுள் அடங்கிய பாக்கள், இரண்டாயிரத்து முநநூற்று அறுபத்தொன் பதாம், இவ்வளவு பாக்களேயும் பாடிய புலவாகள் எண்ணிக்கை, நானூற்று அறுபத்து எட்டு; இவருள், அக்கால அரசர்தம் வரலாற்றினே விரித்துரைத்தார், நூற்று நாற்பத்து நால்வரே.

இவ்வாறு பெருநிதிப் புதையலாய் விளங்கும் அப் பாக்களை அறிந்து பயன் கோடற்குமுன், அப்பாக்களைப் பாடிய புலவர்கள்தம் வரலாறுகளை அறிந்துகோடல் அமைவுடைத்தாகும். வரலாறுவிளங்கத் துணைபுரிந்த புலவர்கள், தம் வரலாறு உரைவழி வகுத்தாரல்லர், அவர் வரலாற்றினை அறியப் பெருந்துணையாய் நிற்பன, அவர்தம் பெயரும், அவர் பாடிய பாக்களுள் சிலவுமேயாம் அப் புலவர்க்கமைந்த பெயர்களை நோக்கின், இயற்பெயர் இதுவென உணர்த்தி நின்றன சில, தந்தை பெயர் தெரிய வந்தன சில; தந்தை பெயரொடு தம்பெயரும் உணர வந்தன சில, உறுப்பான் அமைந்தன சில; ஊரான்வந்தன சில; ஊரும், பெயரும் உணரவந்தனவும், ஊரும் தொழி லும் உணரவந்தனவும், ஊரும் பெயரும், உற்ற தொழிலும் ஒருங்குணர வந்தனவும் சில, அவர் பாட்டிடை விளங்கும் அழகிய உவமையும், அரிய தொடருமே பெயராய் அமைந்தன சில, ஆதன், ஆந்தை, எயினன், கடுவன், கண்ணன், கீரன், குமரன், கொற்றன், தேவன், நாகன், பூதன் போலும் பெயர்களைப் பெற்றுவந்தன சில, ஆக, இவ்வாறு, அவர் வரலாற்றின் ஒரு பகுதி உணரத் துணை புரிவனவாதல் விளங்கும். இப்புலவர்கள்தம் வரலாறுகளை நோக்கியக்கால், அவரிடையே அரசராய் வாழ்ந்தார் சிலரும், உழவு, நெசவு முதலாம் பல்தொழில் புரிந்து பயன்தருவார் சிலரும், வணிகராய் வாழ்ந்து வளங்கொழித் தார் சிலரும் விளங்கக் காணலாம்

இவ்வாறு வாழ்ந்து வழிகாட்டிகளாய் விளங்கிய புலவர் களின் வரலாறுகளை, அவர் பெயர்த்துணையும் பாக்கள் துணையும்கொண்டு அறிவிக்க முன்வந்து, தனிநூலாக வெளி யிடத்தக்க விரிந்த வரலாறு உடையராகிய, கபிலர், பரணர், நக்கீரர், ஔவையார் ஆகியோர் வரலாறுகளைத் தனித் தனியே வெளியிட்டு, ஏனையோர் வரலாறுகளையும், "பெண் பாற்புலவர்கள்" "உவமையாற் பெயர் பெற்றோர்," "காவலபாவலர்கள்," "கிழார்ப் பெயர் பெற்றோர்," "வணிக ரிற்புலவர்கள்," "மாநகர்ப்புலவர்கள்-1, 2, 3," "உறுப்

பாலும் சிறப்பாலும் பெயர் பெற்றோர்," "அதியன் விண்ணத்தனார், குட்டுவன் கண்ணனார்" என்ற பல்வேறு தலைப்பின்கீழ் விரித்துரைத்து விட்டு, எஞ்சிநின்ற முப்பத்தொன்பது புலவர்கள் வரலாறுகளை உரைக்கும் இந்நூற்கு, அவருள், முதற்கண் நிற்பவராய பேயனார் பெயரே, பெயராக அமைந்துளது.

கூறிய நூல்கள் பதினாறினும், முதலநூலில், ஒருபுலவர் வரலாறும், 235 பாக்களின் பண்பும, இரண்டாம் நூலில் ஒரு புலவர் வரலாறும், 85 பாக்களின் பண்பும, மூன்றாவது நூலில், ஒருபுலவர் வரலாறும, 37 பாக்களின் பண்பும், நான்காவது நூலில், ஒருபுலவர் வரலாறும், 59 பாக்களின பண்புப, ஐநதாவது நூலில், 26 புலவாகள வரலாறும, 101 பாக்களின் பண்பும, ஆறுவது நூலில 22 புலவர்கள் வரலாறும், 50 பாக்களின் பண்பும, ஏழாவது நூலில் 28 புலவர்கள வரலாறும், 142 பாக்களின பண்பும, எட்டாவது நூலில 41 புலவாகள் வரலாறும, 159 பாககளின் பண்பும, ஒன்பதாவது நூலில், 28 புலவாகள் வரலாறும், 78 பாககளின் பண்பும, பததாவது நூலில, 30 புலவாகள் வரலாறும, 90 பாக்களின் பண்பும, பதினோராவது நூலில, 30 புலவாகள் வரலாறும, 104 பாககளின் பண்பும பன்னிரண்டாவது நூலில், 50 புலவாகள் வரலாறும், 92 பாக்களின் பண்பும, பதின்மூனறுவது நூலில், 25 புலவாகள் வரலாறும, 83 பாககளின் பண்பும, பதினன்காவது நூலில், 65 புலவர்கள வரலாறும், 548 பாககளின் பண்பும், பதினைநதாவது நூலில், 80 புலவர்கள வரலாறும் 128 பாக்களின் பண்பும், பதினாறுவது நூலில், 39 புலவர்கள் வரலாறும், 188 பாக்களின் பண்பும, ஆக, 468 புலவர்களின் வரலாறும், 2178 பாக்களின பண்பும் ஓரளவு அறிநது கூறபபட்டுள்ளன.

---

# க. பேயனார்

பேயனார் என்னும் பெயருடையராய இப்புலவர், முல்லை வளங்களை வனப்புறப் பாடுதலில் வல்லவராவர்; ஐங்குறு நூற்றின் ஐந்தாம் நூறாகிய முல்லைத்திணையைப் பாடியவர் இவரே; குறுந்தொகைக்கண் வந்துள்ள மூன்று செய்யுளும், நெடுந்தொகைக்கண் காணப்படும் செய்யுளும அம்முல்லைத் திணைப்பொருள பற்றியே பாடப் பெற்றுளளன.

நாடுகாவல், நன்பொருள் ஈட்டல் முதலாயின கருதித தலைமகன் பிரிந்து போதலும், பிரிந்து சென்றான் செல்லுங் கால் கூறிய உரையினைத் தேறி, தலைமகன் ஆற்றியிருத் தலும, வினைமுடிதது வருவான் வழியின் இன்பங்கண்டு வருநதிக கூறுவனவும் முல்லைத் திணைக்குரியவாம் இவற் றின் இயல்புகளை யெல்லாம் இனிதெடுத்துப் பாடியுள்ளார் புலவா. அவாகாட்டும் முல்லை நிலக்காட்சிகள் பலவாம்; அவை அனைத்தும் அறிந்து மகிழ்தல் எளிதில் ஆகாது; அவற்றுள் அங்கொன்றும், இங்கொன்றுமாகக் கண்டு களித்துச் செல்வோமாக.

பொருள் குறித்துப்போகும் தலைவன், கார்காலத்தொடக் கததே வருதல் உண்மை, ஆகவே கவலாது இருக்க எனக் கூறிச் சென்றான்; அவன் உரையினை தேறி, அவன் மனைவி யும் ஆறறியிருந்தாள் அவன் கூறிய பருவமும் வந்துவிட் டது, ஆயினும் அவன் வநதிலன்; அதனால் அவள் வருததம் மிகுநதது, வருந்தியிருப்பாள் முன்வநது நின்றான் பாணன்; அவள் துயர் போகுமாறு சில உறுதிகளைக் கூறத் தொடங் கினான்; அவன் பால், "பாண! சென்ற நின் தலைவர், என்னை மறநது விட்டார், என்பால் அவருக்கு அன்பும் இல்லை; ஆகவே, அவர் என்பொருட்டு இவண்வாரார்; அதற்காகவும் யான் வருந்துகின்றேனல்லேன்; தாம் கூறிய சொல் பொய்த்துப் போதலைக் கண்டும் அவர் நாணாமை கண்டே யான் பெரிதும் வருந்துகின்றேன்" என்று கூறித் தன் துயரினும், தலைவன் சொற் பிழைத்தலால் உண்டாம்

